





# அவனுக்கு ஒவ்வொரு நாளும் இன்க்ரிமின்* கொடுங்கள்

## தீவிரமான பசியைத் தூண்டவும், படிப்படியாக எடையை அதிகரிக்கவும்

இன்க்ரிமின்* செரி பழத்தின் மணம் நிறைந்தது. l-லைசின் என்ற இன்றியமையாத பொருள் அடங்கியது. இந்தப் பொருள் உடல் நலத்திற்கு உகந்த பசியைத் தூண்டி, உணவின் முழுப்பயனையும் சிறந்த முறையில் பெற உடலுக்கு உதவுகிறது. இன்க்ரிமின்* சாப்பிட்டு வந்தால் உங்கள் குழந்தை வயிறாரச் சாப்பிடுவான். அவனுடைய எடையும் படிப்படியாக அதிகரிக்கும். ஒவ்வொரு நாளும் அவனுக்கு இன்க்ரிமின்* கொடுங்கள்— அவன் மனமாரச் சாப்பிடுவதையும் வளர்ச்சியடைவதையும் கண்டு மகிழுங்கள் !



இன்க்ரிமின்* வளரும் குழந்தைகளுக்கெனவே உண்டாக்கப்பட்ட ஒரு லெடர்லி தயாரிப்பு.

**இன்க்ரிமின்*...**
**வளர்ச்சிக்கு**
**மிகவும் சிறந்தது**

நாள் ஒன்றுக்கு:
இன்க்ரிமின்* ட்ராப்ஸ்: 10-20 துளிகள்.
இன்க்ரிமின்* ஸிரப்: ஒரு தேக்கரண்டி.

* ரிஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்

Lederle லெடர்லி டிவிஷன். ஸயனமிட் இந்தியா லிமிடெட் CYANAMID

CMCL-28 TAM



# கல்கி

பராபவ புரட். 30 ○ அக். 16



## நினைவுத் திரையில்

ஓர் ஏழை உபாத்தியாயரின் மனைவி தன் தோழியிடம் சொல்கிறாள்:

எழுத்தறி வித்தவன் இறைவனு மென்று
எவனோ ஒருவன் எழுதிவிட்டான்
எழுத்தறி வித்திடும் ஏழை உபாத்தியாயர்
இன்று படும்பாட்டைக் கேளடியோ!
கூலிவேலை செய்வோர், — ஆலைத் தொழிலாளர்
குறைதீர 'ஸ்டிரைக்'குண்டு உரிமையுண்டு
கேலிப் பிழைப்பான வாத்தியார் வேலைக்குக்
கேள்விமுறை ஏதும் இல்லையடி!
அட்டெண்டன்ஸ் ரிஜிஸ்தரில் அத்தனை பேருமே
ஆஜரில் லாவிட்டால் மோசமடி
சுற்றுவார் ஊரெல்லாம் சுந்தரம், சந்துரு,
சுப்ப னையுங்கெஞ்சிக் கூப்பிடுவார்!
ஊருக் கிளைத்தவர் வாத்தியார் தானிங்கு
உண்டான வேலைக்கு ஒத்தபுள்ளி
ரேஷன், ஜென்ஸஸ் என்று லீவிலேல் லாமவர்
வேகாத வெய்யிலில் சுற்றவேணும்
அட்டிகை, பொற்காப்பு, ஆரணிப் பட்டாடை
அழகாய் உடுத்திட ஆசையில்லை
கட்டிய காதலர் கவலை யொழிந்த தென்னைக்
கண்ணினால் பார்த்தாலே போதுமடி!

- காட்டூர் கண்ணன்
கல்கி, ஆகஸ்டு 11, 1946

''கல்கி''யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



மலர் 26 □ இதழ் 11



# நிலவரி — காங்கிரஸும், சுதந்திரக் கட்சியும்

மண் விசேஷம் என்றுதான் சொல்ல வேண்டும். தமிழக சுதந்திரக் கட்சியின் தலைவர் திரு சா. கணேசன் அவர்களின் கோட்டையாகத் திகழும் காரைக்குடி தொகுதியைக் கைப்பற்ற வேண்டும் என்ற ஆசையில் கூடிய தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம், காரைக்குடி தொகுதி வாக்காளர்களைக் கவர்ந்ததோ என்னவோ, சுதந்திரக் கட்சியின் முக்கியமான கொள்கையை ஏற்றுக்கொண்டு, அக்கட்சிக்கு மற்றொரு வெற்றியைத் தந்து விட்டது! வாழ்க, காரைக்குடி! வாழ்க திரு சா. கணேசன்!

சுதந்திரக் கட்சி தோற்றுவிக்கப்பட்ட சூழ்நிலையையும் காரணத்தையும் நேயர்களுக்கு நினைவுபடுத்த விரும்புகிறோம். நாகபுரியில் கூடிய காங்கிரஸ் கூட்டுப் பண்ணை — நில உச்சவரம்புத் தீர்மானங்களை நிறைவேற்றியது. காங்கிரஸ் உறுதியாகக் கம்யூனிஸ பாணியில் செல்லத் தீர்மானித்து விட்டது என்பதை இவை தெளிவுபடுத்தின. விவசாயத்தின் தன்மையையும், கம்யூனிஸ நாடுகளில் கூட்டுப் பண்ணைகள் அடைந்த தோல்வியையும் நன்கு உணர்ந்த பெரியோர்களும், விவசாயப் பெருங்குடி மக்களும் காங்கிரஸுக்கு எதிராகக் குரல் கொடுக்கச் சுதந்திரக் கட்சியைத் தோற்றுவித்தனர். சுதந்திரக் கட்சி, தேசமெங்கும் புயல்போல் பரவிப் பெரும் எழுச்சியை உண்டாக்கிற்று. அது தோற்றுவிக்கப்பட்ட சிறிது காலத்திலேயே 1962-ம் வருடத்திய தேர்தல் நெருங்கியது. அந்தத் தேர்தல் விஞ்ஞாபனத்தில் ராஜாஜி பாரத நாட்டு விவசாயப் பெருங்குடி மக்களுக்கு உருப்படியான ஒரு நன்மை செய்ய வேண்டும் என்று கருதி நிலவரியை நீக்கும் அம்சத்தைச் சேர்த்தார்.

அதைப் பற்றி விளக்கும் சந்தர்ப்பங்களில் எல்லாம், 'நிலத்தில், சேற்றிலும் மழையிலும் நின்று அரும்பாடுபட்டு, மக்கள் சமுதாயம் வாழ, அன்னையைப் போல் உணவு தானியத்தை உற்பத்தி செய்தளிக்கும் விவசாயிக்கு நன்றி தெரிவிப்பதற்குப் பதில் வரி விதிப்பது கொடுமை' என்று மகாத்மா காந்தி தம்மிடம் அடிக்கடி பேசி இருப்பதாக ராஜாஜி கூறி யிருக்கிறார். 'இதுவே இப்போது சுதந்திரக் கட்சியின் முக்கிய அம்சமாக விளங்குகிறது' என்று கூறி யிருக்கிறார்.

ஆனால் காங்கிரஸ்காரர்கள், அப்போதெல்லாம் இந்த அம்சத்தை எள்ளி நகையாடிப் பரிகசித்திருக்கிறார்கள். ''சுதந்திரக்கட்சி பதவிக்கு வந்தால் நிலவரியை நீக்கிவிடுமாமே, இது நடக்கிற காரியமா?'' என்று ஏளனமாகப் பேசி யிருக்கிறார்கள். அப்படிப் பேசியவர்கள் எல்லாம் இன்று காரைக்குடி மகாநாட்டில் தங்கள் நிலையை மாற்றிக் கொண்டு விட்டார்கள். அது மட்டுமல்ல; வரி போடுவதில் 'இந்திரஜித்தர்' என்று பெயரெடுத்த திரு டி. டி. கே. அவர்களே நிலவரி நீக்கத்துக்குப் பேராதரவு தந்து, அது காரிய சாத்தியமே என்று நிரூபிக்கும் வகையில் பேசி யிருக்கிறார்!

இதெல்லாம் அந்தரங்க சுத்தத்துடன்தான் கூறப்படுகிறதா? அல்லது நீரில் மூழ்கிக் கொண்டிருக்கிறவன், கரையேற எந்தத் துண்டு மிதப்புக் கிடைத்தாலும் பற்றிக் கொள்ள முயல்வது போல், அடுத்த தேர்தலில் ஜெயிக்க எதைச் செய்தால், எதைச் சொன்னால் மக்கள் ஏமாறுவார்கள் என்று காங்கிரஸ் நோட்டம் பார்ப்பதைக் குறிப்பிடுகிறதா?

நில உச்சவரம்புச் சட்டம், கூட்டுப் பண்ணை, சர்க்கார் கொள்முதல், கண்ட்ரோல்கள் — ஆகிய ஆயிரம் தடைகளைப் போட்டு விவசாயியை நசுக்கி விட்டு, நிலவரியை ரத்து செய்யப் போவதாகச் சொல்வதில் மட்டும் விவசாயி பெருமகிழ்ச்சி யடைந்து தங்களை ஆதரித்து

விடுவான் என்று காங்கிரஸார் எதிர்பார்க்கிருர்களா ?

நிலவரியை ரத்து செய்ய வேண்டும் என்று கூறும் இதே மகாநாடு, இப்பொழுது அரையும் குறையுமாக இருக்கும் உணவுதானிய வியாபாரத்தைத் தேர்தலுக்குப்பின் சர்க்காரே முழுவதும் மேற்கொள்ள வேண்டும் என்று கூறுகிறது. அப்போது விவசாயியின் வீட்டில் மணி நெல்கூட வைக்காமல் சுரண்டி எடுத்துக் கொண்டு போய்விட, அவன் ரேஷன் கடைகளில் புழுத்த அரிசியை வாங்கிச் சாப்பிட வேண்டியிருக்கும். உற்பத்தியாளருக்கு நியாய விலை கிடைக்காமல் போவதும், பொருள் வாங்குவோருக்கு விலை உயர்வு ஏற்படுவதும் தான் சர்க்கார் வியாபாரம் என்பதை நாம் நன்கு பார்த்துவிட்டோம். நிலவரி நீக்கத்தால் சர்க்கார் வருமானத்தில் ஏற்படும் குறைவைச் சர்க்கார் வர்த்தகத்தால் ஈடு செய்து விடலாம் என்று கூறுவதிலிருந்தே அரிசி விலை ஏகத்தாறுக உயரும் என்பது நிச்சயமாகிறது.

இன்னெரு விஷயமும் கவனிக்க வேண்டும். நிலவரியை அடிப்படையாக வைத்தே அதன் விகிதாசாரமாகப் பாசனத் தீர்வை, கல்வித் தீர்வை, மருத்துவத் தீர்வை முதலியன விதிக்கப்படுகின்றன. நிலவரி என்றே ஒன்று இல்லாவிடில் இந்தத் தீர்வைகளை இஷ்டப்படி உயர்த்தி இழப்பை ஈடுகட்டிக்கொள்ள முடியும். இப்படிச் செய்யும்பட்சத்தில் நிலவரி நீக்கம் என்பது வெறும் பித்தலாட்டம் ஆகும். இவ்விஷயமாக காங்கிரஸ் மௌனம் சாதிப்பது குறிப்பிடத் தக்கது.

சுதந்திரக் கட்சியோ, விவசாயிகளுக்கு எவ்விதத் தடைகளும் விதிக்காமல் அவர்கள் தீவிரமாக உற்பத்தியில் ஈடுபட எல்லா வசதிகளும் பெற வாய்ப்பளித்து, உற்பத்தி செய்த பொருளை எவ்வித கட்டுப்பாடுமின்றி விற்கவும் வாய்ப்பளித்து, பின்னர் நிலவரியையும் ரத்து செய்யத் திட்டமிடுகிறது.

இதுதான் காங்கிரஸின் நிர்வாகத் திட்டத்துக்கும் சுதந்திரக் கட்சியின் திட்டத்துக்கும் உள்ள அடிப்படை வித்தியாசம்!

விவசாயிகள் தாங்கள் உற்பத்தி செய்த தானியத்தை எவ்வித விலைக் கட்டுப்பாடும் இன்றி விற்க அனுமதிக்கப்பட்டால் விலையை ஏராளமாக உயர்த்த மாட்டார்களா என்ற கேள்வி எழும்.

இடைபூறுகளற்ற சுதந்திர சமுதாயத்தில் உற்பத்தி அபரிமிதமாகப் பெருகும். பெருகிய தானியத்தைச் சீக்கிரம் விற்கவேண்டும் என்ற போட்டி, வியாபாரத்தில் ஏற்படும். வியாபாரத் துறையில் போட்டி இருந்தால் வாங்குபவனுக்குச் சகாயமாக விலை குறைந்தே தீரும். அதனுல் நல்ல பயன் அடைபவன் வாங்குபவனே!

விவசாயிகள் உணவு தானியத்தைப் பதுக்கி வைத்து விலை உயர்கிறதா என்று காத்திருப்பார்கள் என்று மற்ருெரு வாதம் எழும். உணவு தான்யத்தை நீண்ட நாள் பதுக்கி வைக்க முடியாது. சீக்கிரம் கெட்டு விடக்கூடியது. இன்று அரசாங்கம் ரேஷனில் கொடுக்கும் புழுத்த அரிசியைப் போலும் கோதுமையைப் போலும் தனிநபர் ஒருகாலும் விற்க முடியாது. அப்படி விற்ருல் போட்டியுள்ள சந்தையில் அவனிடம் போய் யாரும் வாங்கமாட்டார்கள். ஆகவே பதுக்கி வைப்பார்கள் என்று சொல்லுவதில் பொருள் இல்லை.

உண்மையோ, ஏமாற்றுதலோ ஏதோ ஓரளவில் சுதந்திரக் கட்சிக் கொள்கையை காங்கிரஸ் ஸ்வீகரித்துக்கொள்ளத் தொடங்கியதிலிருந்தே சுதந்திரக் கட்சிக் கொள்கையின் பலத்தையும், காங்கிரஸ் கட்சி யடைந்து வரும் பலவீனத்தையும் அறியலாம்.

சுதந்திரக் கட்சியின் கொள்கைகளைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளத் தொடங்கிய பின் சுதந்திரக் கட்சி வேண்டாமோ என்று சிலர் நினைக்கலாம்.

சுதந்திரக் கட்சியின் கொள்கைகளைக் காங்கிரஸ் ஏற்றுக் கொண்டதாலேயே முன்னிலும் அதிகமாகச் சுதந்திரக் கட்சியைப் பலப்படுத்த வேண்டும் என்று நாம் கருதுகிறோம். அப்போதுதான் காங்கிரஸ் அக்கொள்கைகளை நிரந்தரமாக நிறைவேற்றப் பார்க்கும். இல்லையேல் மயான வைராக்யம் என்று சொல்வது போல் தேர்தல் கால மனமாற்றமாக இருந்து அதோடு முடிந்துவிடும்.

# கிளர்ச்சியா? புரட்சியா?

**வ**ட இந்திய ராஜ்யங்களில் பல இடங்களில் தொத்து நோய் போல் பரவி வரும் கல்லூரிமாணுக்கர்களின் ஆர்ப்பாட்டங்களும், ரகளைகளும், போலீஸ் தடியடிகளும், கண்ணீர் புகைப் பிரயோகங்களும், துப்பாக்கிச் சூடும் நாட்டு நலனில் கருத்துக் கொண்ட எல்லாருக்கும் கவலை அளிக்கின்றன. மாணவர்கள் நடத்துவது கிளர்ச்சியா அல்லது புரட்சியா, அவர்களது கல்லூரிப் படிப்புக்கும் இந்த ஆர்ப்பாட்டங்களுக்கும் ஏதேனும் சிறிதளாவது சம்பந்தமுண்டா என்றெல்லாம் எண்ணி விசனமுற வேண்டியிருக்கிறது.

கிளர்ச்சிகள் எல்லாம் கல்லூரி மாணவர் நிலையில்தான் நடைபெறுகின்றன. இதுவே கவனிக்கத் தக்க முதல் அம்சம். போதனுமுறை குறைபாடுகள், பேராசிரியர் மீது குற்றச்சாட்டுகள், உப அத்யட்சகர் ராஜிநாமா செய்ய வேண்டும் என்ற கோரிக்கை — இது மாதிரி எது வேண்டுமானுலும் கிளர்ச்சிகளுக்குக் காரணமாக இருக்கிறது. அல்லது காரணமே இல்லாமல் கூட இவை நடைபெறுகின்றனவோ என்னவோ? ஆர்ப்பாட்டங்கள் தொடங்கிய உடனே, கலவரங்களின் போக்கும் ஏறக்குறைய ஒரே ரீதியில் தான் அமைகிறது. பஸ்களை எரித்தல், போலீஸ் ஸ்டேஷன்களுக்குத் தீவைத்தல், கல் வீச்சு, ரயில் பெட்டிகளைக் கொளுத்துதல் — இப்படிப் பல நிகழ்ச்சிகள் — இவற்

றைத் தொடர்ந்து போலீஸ் துப்பாக்கிப் பிரயோகம், சில சாவுகள், மாணவர்களில் சிலரும் மாணவரல்லாதார்களுள் சிலரும் மரண மடைதல் — இவற்றின் விளைவாகக் கிளர்ச்சி கலவரமாக விரிவடைவது — இவை தான் காணப்படும் காட்சிகள். வட இந்தியாவிலிருந்து ஆந்திராவுக்கும் இவை பரவி வருவதாகத் தோன்றுகிறது.

கல்வி, கல்லூரி சம்பந்தப்பட்ட வரையில் உண்மையாகவே மாணவர்களுக்கு அதிருப்தி, குறைபாடுகள் இருக்குமேயானால் சம்பந்தப் பட்ட முதல்வர்களோ, உப அத்யட்சகர்களோ, மந்திரிகளோ மாணவர் தலைவர்களுடன் பேசித் தீர்த்து வைப்பது சாத்தியமாகவே இருத்தல் வேண்டும். பொது அமைதிக்குப் பங்கம் விளையும்போது கண்டிப்பு நடவடிக்கைகள் அவசியமேயாகும். அமைதியைக் காப்பதும், பொதுச் சொத்துக்கள் சேதமாகாமல் பார்த்துக் கொள்வதும் அவசியமான நடவடிக்கைகளே.

ஆனால் அரசியல்வாதிகளின் சம்பந்தமும் பக்க பலமும் உறுதுணையாக நின்று கிளர்ச்சிகள் நடத்தப்படுமேயாயின் நிலைமையைச் சமாளிப்பது கஷ்டமாவதுடன் நாட்டின் நன்மைக்கே ஊறு விளைவிக்கக் கூடும்.

அனுபவப்பட்ட கிளர்ச்சித் தலைவர்கள் சிலர் மாணவர் இயக்கத்துட் புகுந்து கிளர்ச்சிகளை நடத்துவதாக ஆட்சி வட்டாரங்களில் சொல்லப்படுகிறது. உண்மையிலேயே அவ்வாறு இருப்பின் நிலைமையை உறுதியுடனும் தீரத்துடனும் சமாளித்தே ஆக வேண்டும்.

# என்ன சேதி?

- தேர்தல் ஞானோதயம்
- சமயப் பிரசாரத்துக்குப் பயிற்சி
- பாங்கியின் வைர விழா
- "குரு கீர்த்தன ரத்னம்"
- தியாகியின் மறைவு

தேர்தல் செலவுகளைக் குறைக்கவும் லஞ்சம் முதலிய ஊழல்களை ஓரளவுக்காவது ஒழிக்கவும் தலைவர் ராஜாஜி வெகு நாட்களாகவே ஒரு யோசனையைச் சொல்லி வந்திருக்கிறார். வோட்டுச் சாவடிகளுக்கு வாக்காளர்கள் சென்று வாக்குச் சீட்டைப் பெட்டியில் போட்டுவிட்டு வருவதற்குப் பதிலாக வோட்டுச் சாவடிகளே வாக்காளர்கள் வீடுகளுக்குச் சென்று வோட்டுக்களைச் சேகரிப்பது நல்ல முறை என்பது அவருடைய ஆலோசனை. அதாவது வீடு வீடாக வோட்டு வண்டி சென்று வாக்குச் சேகரிக்க வேண்டும் என்று கூறி வந்திருக்கிறார். இதைப் பற்றி ஆளும் கட்சியினரோ, தேர்தல் நிர்வாக அதிகாரிகளோ இதுவரையில் எவ்வித கவனமும் செலுத்தினதாகத் தெரியவில்லை. ஆனால் இப்போது காங்கிரஸ் அக்ராசனர் திரு காமராஜர் இதே கருத்தைத் தமது சொந்தக் கருத்துப் போலக் கூறி, இம்மாதிரி செய்வது நல்லது என்று பேசியிருக்கிறார். எதிர்க் கட்சியினர் சொல்லிய ஒரு கருத்தைத் தாம் ஏற்றுக் கொண்டுவிட்டதாகச் சொன்னால் தமக்குக் கௌரவம் குறைந்துவிடக் கூடும் என்பதாலோ என்னவோ, இதைப் பற்றிச் சுதந்திரக் கட்சியினர் பல தடவைகளில் வற்புறுத்தியுள்ளதைச் சூசனையாகக்கூட அவர் குறிப்பிடவில்லை. எதிர்க் கட்சிகளின் கருத்துக்களைத் தாங்களே ஏற்றுக்கொண்டு தேர்தல் பிரசாரங்களில் எதிர்க் கட்சிகளின் பலத்தைக் குறைக்கப் பார்ப்பது அரசியல் கட்சிகள் கையாளும் முறைதான். அதெப்படி ஆயினும் வோட்டுச் சாவடிகள் வாக்காளர்களிடம் செல்வது நேர்மையான தேர்தலுக்கு வழி செய்யும் என்பதால் வரவேற்க வேண்டியதே. வரவேற்கத் தக்க விஷயத்தைச் சொன்னதற்காக திரு காமராஜைப் பாராட்டுகிறோம்.

சென்னையிலும் சுற்றுப்புறங்களிலுமுள்ள கோவில் தேவஸ்தானங்களின் ஆதரவின் மயிலையில் ஹிந்து சமயப் பிரசார போதனா நிலையம் தொடங்கப்பட்டிருப்பதை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம். நம்முடைய மதத்தின் மேன்மையை நம்முடைய மக்களுக்கே உணர்த்தி, ஆலய வழிபாடுகளின் தத்துவங்களையும் விளக்கி வைக்க வேண்டிய பரிதாபகரமான நிலையில் நமது சமூகம் இன்று இருக்கிறது. தருமப் பிரசாரங்களும் உபந்யாசங்களும் மிகுதியாக நடைபெற்றுக் கொண்டிருந்தாலும் இளம் சந்ததியினரிடம் உண்மைப் பக்தி வேரூன்றி வளரவில்லை என்றே நினைக்க வேண்டியிருக்கிறது. இந்நிலையைச் சீர்திருத்த வேண்டும் என்ற கருணை உள்ளத்துடன் தென்னாட்டில் உள்ள மடாதிபதிகள் சமீப காலத்தில் ஒன்றுகூடிப் பல திட்டங்களை வகுத்துக் கொடுத்தனர். அவற்றின்படி செயல்களும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இச்செயல் முறைகளில் ஒன்றுதான் ஹிந்து சமயப் பிரசாரக் கல்வி நிலையம்.

இங்கே இரண்டு பகுதிகளாகச் சமயக் கல்வி போதிக்கப்படுகிறது. கோயில்களில் வழிபாடு செய்யும் பக்தர்களுக்கு நமது சமயக் கோட்பாடுகளை உணர்த்தும் "பிரசாரகர்" களுக்குப் பயிற்சி. இதற்குப் போதனை காலம் ஆறு மாதம். எஸ். எஸ். எல். ஸி. தேறிய அறுபது மாணவர்கள் இதற்காக அனுமதிக்கப் பட்டிருக்கிறார்கள். மற்றொரு பயிற்சி நமது ஆலயங்கள், ஆலய வழிபாட்டு முறைகள்

பற்றி ''வழிகாட்டிகளாக'' ஆவதற்கு அளிக்கப்படுவது. இது பகுதி நேர (Part time) போதனை முறை. மூன்று மாத காலத்துக்கு இப்பயிற்சி அளிக்கப்படும். இதில் பட்டதாரிகள் சுமார் ஐம்பது பேர்கள் சேர்ந்துள்ளனர். முக்கியமாக வெளி நாட்டினர்களுக்கு நம்முடைய ஆலய முறைகளைப் பற்றி விளக்கி வைக்க இவர்கள் உதவுவர்.

மகா வித்துவான் கே. ஆறுமுக நாவலர் இந்த நிலையத்துக்குத் தலைவராகப் பணியாற்ற முன்வந்திருப்பது போதனை முறைகள் ஒழுக்கம் குன்றாத உயர் நிலையில் இருக்கும் என்பதற்கு உத்தரவாதம். பல பண்டிதர்கள் இலவசமாக இங்கே வகுப்புக்களில் சொற்பொழிவுகளாற்ற இசைந்துள்ளார்கள் என்பது மகிழ்ச்சிக்குரிய அம்சம்.

இது ஒரு முதன் முயற்சி. உன்னத லட்சியங்களுடன், தூய உள்ளத்துடன் மேற்கொள்ளப்பட்ட முயற்சி. ஆண்டவன் திரு உள்ளத்தால்தான் இத்தகைய ஒரு பிரசார நிலையத்தை ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணமே எழுந்தது என்று கருத வேண்டும். இம் முதல் முயற்சி பயனளித்தால் இதைப் போல இதர இடங்களிலும் திட்டத்தை விஸ்தரிக்க எண்ணங் கொண்டுள்ளார் அறப் பணியில் அன்பும் பக்தியும் ஆர்வமும் ஒருங்கே இணைந்து செயலாற்றும் அற நிலைய இலாகா ஆணையாளர் திரு எம். எஸ். சாரங்கபாணி முதலியார் அவர்கள். பயிற்சி முடிந்து தேர்வுபெற்ற பிரசாரகர்களுக்குத் தேவஸ்தானங்களில் வேலையும் வாங்கித் தர முயற்சி செய்யப்படும் என்பது பிரசாரக மாணவர்களை ஊக்க ஒரு தூண்டுதலாகும். திட்டம் முழுப் பயன் அளிக்க வேண்டும் என இறைவனை வேண்டுகிறோம்.

அறுபது ஆண்டுகளுக்கு முன் தவணைகள் மூலம் சந்தா சேகரித்து ரூ. 50,000 மூலதனத்துடன் எளிய முறையில் ஆரம்பிக்கப்பட்டது கனரா பாங்கி. இன்று அது இந்திய பாங்கிகளின் வரிசையில் ஏழாவது இடம் வகிக்கிறது. அந்த அளவுக்கு இது ஓங்கி வளர்ந்து வந்துள்ளது. பல சிறு பாங்கிகள் இத்துடன் இணைந்திருக்கின்றன. பல நகரங்களிலும் மாவட்ட ஊர்களிலும் ஏராளமான கிளைகளை ஸ்தாபித்து முடங்கிக் கிடக்கும் பணங்களை ''டெபாஸிட்டு''கள் மூலம் திரட்டித் தொழில்களுக்குக் கடன் வசதிகளை யளித்து நாட்டின்

ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் இன்னிசைக் கச்சேரிகள் நிகழ்த்திய பிறகு அமெரிக்கா சென்றுள்ள ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் முதல் கச்சேரி கோல்கேட் சர்வகலாசாலையில் நடைபெற்றது. இதன் பிறகு ஸைராக்யூஸ், பஃபல்லோ ஆகிய சர்வ கலாசாலைகளிலும் கச்சேரிகள் நடந்தன. இவற்றைத் தவிர பாஸ்டனில் இரு கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்திருந்தார் ஜேம்ஸ் ஏ. ரூபின். இவர் அமெரிக்காவிலுள்ள பான் ஓரியண்ட் கலாசார நிறுவனத்தின் தலைவர். கர்நாடக சங்கீதத்தில் அளப்பரிய பற்றுதலும் பிரியமும் கொண்டவர். டிசம்பர் மாதம் சங்கீத சீசன்போது சென்னையில் மியூஸிக் அகாடமியில் அநேகமாக அவரை ஒவ்வொரு ஆண்டுமே காணலாம்.



சென்ற ஆண்டு டிசம்பர் மாதத்தில் ஜே. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் முன்னிலையில் ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் பாடிய போது ரூபின் அந்த நிகழ்ச்சியைத் தமது டேப் ரிகார்டரில் பதிவு செய்துகொண்டார். (அன்றைய கச்சேரியானது ஸ்ரீமதி எம். எஸ். இதுவரை அளித்துள்ள உன்னதமான நிகழ்ச்சிகளுள் ஒன்றாக அமைந்திருந்தது.)

பாஸ்டனில் கச்சேரிகளை ஏற்பாடு செய்தது தவிர ஜேம்ஸ் ரூபின் அவர்கள் ஸ்ரீமதி சுப்புலக்ஷ்மி, ஸ்ரீ சதாசிவம் கோஷ்டியாருடன் இந்த அமெரிக்கப் பயணம் முழுவதும் உடன் செல்கிறார். ஆங்காங்கே நடைபெறும் கச்சேரிகளைப் பற்றிய விசேஷ அம்சங்களைக் குறித்துக் கல்கி நேயர்கள் படித்து மகிழ ஜேம்ஸ் ரூபின் வாய்ப்பளிப்பார் என்று எதிர்பார்க்கிறோம்.

பொருளாதாரத்தை வளர்க்கச் சீரிய முறையில் சேவை செய்து வருகிறது. பாங்கியின் வளர்ச்சிக்குக் காரணமாக உள்ள அதன் நிர்வாகஸ்தர்களும், சிப்பந்திகளும், ஆயிரக்கணக்கான தொழில் துறையினர்களும் பெருமை கொண்டு இந்தப் பாங்கியின் வைர விழா வைபவங்களை ஆங்காங்கே நடத்தி மகிழ்கின்றனர். அவர்களுடைய பணி மேன்மேலும் சிறப்படையட்டும் என்று வைர விழா ஆண்டில் கனரா பாங்குக்கு வாழ்த்துக் கூறுகிறோம்.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் அவர்களின் வம்சத்தில் வந்த ஸ்ரீ சுப்பராம தீக்ஷிதர், மைசூர் சதாசிவ ராவ், திருவாரூரில் சென்ற நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த ஸ்ரீ சிவ ராமாச்ரமிகள் ஆகிய பெரியோர்கள் ஸ்ரீ காமாக்ஷியின் மீதும் ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதர்கள் மீதும் கீர்த்தனங்கள் இயற்றி உள்ளனர். இவற்றோடு திருநெல்வேலி தென்னிந்திய ரயில்வே ரிடையர்டு சீப் என்ஜினியர் ஸ்ரீ வி. ராமய்யா அவர்களால் இயற்றப்பட்ட ''ஸ்ரீ ஆசாரிய பஞ்சரத்னம்'' என்ற கீர்த்தனங்களையும் சேர்த்துக் காஞ்சீபுரம் ஸ்ரீ சங்கர பக்தஜன சபையினர் ஸ்வர சாகித்யங்களுடனும் வெகு நல்ல முறையில், உயர்ந்த காகிதத்தில் ''குரு கீர்த்தன ரத்னம்'' என்ற நூலாக அச்சிட்டிருக்கிறார்கள். இது ஓர் இலவசப் பதிப்பு என்பது குறிப்பிடத் தக்கது. நவராத்திரி, சங்கர ஜயந்தி ஆகிய சமயங்களில் சங்கீதமறிந்த அனைவரும் இவற்றை மனப் பாடஞ் செய்து பாடுவது மிகப் பொருத்தமாயிருக்கும். இக்கருத்துடன், நூல் வேண்டியவர்கள் ரிஜிஸ்தர் தபால் செலவுக்காக மட்டும் 0.95 பைஸா ஸ்டாம்பு வைத்து 16–10–66க்குள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி எழுதினால் 23–10–66 விஜயதசமிக்குள் புஸ்தகத்தை இலவசமாக அனுப்பி வைக்கிறார்கள்: காரியதரிசி, ஸ்ரீ சங்கர பக்த ஜன சபா, 9-பி, ராஜ வீதி, பெரிய காஞ்சீபுரம்.

இதேபோல் ''ஸ்ரீ காஞ்சி காமகோடிபீடாதிபதி ஸ்ரீ சங்கர குருநூற்றந்தாதி'' என்ற பெயரில் பண்டித மு. முத்து வேங்கடாசலம் அய்யரவர்கள் இயற்றியுள்ள பாடல்களை குருவாரமாகிய ஒவ்வொரு வியாழக் கிழமையும் பத்துப் பாடல்கள் வீதம் பாராயணம் செய்ய விருப்பமுள்ளவர்கள் 16–10–66 முதல் 23–10–66க்குள் தபால் செலவுக்காகப் பத்துப் பைசா ஸ்டாம்பு கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பினால் புஸ்தகம் இலவசமாக அனுப்பப்படும்: பண்டித மு. முத்து வேங்கடாசலம் அய்யர், 102, மோபரீஸ் ரோடு, ஆழ்வார்ப்பேட்டை, மதராஸ்–18.

தியாகி, எம். பி. நாராயண மேனன் அவர்கள் காலமான செய்தி கேட்டு ராஜாஜி பின்வருமாறு எழுதுகிறார்:

எனது அருமை நண்பரும் நீண்டநாள் தேசபக்தரும், துடிப்பான உள்ளங் கொண்டவரும், நெஞ்சுர மிக்கவருமான எம். பி. நாராயண மேனனும் போய்விட்டார். மற்றவர்களது போற்றுதல்களுடன் என்னுடையதையும் சேர்த்துக் கொள்கிறேன். சிறைவாசம் அனுபவிக்கையில் நாங்கள் இருவருமாகச் சேர்ந்து சிறிது காலம் இருக்க நேர்ந்தது. அப்போதெல்லாம் பல மணி நேரங்கள் எனக்கு இன்பமாகக் கழியத் துணை புரிந்தார் அவர்.

INTERPUB/GCS/1

# அவளது எழிலின் இரகசியம்



## சிந்தாலின் ஜி-11 ஹெக்ஸாக்ளோரோபீன்

எழில் என்றால் அது மாசற்ற மேனியழகு—கம்பீரத் தோரணை— தன்னம்பிக்கை. அருகிலிருப்பவரை அகமகிழ்விக்க முடியும் என்ற உணர்வு.




சிந்தாலில் உள்ள ஜி-11, களங்கங்கள் வராமல் தடுத்து, உடல் நாற்றத்தை ஒழிக்கிறது. நாள்முழுதும் உங்களை எழில் மெருகுடன் விளங்கச் செய்கிறது.




இருமடங்கு உறுதிபெறுவீர்—நாள் முழுதும் மலர்ச்சி பெறுவதற்கான ஜி-11 (ஹெக்ஸாக்ளோரோபீன்) அடங்கிய சிந்தால் சோப்பும், சிந்தால் டாய்லெட் பவுடரையும் உபயோகியுங்கள்.

ஜி-11 என்பது எல். ஜிவோடான் ஏ.ஜி., எஸ்.ஏ அவர்களின் ட்ரேட் மார்க்கு




அத்தியாயம் 3

## நிலவுக் கண்கள்

பச்சைப் பசும் பூங்கொடிகளுக்கு மத்தியிலிருந்து வந்த அந்த விநோதமான கூச்சல் வேலவன்கோதைக்கு அதிர்ச்சியைத் தந்தது. கையில் எடுத்த மாம்பழத்தை மறுபடியும் சுனைத் தண்ணீரிலேயே உதறியவன், ஓசை வந்த திசையைப் பார்த்தான். பாறைகளில் உருண்ட கற்களைத் தொடர்ந்து, ஒரு வேடிக்கை மனிதன் வெறித்தனமாகக் கூச்சலிட்டுக் கொண்டே ஓடி வந்தான். பாறையின் உச்சியிலிருந்து ஒரு பாய்ச்சல் பாய்ந்து தண்ணீருக்குள் குதித்தான்.

வேலவன் அவனை மருள மருளப் பார்த்துக் கொண்டு நிற்கும்போதே, சுனைத் தண்ணீரில் மிதந்த அந்த மாம்பழத்தை — வேலவன் உதறிய பழத்தை — ஓடிப் பற்றி எடுத்துக் கொண்டு, வாயில் வைத்துக் கடித்தவாறு மீண்டும் ஒரு பாய்ச்சல் பாய்ந்து அதே பழைய பாறையின் உச்சிக்குத்



தாவினான். அடுத்த விநாடி அங்கிருந்து மறைந்தான் அந்த விந்தை மனிதன்!

அந்த மாய மனிதனைப் பார்த்தால் சேர நாட்டிலும், குறுநாடுகளிலும் அரண்மனை வாயில்களில் தமிழரசர்கள் பாதுகாப்புக்கு அமர்த்துகிற யவனக் காவலர்களைப் போல் இருந்தான். ஆனால் முற்றிலும் யவன உடையாக இல்லை, அவனுடைய கோலம்! கூத்தாட்டு அரங்குகளிலும் திருவிழா நிகழ்ச்சிகளிலும் இடையிடையே தோன்றி நகைப்புக் காட்டுபவனைப் ''பகடிக் கூத்தன்'' என்று அழைப்பதுண்டு. அப்படிப்பட்ட ஒரு பகடிக் கூத்தனைப் போல் தலையிலே ஒரு பாகையும், அங்கியின் கைகளிலே குஞ்சங்களுமாகக் காட்சி தந்தான் அவன்!

வியப்பும் நகைப்பும் தருகிற அந்த விந்தை மனிதனைக் கூர்ந்து பார்த்து ஆராய்வதற்குள், அவன் வேலவன் கோதையின் பார்வையிலிருந்து மறைந்து விட்டானே!

இவன் ஒரு பைத்தியமா? அல்லது நாடகங்களிலே தோன்றுகிற பகடியா? அல்லது யவனக் கள்ளைக் குடித்து விட்டுக் கூச்சலிட்டுத் திரியும் குடிகாரனா? இல்லையென்றால் வேடிக்கையான கோலத்தில் வலைய வந்து உளவு பார்க்கும் ஒற்றனா?

வேலவன் கோதைக்குப் புரியவில்லை! தலை சுற்றியது. சமண முறைக்குள்ளேபோய்க் காலம் என்ற சுவடியில் நாட்கள் என்ற ஏடுகளை ஒவ்வொன்றாய்ப் புரட்டினான் வேலவன் கோதை!

ஃ ஃ ஃ

முழு நிலவைப் பொழிகிற அந்த இனிய இரவு வந்தது. நீலவல்லியும் வந்தாள்! ஆனால் தனியாக வந்தாள்! வேலவனிடம் சொல்லியிருந்தபடி அவளும் தோழியுமாக வரவில்லை! அவள் மட்டுமே வந்தாள்.

''இளவரசி! மறுபடியும் முழு நிலவு எப்போது வரும் என்றும், மறுபடியும் உங்களை எப்போது பார்க்கப் போகிறேமோ என்றும் தவித்துப் போய் விட்டேன். இப்படி நான் சொல்வது பண்பில்லாத சொல்லாக இருந்தால் என்னை மன்னிக்க வேண்டும்!'' என்றான் வேலவன்.

''தெரியும்! நீங்கள் இந்தக் குகையில் தனியாக எப்படிக் காலம் கழிப்பீர்களோ என்று நானும் கவலைப்படவே செய்தேன். இப்பொழுதும் மிகுந்த ஆவலுடனே வந்தேன். நீங்கள் எப்படி இந்த நாட்களை இங்கே கழித்தீர்கள்?''

''இளவரசி! பௌத்தப் பள்ளியிலே இருந்த ஓலைச் சுவடி என் தனிமைக்குப் பெரிதும் துணை செய்தது. அதைப் பிறகு சொல்



கிறேன். ஆனால் இப்போது நீங்கள் தனியாக வந்திருப்பதைப் பார்த்தால் எனக்குக் கவலையாக இருக்கிறதே. உங்களுடன் தோழி வராமற் போனதற்கு வேறு காரணம் எதுவும் இல்லையே?''

''அதுவா! அது ஒன்றும் பரபரப்புத் தர வேண்டிய காரணம் இல்லை. ஆனாலும் சொல்லுகிறேன்; கேளுங்கள். இந்த முறை எங்கள் அரசர் கடலிலிருந்து திரும்பியபோது புதிதாக இரண்டு யவனர்களைக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறார். இந்த யவனர்கள் வந்ததிலிருந்து எனக்கும் மணிமாலை என்ற என் தோழிக்கும் துன்பமும் வேதனையுமாக இருக்கிறது!''

''ஏன் அப்படி?''

''எங்கள் கடம்ப வேந்தருக்கு ஒரு நண்பன் இருக்கிறான். மீகாமன் என்று அழைக்கப்படுகிற மரக்கலத் தலைவன் அவன். அவன் அடிக்கடி கடல் கடந்து மேற்கு நாடுகளுக்குச் சென்று வருபவன். யவன நாட்டிலிருந்தும், மற்றத் தொலை தூர நாடுகளிலிருந்தும் சேர நாடுகளுக்கு வருகிற வணிகர்களுக்கு மிகவும் நெருங்கிய நண்பன் அவன். மேனாட்டு வணிகர்களிடம் இவனுக்கு மிகுந்த செல்வாக்கு ஏற்பட்டதற்குக் காரணம் ஒன்று இருக்கிறது. சென்ற நூற்றாண்டில் 'ஹிப்பாலஸ்' என்பவன் மேனாட்டிலிருந்து சேர நாட்டுக்கு வரும் குறுக்கு வழி ஒன்றைக் கண்டுபிடித்தான். அந்தக் குறுக்கு வழி இப்போது இந்த மீகாமன் ஒருவனுக்குத்தான் நன்றாகத் தெரியும். இந்த வழியில் வந்தால் கடற்கரை நாடுகளைத் தொடாமல் மிக விரைவில் பருவக் காற்றைத் தழுவி நடுக்கடல் வழியாகவே நேராகச் சேர நாட்டுக்கு வந்துவிடலாம்! இந்த ஒரு காரணத்தால் மீகாமனிடத்தில் யவனர்களுக்கு மட்டற்ற மதிப்பு. ஒவ்வொருமுறை இவன் தமிழ் நாட்டுக்குத் திரும்பும் போதும் ரோமாபுரியிலிருந்து பக்குவம் செய்து வந்த பல மது வகைகளை அன்பளிப்பாகக் கொண்டு வருகிறான். இந்த மது வகைகளைக் கொண்டு கொடுத்து எங்கள் அரசரின் ஆழ்ந்த நட்பைத் தேடிக் கொண்டிருக்கிறான் இந்த மீகாமன். எங்கள் அரசர் முழுமதி இரவுகளில் கடல் மீது சென்று திரும்பும்போது மீகாமனிடமிருந்து உயர்ந்த திராட்சை மது வகைகளை உவகையோடு வெள்ளைத் தீவுக்குக் கொண்டு வருகிறார். இந்த முறை, யவன மது வகைகளோடு எங்கள் அரசருக்கு இரண்டு யவனர்களையுமே பரிசாக வழங்கியிருக்கிறான் மீகாமன்! இந்த இருவரில் ஒருவன் யவன அரச குடும்பத்தினருக்கு மது வகைகளைக் கலந்து கொடுப்பதில் நல்ல பயிற்சி பெற்றவனாம்!''

''அப்படியென்றால்?''

''அந்நாடுகளில் மது வகைகளைப் பக்குவப்படுத்தி அவற்றில் எது எதை எது எதோடு எப்படி எப்படிக் கலந்தால் சுவையும் மயக்கமும் அதிகமாகும் என்று கண்டுபிடித்து, அந்தக் கலவை முறையை ஒரு பெரிய கலையாகவே வளர்த்திருக்கிறார்களாம். எங்கள் அரசருக்கு வழக்கமாக மது வகைகளை வழங்கி வரும் மீகாமன் இந்தத் தடவை அந்தக் கலவைகளில் தேர்ந்த ஒரு வல்லவனையே அழைத்து வந்திருப்பதாகக் கூறி இங்கே அனுப்பி யிருக்கிறான்!''

''இளவரசி! இதில் நீங்கள் கவலைப்படுவதற்கு என்ன இருக்கிறது?''

''அதென்ன நீங்களும் அப்படிச் சொல்லி விட்டீர்கள்! நமது தமிழகத்திலிருந்து முத்து, வைரம், நீலக்கல் முதலிய இரத்தின வகைகளும், கருங்காலி தேக்கு, கருமருது, சந்தனம் முதலிய மரங்களும், அரிசி, மிளகு முதலிய விளைச்சல் பொருள்களும், நம்முடைய இஞ்சியும், இலவங்கமும், ஏலமும், ஆடை வகைகளும் ரோமாபுரி வரை செல்கின்றன என்பதில் நாம் பெருமைப்படலாம். நம் நாட்டு மயில்கள் அங்கு சென்று தோகை விரித்து நடனமாடுகின்றன என்றும், நம்முடைய கிளிகள் அங்கு போய்த் தமிழ் பேசுகின்றன என்றும் நாம் களிப்படையலாம். அதெல்லாம் சரி. பல ஆயிரம் பொன்கள் நமக்கு ரோமாபுரியிலிருந்து ஆண்டுதோறும் வருகின்றன என்பது பற்றியும் மகிழ்ச்சிதான். ஆனால் இத்தனை மகிழ்ச்சியும் பாழாகி விடுகிறது, அந்த மேனாட்டு மது வகைகளுக்கு நம் அரசர்கள் அடிமையாகி வருவதைப் பார்த்தால்! தகரமும், கண்ணாடியும், ஈயமும், பித்தளையும் நாம் மேனாட்டார்களிடமிருந்து வாங்குகிறோம். புதிது புதிதாகப் பாத்திர வகைகள் வருகின்றன. சரி. வாணிப முறை அது. ரோமாபுரியிலிருந்தும் கிரேக்க வட்டாரங்களிலிருந்தும் அடிமைகளும் இளம் பெண்களும் நமது தமிழகத்துக்கு வந்து அரச இல்லங்கள் சிலவற்றில் வாழ்கிறார்கள். அதுவுங்கூட அரை மனத்தோடு சரி என்று சொல்லலாம். ஆனால் எக்காரணத்தாலும் நமது அரசர்கள் மதுபானப் பழக்கத்துக்கு அடிமையாவதை எப்படி நாம் பார்த்துக்கொண்டிருப்பது!''

நீலவல்லியின் குரலில் உருக்கம் இருந்தது. வேலவன் சொன்னான்:

## உலகப் புகழ்பெற்ற நாட்டிங்ஹாம் லேஸ் உங்கள் இல்லத்திற்கு என்றுமில்லாப் புத்தெழிலைத் தருகிறது!



# லீலா லேஸ்

உங்கள் இல்லம் பரபரப்பூட்டும் புதுமைத் தோற்றம் பெற லீலா லேஸ் (பூத்தையல் இழை) உபயோகியுங்கள். அசல் நாட்டிங்ஹாம் லேஸ் தற்போது பாரதத்திலேயே தயாரிக்கப்படுகிறது. பலவித டிஸைன்களிலும், வர்ணங்களிலும் வரும் லீலா லேஸ் அழகிய திரைச் சீலைகளுக்கும், மெத்தையாசன உறைகளுக்கும் ஏற்றது. தவிர, மேஜை விரிப்புகள் மற்றும் தலையணை உறைகள் ஆகியவற்றுக்கும் லீலா லேஸ் உபயோகித்து, மிகக் குறைந்த செலவில் உங்கள் வீட்டுக்கு லேஸ் சுகத்தை அளியுங்கள். சிறந்த கடைகளில் விரைவில் லீலா லேஸைக் காணுங்கள். உங்கள் வீடும் இத்தனை எழிலுடன் மிளிர வசதியிருப்பதை உணரலாம்.

உன் அலங்காரம், லீலா புகழ்

பிரமிப்பூட்டும் பொலிவு **லீலா லேஸ்**

லீலா ஸ்காட்டிஷ் லேஸ் ப்ரைவேட் லிமிடெட்
அந்தேரி - குர்லா ரோட், பம்பாய்-59-AS

ஏஜெண்டுகள் : மாயா டெக்ஸ்டைல் ஹால், 69, சட்டன் பஜார், சென்னை-1.
தி க்ரீன் ஷாப், கமர்ஷியல் ஸ்ட்ரீட், பெங்களூர்.

''இளவரசி, நீங்கள் சொல்வதைப் பார்த்தால் உங்கள் தந்தைக்கு இந்தப் பழக்கம் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது என்றல்லவா தோன்றுகிறது!''

''ஆமாம். சில நாட்களாக இந்தப் பழக்கம் திடீரென்று அதிகமாகியிருப்பதற்கு வேறு ஒரு காரணமும் இருக்கிறது. என்றாலும்...''

''இளவரசி! ஏன் தயங்குகிறீர்கள்?''

''நான் ஏதேதோ சொல்லிக் கொண்டே போகிறேன், உங்களைப் பற்றி ஒன்றுமே கேட்காமல்!''

இப்படிச் சொல்லி நீலவல்லி தனது பேச்சை நிறுத்திக் கொண்டதும், வேலவன் சரேல் என்று மறுமொழி சொன்னான்.

''நான்தானே! நான் சேர நாட்டைச் சேர்ந்த ஒரு வணிகர் மகன். சேர நாட்டுக்கு வடகிழக்கில் உள்ள புன்னாட்டிலிருந்து நீலக் கற்களோடு முசிறியை நோக்கிச் சென்று கொண்டிருந்த எங்கள் மரக்கலம், புயலுக்கு உள்ளாகி மூழ்கப் போகும் தருணத்தில், நாங்கள் சிலர் மிதவைகளில் தப்பிக்க முயன்றோம். அதன் விளைவு என்னை இந்தத் தீவில் சேர்த்தது. ஒப்பற்ற பேரழகியும் உத்தமப் பண்புகள் அனைத்தும் நிரம்பிய இளவரசியுமாகிய உங்களைக் காணும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது!''

''நீங்கள் வெறும் நீலக் கல் வணிகர் போலப் பேசவில்லையே! அரசவைக் கவிஞர்களோடு பழகிய ஒரு அரசகுமாரனைப் போல அல்லவா பேசுகிறீர்கள்!''

இருவரும் சிரித்தார்கள். பிறகு நீலவல்லி பேசத் தொடங்கினாள்.

''நான் இன்றிரவு இந்த இடத்துக்குத் தனியாக வர நேரிட்டது எப்படி என்று சொல்லத் தொடங்கினேன். எங்கோ போய்விட்டது பேச்சு! சொல்கிறேன் கேளுங்கள். இந்த யவனர்களில் ஒருவன் மதுப் புலவன் என்று சொன்னேனா? மற்றவன் சில நாட்களாக எங்களுடைய கன்னிமாடத்தை இரவுகளில் காவல் காத்து வருகிறான்!''

''கன்னிமாடத்தையா? காவலா? ஏற்கனவே உள்ள கண்டிப்புகளுக்கு மேலாகவா?''

''ஆமாம். யவனர்கள் பொதுவாகக் காவலில் புகழ் பெற்றவர்கள். அதனால்—''

''அதனால் கன்னிமாடத்தைத்தான் அந்தக் காவலுக்கு உரிய இடமாக உங்கள் தந்தை தேர்ந்தெடுக்க வேண்டுமா? வேறு எத்தனையோ...'' என்று சொற்களை இழுத்தான் வேலவன்.

''அதுதான் எனக்கும் புரியவில்லை. இந்த யவனனுக்கு ஏதாவது வேலை கொடுத்தாக வேண்டும் என்றால், இவனைக் கோட்டையின் முகப்பு வாசலிலேயே உட்கார வைக்கலாமே! அவனுடைய காவலுக்கு எங்கள் கன்னிமாடந்தானா அகப்பட்டது! இதை அரசரிடமே கேட்பதாக இருக்கிறேன். இப்போது அவர் கடல் மீது அல்லவா சென்றிருக்கிறார். திரும்பி வந்ததும் முதலாவது கேள்வி இதுதான். அதோடு இந்த யவனன் நடந்து கொள்கிற முறையும் எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. அதையும் அவரிடம் சொல்வதாகவே இருக்கிறேன்.''

''அப்படி என்ன தவறாக நடந்து கொள்ளுகிறான் இந்த யவனன்?'' என்று கவலையோடு கேட்டான் வேலவன் கோதை. நீலவல்லி சொன்னாள்:

''இரவு நேரங்களில் இரண்டு நாழிகைக்கு ஒரு முறை இந்த யவனன், கையிலே ஒரு ரோமாபுரிக் கண்ணாடி விளக்கை ஏந்திக்கொண்டு, எங்கள் கன்னிமாடத்தின் விளிம்பில் நின்று கொண்டு ஏதோ விநோதமாகக் கூச்சலிடுகிறான்!''

''கூச்சலா? அது எதற்கு?''

இப்படிக் கேட்கும்போதே வேலவன் கோதைக்கு அன்று மாம்பழத்தைக் கையில் எடுத்ததும் கேட்ட கூச்சலும், அதைத் தொடர்ந்து பாறையிலிருந்து குதித்த யவனனும் நினைவுக்கு வரவே ஒரு பதற்றம் இருந்தது. நீலவல்லி சொல்லுவாள்:

''விநோதமான ஒரு கூச்சல் போடுகிறான் அந்த யவனப் பயல்! அதை ஏன் கேட்கிறீர்கள்! காவல் காக்கும் ஒலியாம் அது! அதோடு நிற்கிறதா செயல்! இல்லை. கன்னி மாடத்தின் சாளரத்துக்கு அருகில் உள்ள மதிற் கல்லில் ஏறி நின்றுகொண்டு, சாளரத்தின் வழியாக அந்தக் கண்ணாடி விளக்கைப் பிடித்தவாறு கன்னிமாடத்துக்குள்ளே பார்க்கிறான் இந்த யவனன்! அதாவது நாங்கள் படுத்திருக்கிறோமா அல்லது எங்களுக்கு ஏதாவது கேடு வந்து விட்டதா என்று ஆர்வத்தோடு பார்க்கிறானாம்! இது வேடிக்கையாக மட்டுமில்லை. எனக்குக் கோபம் மூட்டுவதாகவும் இருக்கிறது. இதைப் பற்றிச் சற்றுக் கடுமையாகவே எங்கள் அரசரிடம் சொல்வதாக இருக்கிறேன்...!''

இளவரசியின் இந்தச் சொற்களைக் கேட்டதும் வேலவன் கோதைக்குப் பதற்றம் உண்டாயிற்று.

''அப்படியானால் இப்போது இப்படி இங்கே வந்துவிட்டீர்களே, சாளரத்தின் வழியாக அந்த யவனன்

கன்னிமாடத்துக்குள் வேவு பார்த்தால் என்ன ஆகும்?''

''ஒன்றும் ஆகாது. கன்னிமாடத்துக்குள் இரண்டு கட்டில்கள் இருக்கின்றன. முகப்பில் உள்ளதில் மணிமாலை தூங்குகிறாள். சற்று எட்டி இருக்கும் என் கட்டிலில், தலையணைகளை வரிசையாக அடுக்கி அவற்றுக்கு மேல் போர்வையை இழுத்துப்போர்த்தியிருக்கிறேன். சாளரத்தின் வழியாகப் பார்த்தால் குளிருக்கு அஞ்சி நான் போர்த்தி மூடிக் கொண்டு படுத்திருப்பது போலவே தெரியும். கவலைப்படாதீர்கள் !''

''அப்படியா ?''

''ஆமாம். அப்படியே ஏதாவது இசைவு கேடு நேருமானால் உடனே காற்றாகப் பறந்து இங்கு வந்துவிடுவாள் மணிமாலை. அவளிடம் விரிவாக எல்லாம் சொல்லி வந்திருக்கிறேன் !''

இப்படிக் கூறிவிட்டு அந்தச் சோலையின் நிலவொளியில் வந்து நின்றாள் நீலவல்லி.

''இந்தத் துறவிகளின் குகையும் இந்தச் சூழலும் எப்படித்தான் உங்களுக்குப் பிடித்துப் போயிற்றோ ? சற்று இந்த மணலிலே நடந்து செல்லலாமே ! மனித நடமாட்டம் இல்லாத இந்தக் கடற்கரையில், முழு நிலவு பொழியும் இரவு நேரங்களில், நானும் மணிமாலையும் மனம் போனபடி நடந்து செல்வதுண்டு !''

''நள்ளிரவில் அப்படி நடந்து செல்வது உங்களுக்கு அச்சமாக இராதா?''

''அச்சமா? இந்த வெள்ளைத் தீவிலா? இந்தத் தீவைக் கண்டு தமிழகமே அஞ்சுகிற காலம் இது! அச்சம் கொடுக்கிறவர்கள் நாங்கள்; அச்சப்படுவது மற்றவர்கள்!''

வேலவன் கோதையும் நீலவல்லியும் சிரித்தார்கள். சிரித்துக் கொண்டே சென்று கடலின் கரையிலே நின்றார்கள்.

வேகமாகப் பொங்கிய பேரலைகள் பேரிரைச்சலோடு வந்து கரையிலே மோதின. இவர்கள் இருவரும் உரக்கச் சிரித்தால்கூட இந்த அலை இரைச்சல் அதை உட்கொண்டு விடும்!

வேலவன் கோதை வானத்தைப் பார்த்தான். 'அச்சம் கொடுக்கிறவர்கள் நாங்கள், அச்சப்படுவது மற்றவர்கள்!' என்றாள் அல்லவா நீலவல்லி. அதை மெய்ப்பிப்பது போல, அந்த வெள்ளைத் தீவுக்கு மேலே ஓடிய முழு நிலவும்கூட, ஒரே அச்சத்தில் விரைந்து ஓடுவது போல வானத்தில் ஓடிப் பறந்து கொண்டிருந்தது ! அந்த மேகங்களோ? அவையும் வெள்ளைத் தீவின் குறும்பர்களுக்கு அஞ்சி ஓடும் யவன வணிகர்களைப் போலப் பஞ்சு மூட்டைகளைச் சுமந்து கொண்டு உயிரையும் அந்த மூட்டையிலேயே வைத்துக் கட்டிப் பிடித்துக் கொண்டு, 'தப்பினோம் பிழைத்தோம்' என்று ஓடிக் கொண்டிருந்தன!

மலைப்பாங்கான இடத்திலே கடலின் கரை வளைந்து திரும்பியது. இருவரும் மேலே நடந்து சென்றார்கள். வலது புறம் கொந்தளிக்கும் கடல். இடது புறம் பாறைச் சிகரங்கள். இந்தப் பாறைகளுக்கு மேலேதான் பௌத்தப் பள்ளியும் மண்டபங்களும் கவனிப்பாரற்று நின்றன. அந்த இடத்துக்கு அருகில் வந்ததும் பளீரென்று நீலவல்லி கேட்டாள் :

''நீங்கள் யார் என்பதை எள்ளளவும் மறைக்காமல் என்னிடம் சொன்னால், நான் யார் என்பதையும் உங்களிடம் மறைக்காமல் சொல்லுவேன். உண்மை ஒன்றையே பேசுபவர்களும், கொல்லா விரதமே தவ ஒழுக்கமாகக் கொண்டவர்களும் வாழ்ந்துவந்த புண்ணியச் சூழல் இது. சமணர்களின் முறையும் பௌத்தர்களாகிய சாக்கியர்களின் குகைகளும் பள்ளியும் நிற்கிற பாறை வட்டாரத்தில் இப்போது செல்கிறோம். இந்தக் கடலும், இந்தப் புனிதமான பாறையும், அப்பழுக்கில்லாத இந்த முழு வெண்மதியும் சாட்சியாக, இவற்றின் மீது ஆணையாக, நீங்கள் உண்மை பேச வேண்டும். நீங்கள் உண்மை பேசினால்தான் நானும் அப்படிப் பேச முடியும். நான் மெய்யாகவே அப்படிப் பேச விரும்புகிறேன். ஏனென்றால் உங்களிடம் நான் கூற எண்ணும் சில முக்கியமான பேருண்மைகள் உண்டு ! அவற்றைச் சொல்ல ஆசைப்படுகிறேன் !''

நீலவல்லியின் குரலில் ஒரு நுணுக்கம் இருந்தது. குரலின் ஒலி உணர்ச்சிப் பெருக்கினால் இளைந்தது. வேலவன் மேலே நடக்க முடியாமல் அப்படியே நின்று விட்டான். மனப் பாதையிலே இது ஓர் எதிர்பாராத திருப்பமாகும் அவனுக்கு!

''இளவரசி! நீலவல்லி, நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?''

''சொல்கிறேன். கேளுங்கள். உங்களைப் பார்த்தால் அரச வீரராகக் காண்கிறீர்கள். ஆனால் வேறு எப்படியோ சொல்லிக் கொள்கிறீர்கள். என் நிலைமையோ என்றால், உங்களைப் பார்த்த விநாடியிலிருந்து ஏதோ ஒன்று என் உள்ளத்தின் கதவைத் தட்டுகிறது. தாளிட்டிருந்த கதவு திறக்க முனைகிறது. பூட்டி வைத்த

இணைப்புக்கள் கழலுகின்றன. என்னையும் மீறி ஏதேதோ உங்களிடம் சொல்ல வேண்டும் என்று என் உதடு துடிக்கிறது. இதன் விளைவு என்ன ஆகும் என்று எனக்குத் தெரியவில்லை. ஊர் பெயர் தெரியாத ஒரு வேற்று மனிதரிடத்தில் நான் ஏன் இப்படியெல்லாம் பேசுகிறேன். இப்படியெல்லாம் நடந்து கொள்கிறேன். எனக்கே புரியாத ஒரு புதிராக இருக்கிறது இது. ஒரு வேளை நான் பிறந்த கதையில் உள்ள அந்தத் துயரமும், நான் வளர்ந்த வரலாற்றில் ஏற்பட்ட முரண்பாடும், என் இதயத்தில் சில ஆண்டுகளாகக் குமுறிக் கொண்டிருக்கிற தவிப்பும் சேர்ந்து, யாராவது ஒருவரிடம் எல்லாவற்றையும் பேசிக் கொட்டி விட வேண்டும் என்று என் மனக் கதவை வற்புறுத்தித் தள்ளுகிறது போலும்! இருக்கலாம். அப்படியும் இருக்கலாம். அல்லது நம் சந்திப்பில் நம் இருவருக்கும் புலனாகாத ஏதோ ஓர் ஊழ்வினைத் தொடர்பு நம்மை இயக்கலாம்! அது என்ன என்பதைக் காலம்தான் காட்ட வேண்டும். என்றாலும், எது எப்படி இருந்தாலும், என்னிடம் நீங்கள் உண்மையை மறைக்காமல் பேசுவதாக இருந்தால், அது குறித்து நீங்கள் பிற்காலத்தில் வருந்த வேண்டிய நிலையே நேரிடாது என்பதை உங்களுக்கு உறுதி கூறுகிறேன். மனம் திறந்து சொல்லுங்கள், நீங்கள் யார்? எங்கிருந்து புறப்பட்டு என்ன நோக்கத்தோடு எங்கே செல்கிறீர்கள்?''

கடலின் பேரிரைச்சல், மேகங்களின் ஓட்டம், காற்றின் ஓசை இவற்றுக்கு மத்தியிலே வேலவன் கோதை வாய் அடைத்து மௌனமாக நின்றான் ஒரு விநாடி! அவனுடைய கண்கள் உருகிக் கலங்கின!

''நீலவல்லி! உங்களுடைய குரலில் என்ன பேராற்றல் இருக்கிறது? யாரையும் அடி பணியச் செய்யும் அந்த வலிமைதான் என்ன? அச்சமுறுத்தி அடிபணிய வைக்கும் முரட்டு ஆற்றல் இல்லை அது. இன்ப மயமானது அந்த ஆற்றல்! அது என்ன? நீங்கள் சொல்கிறபடியே நான் செய்ய வேண்டும் என்று என்னைத் தூண்டுகிற ஒரு.... ஒரு.... ஒரு ஆசை; அதற்குப் பெயர் தெரியவில்லையே எனக்கு!''

நீலவல்லியும் மௌனமாக நின்றாள். அவளுடைய கண்களும் கலங்கின.

''அப்படியானால் உங்களைப் பற்றிய உண்மையை என்னிடம் சொல்லத் தீர்மானித்து விட்டீர்களா?''

இவ்வாறு கேட்டுக் கொண்டே வேலவன் கோதையின் இரண்டு கண்களையும் இமை கொட்டாமல் பார்த்தாள் நீலவல்லி.

''இளவரசி! என்னை அப்படிப் பார்க்காதீர்கள். போர்க்களத்தில் வேலையும் வாளையும் சந்தித்துப் பழகிய கண்கள்தாம் என்னுடைய கண்கள். ஆனாலும் உங்களுடைய கண்களை, ஐயோ, உன்னுடைய கண்களைச் சந்திக்க இந்தக் கண்களுக்கு ஆற்றல் இல்லை. இல்லை —''

வேகமாக எழுந்த அலை ஒன்று பின்னிப் புரண்டு வெள்ளைத் தீவின் கரையிலே வந்து சிதறியது.



வேலவன் கோதை நீலவல்லியின் கைகளைப் பற்றினான். வலக்கை மேல் வலக்கை வைத்தான்.

''அழகுப் பெண்ணரசியே! என் இதயத்தையும் என் அறிவையும் அடிமைப்படுத்துகிற உன் நிலவுக் கண்களின் மீது ஆணையிடுகிறேன். இனி இந்தப் பிறவியில் உன்னிடம் பொய் பேசுவது என்பது இல்லை. என்ன நேர்ந்தாலும் சரி. இது உறுதி. சேர நாட்டுத் தானை வீரனாகிய வேலவன் கோதை, கடம்பர்களை வேவு காணுவதற்காக வந்த வெள்ளைத் தீவிலே,

கடம்ப வேந்தனின் மகளுக்குச் சொல்கிற ஆணை மொழி இது!''

''இல்லை. நீலவல்லிக்கு என்று சொல்லுங்கள். கடம்பவேந்தனின் மகளுக்கு என்று சொல்லாதீர்கள் !''

''இளவரசி! நீ என்ன சொல்லுகிறாய் ?''

'' உண்மையை இருவருமே பேச ஆரம்பித்த பிறகு, நீலவல்லி என்ன சொல்லுவாள்? உண்மையைத்தான் சொல்லுகிறாள் !''

''அப்படியானால் நீ இந்த வெள்ளைத்தீவின் இளவரசியில்லையா ? கடம்ப வேந்தனின் மகளில்லையா நீ?''

''மகளைப் போலவே வளர்ந்து வருகிறேன் நான் என்பது உண்மை. ஆனால் கடம்பவேந்தனின் மகள் என்று என்னைச் சொல்லாதீர்கள். திருடர்களின் குருதி இந்த நரம்புகளில் ஓடுகிறது என்று கேட்கவே என் உடம்பு கூசுகிறது. உண்மைக்கு மாறானது அது! வேறு யார் என்னை எப்படி அழைத்தாலும் சரி. இனி உங்கள் வரையில் நான் வெறும் நீலவல்லி. வெள்ளைத்தீவின் இளவரசி என்ற பட்டங்கூட எனக்கு வேண்டாம் !''

மௌனமாக இருவரும் சற்று நடந்தார்கள். கரையை விட்டுச் சிறிது மேடான பாறைகளிலே நடந்து, வேங்கை மரத்தின் அடியில் ஆனை ஒன்று படுத்திருப்பது போல் படர்ந்திருந்த பாறையின்மீது, கடல் அலைகளை நோக்கியவாறு உட்கார்ந்தார்கள்.

''நீலவல்லி ! மயக்கம் அடைந்து மணற்பரப்பிலே விழுந்து கிடந்த என்னை, நீ வந்து காப்பாற்றியதில் ஊழின் கரம் எப்படியோ வேலை செய்கிறது என்றுதான் நான் நினைக்கிறேன். மாண்டு மடிந்து போயிருக்க வேண்டிய என்னை, உன்னிடம் கொண்டு சேர்த்த இந்தக் கடலின் அலைகளுக்கு நான் மனமும் மொழியும் ஒருமித்து அஞ்சலி செலுத்துகிறேன்!''

நீலவல்லி பெருமூச்சு விம்மிய குரலில் பேசினாள் :

''அன்பரே! நீங்கள் இந்தக் கரையிலே வந்து சேர்ந்த அந்த இரவையும் அந்தப் புயலையும் நினைத்துப் பார்க்கவே உடம்பு நடுங்குகிறது!''

இப்படிச் சொல்லிவிட்டுப் பதறுகிற கைகளைப் பாறையின் மீது வைத்துச் சற்று நேரம் எண்ணங்களை மையப்படுத்திக் கொண்டாள். பிறகு அவள் சொல்லுவாள் :

''அன்பரே! கன்னிமாடத்தில் நன்றாகக் கண்ணயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தோம் நானும் மணிமாலையும்! திடீரென்று நடுநிசியிலே ஒரு பேரிடி கேட்டது. அப்படியே பதறிக் கொண்டு விழித்தேன். மணிமாலை ஏற்கனவே எழுந்து சாளரத்தருகே நிற்பதைக் கண்டேன்.

பளீர் பளீர் என்று பலகணியினூடு மின்னல் வெட்டியது. மடமட என்று இடிகள் முழங்கின. மழையும் காற்றும் ஊழியாகக் கூடி ஒருமித்து அடித்தன!

சாளரக் கதவுகளை அடைத்துவிட்டு எங்கள் கன்னிமாடத்தின் முன்றிற் சுவரைப் பிடித்துக் கொண்டே நிலா முற்றத்து உள் முகப்பில் வந்து நின்றோம் நானும் மணிமாலையும்! அப்படி வந்து நின்று வானத்தையும் கடலையும் பார்த்தோம். மேகமும் மின்னலும் ஒன்றோடொன்று மற்போர் செய்து கொண்டிருந்தன. கடலின் அலைகள் குதித்து எழுந்து வானத்தோடு குத்துச் சண்டை நடத்திக் கொண்டிருந்தன !

உள்ளே போய்க் கட்டிலில் படுக்க ஓடவில்லை. அந்த ஊழிக்கூத்தைப் பார்த்துக் கொண்டே நானும் மணிமாலையும் நீண்ட நேரம் நின்றோம்.

மழையும புயலும் கடலுமாகச் சேர்ந்து நடத்தும் அரக்கக் காட்சிகளைப் பார்த்துப் பார்த்துப் பழகியிருந்த மணிமாலை, சற்று நேரத்தில் நிலவு எழும் என்றும் அமைதி நிலவும் என்றும் சொன்னாள். அதற்காகக் காத்துக் கொண்டே நாங்கள் இருவரும் நிலா முற்றத்திலேயே நின்றோம்.

மணிமாலை சொன்னபடியே புயல் நின்றது. மழை ஓய்ந்தது. கடல் அமைதியுற்றது. வானில் நிலவும் எழுந்தது. விண்ணும் மண்ணும் உலகெங்கும் வெண்ணிலவிலே மூழ்கிப் பகலைப் போன்று ஒளி பரவியது! அப்போது எங்கள் கன்னிமாடத்தின் முகப்புக்கு எதிரே தொலைவிலே கடல் அலையில் ஏதோ, மிதப்பது நன்றாகத் தெரிந்தது! சற்று நேரத்தில் அது மிதவை இல்லை என்பது புரிந்தது. மனித உடலாக இருக்கும் என்று நாங்கள் எண்ணுவதற்குள், வேகமான அலை ஒன்று உங்களைக் கரை மணலிலே கொண்டு எறிந்ததைக் கண்டோம்.

''வல்லி ! அது ஒரு மனித உடல்தான்!'' என்று சொல்லிக் கொண்டே பதறினாள் மணிமாலை.

''ஓடிப் போய்ப் பார்த்து வருகிறாயா ?'' என்றேன்.

துணிவும் வாழ்வின் அநுபவமும் நிரம்பிய மணிமாலை, மாடத்திலிருந்து இறங்கி வெளியே சென்றாள். பயனைக்

# சென்று கொண்டிருப்பது சரியான திசைதான்

கனரா பாங்கை நிறுவிய திரு. சுப்பராவ் பை சரியான குறிக்கோளுடன் திட்டமிட்டார். பாங்கின் பணிகளுக்கான நிறுவனமாக மட்டுமல்லாமல், மக்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானதொரு நிறுவனமாகவும் திகழ்ந்து, கனரா பாங்க் தேசிய முன்னேற்றத்தில் முதன்மையான பாகம் வகிக்கவேண்டும் என்பதே அவருடைய குறிக்கோளாக இருந்தது.

1 லட்சத்திற்கும் குறைவான மூலதனத்துடன் தொடங்கிய கனரா பாங்க, இன்று 200 மடங்கு அதிகமான மூலதனத்தை பெற்றிருப்பதில் பெருமிதமடைகிறது. 1906ல் ஒரே ஒரு கிளை—இன்று 240 கிளைகளுக்குமேல் உள்ளன—துவக்கத்தில் ஊழியர்கள் 4 பேர்—இன்று 5,000க்கு மேற்பட்ட ஊழியர்கள் உள்ளனர்—சின்னஞ்சிறியதாகத் துவங்கி இன்று 7-வது ஸ்தானம் வகிக்கிறது—தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிய பாங்காகத் திகழ்கிறது—இப்பொழுது வைர விழா ஆண்டை அடைந்துவிட்டது.

இவையெல்லாம் துச்சமான சாதனைகள் அல்ல என்று, பணிவுடன் நாங்கள் கூறமுடியும். சரியான திசையில் நடவடிக்கை எடுத்ததனால்தான் — இன்றும் எடுத்துக் கொண்டிருப்பதனால்தான், இந்த மகத்தான சாதனைகள் சாத்தியமாயின.

60 வருட சேவை—1, ஜூலை 1906—1, ஜூலை 1966
அகில இந்திய வைர விழாக் கொண்டாட்டம்
ஜூலை—டிசம்பர் '66.

SERVING TO GROW · GROWING TO SERVE · CANARA BANK LTD 1906-1966

திரவியசாதனங்கள் 110 கோடிக்கு மேல்

—கிளைகள் 240க்கு மேல்

—உலகெங்கும் பிரதிநிதிகள்

## கனரா பாங்க் லிமிடெட்

பதிவுபெற்ற அலுவலகம்: லைட் ஹவுஸ் ஹில், மங்களூர்
நிர்வாக அலுவலகம்:
112, ஜயசாமராஜேந்திர ரோடு, பெங்களூர்.



## 'சிகப்பு' ''கார்டினல் பாலிஷ்'' உங்கள் வீட்டுத் தரையைப் பளபளக்கும் ஒளிவீசச் செய்கிறது.

ரெட்

# கார்டினல்

பாலிஷ்




கார்டினல் (பாலிஷை) சிறிதளவைப் பயன்படுத்தினால் போதும், தரைகள் நல்ல சிவப்பு நிறமேறிப் பிரகாசிக்கத் தொடங்கி விடும். அந்தப் பளபளப்பு நெடுநாள், நிலைத்து, நீடிக்கக்கூடியதாகும்! 'சிகப்பு' கார்டினல் பாலிஷை உபயோகித்ததும், சாதாரணச் சிமிட்டித் தரையும்கூட, கண்ணைக் கவரும் செவ்வண்ணம் பெற்றுப் பளபளக்கும். உங்கள் வசிக்கும் வீடு உற்சாகமூட்டும் சூழ்நிலையை உருவாக்குகிறது.

அட்லாண்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது.)

ARCC-1 TAM

காவல் என்ற இந்தப் புதிய கூத்தெல்லாம் இல்லாத தன்னிச்சையான காலம் அல்லவா அது !

ஓடிச் சென்ற மணிமாலே உடலுக்கு அருகிலே போய்ப் பார்த்து, நாசியில் காற்று இழைகிறது என்பதைத் தெரிந்து கொண்டு, கன்னிமாடத்துக்கு ஓடோடியும் வந்தாள்.

''மூச்சு இழைகிறது, யாரோ அரசகுமாரனைப் போல இருக்கிறது என்ருள். அதற்கு மேலும் மணிமாலே இன்னென்று சொன்னுள். அதையும் சொல்லட்டுமா ?''

''என்ன அது? உண்மைகளை முழுதும் சொல்லிவிட வேண்டியவர்கள் அல்லவா நாம் இருவருமே!'' என்ருன் வேலவன்.

''யாரோ அரசகுமாரனைப் போல் இருக்கிறது. முகத்தில் ஒப்பற்ற எழிலும், நெற்றியில் அரசப் பெருமிதமும் ஒளிவீசுகின்றன என்று மணிமாலே சொன்னுள்!''

இவ்வாறு கூறிவிட்டுக் கடைக்கண்ணுல் வேலவன் கோதையின் கண்களையும் நெற்றியையும் பார்த்துப் புன்முறுவல் செய்தாள் அந்த அழகுப் பெண்ணரசி !

''இதன் பிறகு என்ன நடந்தது என்பது உங்களுக்குத் தெரியும். கடலோடு வாழ்கிற எங்களுக்குத் தண்ணீரில் மூழ்கிய மனிதர்களை மயக்கம் தெளிய வைக்கும் கலே உடலோடு ஒட்டிய கல்வி ! எந்தப் பழச் சாற்றை எப்படிக் கொடுக்க வேண்டும் என்பது எங்களுக்கு நன்ருகத் தெரியும் !''

வேலவன் கோதை பழச்சாறு உட்கொண்டவன் போல மனம் என்ற குவளேயிலே நீலவல்லி வார்த்த இங்கித மதுவை நிரப்பியவாறு, இமைகொட்டாமல் அவளுடைய முகத்தையே நிலவிலே பார்த்தான்.

''நீலவல்லி! என்னுடைய முகத்தைப் பற்றி மணிமாலே என்ன சொன்னுள் என்பதைக் கூறிவிட்டாய். ஆனுல் உன் முகமும் உன் கண்களும் சமணக் குகையிலே என் தனிமையை என்ன பாடுபடுத்தின என்பது உனக்குத் தெரியுமா? போதும் போதாததற்கு அந்த நீல மலர்!—உன் கூந்தலிலிருந்து உதிர்ந்ததே அது !''

''சரி சரி! நீங்கள் அன்று குகைக்குச் செல்லும் போது எது எதையோ உங்களுடன் எடுத்துக் கொண்டுதான் போயிருக்கிறீர்கள். வெறும் கையோடு போகவில்லே !''

''எதை எடுத்துச் சென்றேனே இல்லேயோ, இதயத்தை மட்டும் விட்டு விட்டுத்தான் சென்றேன். அதுதான் உண்மை. அதை மறைக்க விரும்பவில்லே நான் !''

பாறையிலிருந்து இருவரும் எழுந்து மணலிலே நடந்தார்கள்.

''இந்தக் குகைவட்டாரத்தில் நீங்கள் எப்படிப் பொழுது போக்கினீர்கள் ? அதைச் சொல்லவில்லேயே எனக்கு!'' என்று கேட்டாள் நீலவல்லி.

வேலவன் கோதை சமணமுழைக்குப் பின்புறம் நடந்து சென்று சாக்கியப் பள்ளியிலே கண்டெடுத்த ஓலேச் சுவடியைப் பற்றிக் கூற ஆரம்பித்தான்.

''தெரியும் எனக்கு, அந்தச் சுவடிகளைப் பற்றி! ஆனுல் ஊசி முறி என்ற அந்தத் தமிழ்ச் சுருக்கெழுத்து எனக்குத் தெரியாது. இந்த வெள்ளேத் தீவிலேயே இப்பொழுது யாருக்கும் தெரியாது அது! தெரிந்த துறவிகளையெல்லாம் எங்கள் அரசர் இந்தத் தீவி

---

தனிக் குடித்தனம் ஆரம்பித்து மூன்று மாதங்களாயிற்று. மணமகன் முணுமுணுத்தாள்: ''அப்பா அரிசி அனுப்பி விடுகிருர். பெரியண்ணு வாடகைப் பணம் அனுப்புகிருன். சின்னண்ணு கைச் செலவுக்கு அனுப்புகிருன்; அம்மா புடவை சப்ளே செய்துவிடுகிருள். ஆனுல் ஒன்றும் காண மாட்டேன் என்கிறது. மீதி நாட்களை எப்படித் தள்ளுவது என்று தெரியவில்லே....''

'கம்' மென்று



இருப்பார்களா?

''நீ படுகிற அவஸ்தையைப் பார்த்தால் எனக்கே வேதனேயாக இருக்கிறது, கண்ணே! பம்பாயிலும் புது டில்லியிலும் பணம் பண்ணிக் கொண்டிருக்கும் உன் அத்திம்பேர்கள் இப்படி 'அக்கடா' என்று கையைக் கட்டிக் கொண்டிருப்பார்களா? நீயாவது கடிதம் எழுதிப் போட்டுப் பாரேன். நம்முடைய கஷ்டத்துக்கு நாம்தான் முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டும்!'' என்ருன் மணமகன். —பிரம்மச்சாரி

விருந்தே துரத்தி விட்டார்! ஆகையால் இனி அந்தச் சுவடிகள் எல்லாம் உங்களைப் போல் யாருக்காவது பயன் பட்டால்தான் உண்டு! ஆனால் எத்தகைய செல்வங்கள் அவை! மனத்தையே ஆராய்ச்சிக் கூடமாக வைத்து, ஐம்புலன்களையும் மனித உணர்வுகளையுமே ஆராய்ச்சிக் கருவிகளாகக் கையாண்டு, இந்த வானையும் வையத்தையும் அளந்து, இவற்றுக்கு அப்பாலும் சென்று, முக்காலத்தையும் கணக்கிட்டு எழுதிய தமிழ்ச் சுவடிகள் அவை! எதிர்காலத்தை அளந்து சொல்லுகிற இந்தச் சுவடிகளுக்கு எதிர்காலம் எப்படியோ! அதை யாரால் அளந்து கூற முடியும்?''

வியப்பும் வேதனையும் நிரம்பிய குரலில் இவ்வாறு சொல்லிவிட்டு நீலவல்லி தொடர்ந்து கூறினாள்:

''அன்பரே! நன்னர்கள் என்பது அந்த அரசர்களின் குலத்துக்கே உரிய பொதுப் பெயர் என்பதும், மாம்பழக் கொலைக்குக் காரணமாக அமைந்த நன்னனின் புதல்வர்தான் இப்போது துளு நாட்டை ஆண்டு வருகிறார் என்பதும், உங்களுக்குத் தெரிந்திருக்குமென்றே நினைக்கிறேன். ஊசிமுறி எழுத்தில் இந்த வரலாற்றைத்தானே நீங்கள் படித்தீர்கள்?''

''அது மட்டுமில்லை. நன்னர்களின் எதிர்காலம் பற்றியும் அதில் எழுதியிருந்தது. அதுதான் மிகவும் முக்கியமானது!''

''ஓ! அதுவா! அது சாதாரண மக்களாகிய நமக்குப் புரியாத பகுதி. காத்திருந்து பார்க்க வேண்டிய செய்தி அது. ஆனால் ஒன்று. நன்னர்களின் எதிர்காலத்தைப் பற்றி எனக்குத் தெரியாது போனாலும், இந்தக் குறும்பர் குலத்தின் எதிர்காலம் எப்படி ஆகப் போகிறது என்பதை மட்டும் என்னால் ஊகிக்க முடிகிறது.''

மணற்பரப்பிலே துள்ளிக் கொண்டு நின்றான் வேலவன் கோதை.

''பெண் பாவம் என்பது இந்தக் குறும்பர் குலத்தைப் பீடித்திருக்கிறது என்று சொல்ல வருகிறாய். அப்படித்தானே?''

''இல்லை, இல்லை. குறும்பரின் பெண் பாவத்துக்கு விடுதலைக் காலம் வந்து விட்டது. அது ஏன் இனிமேல் அவர்களைப் பீடிக்க வேண்டும்? பீடிக்காது. ஆனால் நீங்கள் பார்த்தீர்களே துறவுப் பள்ளி, தாமரைப் பீடம், ஓலைச் சுவடிகள், இவற்றுக்கெல்லாம் உரிய துறவிகள் என்ன ஆனார்கள் என்பதை எண்ணிப் பார்த்தீர்களா? போட்டது போட்டபடியே அவர்கள் அப்படி ஓடும்படி என்ன நேர்ந்தது? என்ன நடந்தது? கடந்த ஆண்டு வரை சிறப்போடு நடந்த பௌத்தப் பள்ளியும், சமணர் இருக்கையும் இன்று என்ன ஆயின? எல்லா மதக் கொள்கைகளைச் சார்ந்த துறவிகளும், முனிவர்களும், சித்தர்களும் அவரவர் இச்சைப்படி முழு உரிமையோடு தங்களுக்குள் பூசலின்றி நடமாடி, உள்ளத்தையும் உணர்வையும் வளர்த்து வந்த இந்தப் புண்ணியத் தீவிலே குறும்பர்கள் என்ன செய்தார்கள் என்று நினைக்கிறீர்கள்?''

இப்படிக் கேட்டுவிட்டு இதற்குமேல் பேசுவதற்கு முடியாதவள் போலக் குரல் அடைத்து நின்றாள் நீலவல்லி.

''வல்லி! அந்த ஓலைச் சுவடிகளையும் அந்தச் சூழ்நிலையையும் பார்த்ததுமே எனக்குப் பட்டது, ஏதோ ஒரு பெரிய நிகழ்ச்சி இங்கே நடந்திருக்க வேண்டும் என்று!''

''ஆம். அப்படிப்பட்ட ஒரு நிகழ்ச்சி நடந்த பிறகுதான் வாழ்வில் என்னுடைய மனக் கசப்பு உச்ச நிலையை அடைந்தது. நான் எதிர்பார்த்துநிற்கும் ஒரு மனிதர், என்று எங்கு எப்படி வரப் போகிறார் என்றுதான், இதுவரை நீல வானத்தையும் நீள்கடலையும் நோக்கியவாறு கன்னிமாடத்தில் காத்திருந்தேன். அலைகடல் உங்களை இந்தக் கரையிலே கொண்டு வந்து சேர்த்தது!''

இப்படிச் சொல்லும் போது நீலவல்லியின் குரல் உணர்ச்சிப் பெருக்கினால் விம்மியது. கலங்கிய அவளுடைய கண்களிலே இரண்டு முத்துக்கள் நிலவின் ஒளியில் உருவாகி மின்னி நின்றன. பெண்மையின் வாஞ்சை மிருந்த உள்ளக் கடலின் விலை மதிப்பற்ற அந்த முத்துக்கள், மணலிலும் பாறையிலும் சிதறிவிடக் கூடாது என்று, தனது மேலாடை கொண்டு நீலவல்லியின் கண் இமைகளைப் பரிவோடு பொதிந்தான், வேலவன்கோதை.

''நீலவல்லி! உன்னுடைய மனத்தில் இத்தனை வேதனை ஏற்படும்படி நடந்த அந்தக் கொடிய நிகழ்ச்சி என்ன என்று எனக்குச் சொல்லுகிறாயா?''

பாறைகளைக் கடந்து சென்று, சாக்கியப் பள்ளிக்கு வெளியே இருந்த ஒரு சிறு மண்டபத்தின் அழகான படிக் கட்டை நோக்கி இருவரும் நடந்தார்கள்.

**(தொடரும்)**

# வாழ்க்கையை இனிமையாக்குவது காட்பரிஸ்!

இனிப்பிலே இன்பம். பகிர்ந்துகொண்டு நீங்கள் மகிழ விரும்பும் நல்லின்பம். அதுதான் காட்பரிஸ் மில்க் சாக்கலேட்டு தரும் பேரின்பம். ஆம். காட்பரிஸ் சுவையென்றால் குணச் சிறப்பின் சுவை, தர மேன்மையின் சுவை, பரிசுத்தமே உருவான பாலின் தூய்மைச் சுவை. இக் கணமே மென்று பாருங்கள் ஒரு சாக்கலேட்டு... இனிமை, இனிமை, எல்லாம் இனிமை!

ஒவ்வொரு சாக்கலேட்டும் பாலின் குணங்கள் அடங்கியுள்ளது!






மிட்டாய் மட்டுமல்ல...ஒரு உணவும் கூட!



## செய்திப் படங்கள்

1. எர்ணுகுளத்தில் மாபெரும் பெட்ரோலியம் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையை நமது பிரதமர் இந்திரா காந்தி அவர்கள் செப்டம்பர் 23ந் தேதி தொடங்கி வைத்தார். பாரதப் பிரதமரோடு தொழிற்சாலையின் மானேஜிங் டைரக்டர் ஜான் லாய், அமெரிக்காவிலுள்ள பிலிப்ஸ் பெட்ரோலியம் கம்பெனியின் தலைவர் ஸ்டான்லி லெனர்ட், பெட்ரோலியம் மந்திரி திரு அளகேசன் ஆகியோரைக் காணலாம். 2. இந்தக் 'கொச்சின் ரிபைனரி'யின் ஒரு தோற்றம்.





3. சென்னை மயிலாப்பூர் ராஜேசுவரி கல்யாண மண்டபத்தில் சென்னை முதன் மந்திரி திரு எம். பக்தவத்ஸலம் அவர்களின் எழுபதாவது பிறந்த நாள் விழாவைச் சிறப்பாகக் கொண்டாடினர். நீதிபதி திரு வீராசாமி தலைமையில் நடந்த இந்த வைபவத்தில் திரு கே. பாலசுப்பிரமணிய அய்யர், ஸ்ரீமதி சௌந்தரா கைலாசம், டாக்டர் டி. எம். பி. மகாதேவன், ஸ்ரீ டி. எம். நாராயணசாமி பிள்ளை முதலியவர்கள் பாராட்டிப் பேசினர்.



4. திரு ஆலடி அருணா எழுதிய 'இந்தி ஏகாதிபத்தியம்' என்ற நூலினைத் திரு அண்ணாதுரை அவர்கள் வெளியிடுகிறார்கள். இடது புறம் சென்னை நகர மேயர் அவர்களையும் இருவருக்கும் மத்தியில் நூலாசிரியரையும் காணலாம்.

5. சென்னை கன்னிமாரா ஹோட்டலில் நடந்த சரளா கலைக் கண்காட்சியை இந் நான்கு பெண் மணிகளின் சித்திரங்கள் அலங்கரித்தன.



# நடந்ததுதான் நம்புங்கள்!

# "ஆண்டவனுக்கு அண்ணன் உண்டா?"



"அண்ணாச்சி! நீங்க ஊருக்குப் பொதுவான மனிதர். இந்த ஊர் நிலவரம் முழுதும் உங்களுக்கு ரொம்ப வருஷமாகத் தெரியும். அந்தக் காலத்திலே எனக்கு எழுத்தறிவைக் கொடுத்த இறைவன் நீங்க. அதே மாதிரி என் தம்பிக்கும் சிலேட்டையும் பலப்பத்தையும் பிடிக்கச் சொல்லிக் கொடுத்தவங்க நீங்கதான். நீங்கதான் இப்போ நேர்ந்திருக்கிற இக்கட்டிலிருந்து நாங்க மீள ஒரு வழி சொல்லிக் கொடுக்க வேண்டும்! காளியாத்தா சத்தியமா எனக்கும் என் பெண்சாதிக்கும் இந்த விஷயம் பற்றி ஒன்றும் தெரியாது!" பெட்டிக்கடை முனுசாமி கண்களில் நீர் ததும்பப் பேசினார். அவருக்கு நாற்பத்தி ஐந்து வயசுக்கு மேலேயே இருக்கும். ஊரிலே எந்த வம்பு தும்புக்கும் போகாத ஆசாமி என்று பெயர் எடுத்தவர். அவர் சம்சாரம் தாயாரம்மாளும் குணத்திலே அவருக்கு ஏற்ற ஜோடிதான்.

"சத்தியம் எல்லாம் இந்தக் காலத்திலே ரொம்ப மலிவான சரக்கு முனுசாமி... நான் உன் விஷயத்திலே இதைச் சொல்கிறதாக நினைத்து விடாதே!... ஆனால் போலீஸ் இலாகாக் கண்களுக்கு அப்படித்தானே இருக்கும், உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடிக்கிறவரை? அவங்களாலே யாரையும் நம்ப முடியாது! அவங்க கடமை அப்படிப்பட்டது. நீ போ! மனசை அலட்டிக்காதே! நம்ப மனசு சுத்தமாயிருக்கிறவரை நாம் எதற்கும் அஞ்ச வேண்டியதில்லே பாரு!" என்று முனுசாமியை அனுப்பிவைக்க முயன்றேன்.

முனுசாமி நகரும் வழியாக இல்லே.

"என் தம்பி வரதன் இதைச் செய்திருப்பான் என்று நீங்கள் நம்பறீங்களா?" என்று ஒரு கேள்வியைப் போட்டார் முனுசாமி.

என்னால் சட்டென்று பதில் சொல்ல முடியவில்லே. வார்த்தைகளைத் தேடிப் பிடித்து வாக்கியங்களாகக் கோத்தேன்.

"முனுசாமி! நீ இந்தக் கேள்வியை ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னாலே கேட்டிருந்தியின்னா நான் பளிச்சுன்னு 'வரதன் நிச்சயமாய் இதைச் செய்திருக்க மாட்டான்' என்று சொல்லியிருப்பேன். ஆனால் அந்தக் கேள்வியை நீ இப்போ கேட்கிறாய். அவனுக்கும் நமக்கும் கடந்த நாலைந்து வருஷங்களாக எந்த விதத் தொடர்பும் இல்லாமல் போய்விட்டது. அற்ப காரணத்துக்காக உன் சம்சாரத்தோட சண்டை போட்டுகிட்டுப் பட்டணத்தைப் பார்க்க ஓடிவிட்டான். அப்புறம் திடீர்னு பத்து நாளைக்கு முன்னாலே இந்த ஊருக்குத் திரும்பி வந்திருக்கிறான். உங்களுக்கு முன்னே பின்னே தெரியாத ஒரு பெண் பிள்ளையையும் தன் மனைவி என்று கூட அழைத்துக் கொண்டு வந்திருக்கிறான். இந்த ஐந்தாறு வருஷ இடைவெளியிலே, அவன் குணம் ஒழுங்கான வழியிலே, முன்னே இங்கே இருந்தபோது இருந்த நிலையிலேயே இருக்கும்னு உன்னாலே சொல்ல முடியுமா?" என்றேன்.

"நீங்க கேட்கிறதும் நியாயமான கேள்விதான். ஆனால் என் தம்பி இப்படித் தப்புத் தண்டாக் காரியம் செய்வான்னு என்னாலே நினைக்கவே முடியலியே!" என்று பொருமினார் முனுசாமி.

"பாசம் வேறே! உண்மை வேறே! ஆங்கிலத்திலே ஒரு சொற்றொடர் உண்டு. 'ஒரு மனிதனை உருவாக்க ஒரு தாயார் இருபது வருடங்களை எடுத்துக் கொள்ளுகிறாள். அதே மனிதனை மடையனாக்க ஒரு மனைவி இருபது நிமிடங்களை எடுத்துக் கொள்ளுகிறாள்' என்பதுதான் அந்த வாக்கியம். வேடிக்கைக்காக எழுதப்பட்டதுதான் என்றாலும் அதிலே உண்மையும் இருக்கிறது என்று நினைக்கிறேன். உன் தம்பியின் குணத்துடன் அவன் புது மனைவியின் குணம் கடந்த சில காலமாக மோதியிருக்குமல்லவா? அதனாலே அவனுக்கு உத்தரவாதம் கொடுக்கிற நிலைமையிலே நீயுமில்லே நானுமில்லே! எல்லாம் பார்க்கலாம்! நம்ப போலீஸ் இன்ஸ்பெக்டர் இந்தக் கேசை, ரொம்பவும் தீவிரமாக விசாரிச்சுக் கிட்டு இருக்கிறார்னு கேள்விப்படறேன். ஒரு வாரம் பத்து நாளிலே சரியான ருசுவோ, தடயமோ அகப்பட்டுவிடும்! நீ போய் வேலையைக் கவனி" என்று சொல்லிவிட்டு எழுந்திருந்தேன்.

"இன்ஸ்பெக்டர் என் கூடப் பேசிக்கிட்டிருந்ததைப் பார்த்தால் அவர் என்னையே சந்தேகப்பட

சொன்னவர் : திருவேங்கடாச்சாரி,
(ரிடையர்டு போலீஸ் இன்ஸ்பெக்டர்)
கேட்டுக் கதைபோல் எழுதியவர் : மேனு.



ஞர்னு நினைக்க வேண்டியிருக்கு! சந்தர்ப்பச் சாட்சியமும் இருக்கே! ஆனல் என்னை ஏன் இன்னும் அவர் கைது செய்யலேங்கறது தான் புரியலே'' என்ருர் முனுசாமி.

''அதுக்கும் ஒரு நேரத்தை எதிர்பார்த்துக் கிட்டு இருப்பார்! அது சரி! வரதன் பயல் எங்கே இருக்கான்னு தெரியுமா?'' என்றேன்.

''அந்த ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம்! அஞ்சாறு வருஷங்களுக்கு அப்புறம் திடீர்னு வீட்டுக்கு வந்தான். ஒரு வாரம் கழிச்சு வந்த மாதிரியே போயிட்டான். போன செவ்வாய்க் கிழமைக்கு முந்தின செவ்வாய்க் கிழமை ராத்திரிக்கெல்லாம் ஏழு மணி பஸ்ஸிலே 'நான் ஊருக்குப் போறேன். என் பெஞ்சாதி இன்னும் இரண்டு நாட்கள் இருந்துட்டு வருவாள்' என்று சொல்லிட்டுக் கிளம்பினன். மறுநாள் காலையிலே அவன் பெஞ்சாதியை வீட்டிலே காணேம். அவளும் புருஷனை விட்டு இருக்கப் பிரியமில்லாமல் கிளம்பிட்டாள்னுதான் நாங்க நெனைச்சோம். ஆனல் அது எத்தனை தப்புன்னு ஞாயிற்றுக் கிழமை அமளி துமளியின்போது தானே தெரிஞ்சது! அந்த வரதன் பயல் பட்டிணத்திலே என்ன பண்ணிக்கிட்டு இருக்கான், எங்கே இருக்கான்னுகூட நாங்களும் கேட்கலே! அவனும் சொல்லலே!... ஹும்! அவனுக்கு இந்த விஷயம் தெரியுமோ தெரியாதோ! பேப்பரிலெல்லாம் கூட வந்திருச்சு செய்தி. இதைப் பார்த்திருந்தா ஓடி வந்திருக்க மாட்டானு?... இது போகட்டும்! நாலு நாளைக் கப்புறம் பெண்டாட்டி ஊர் திரும்பலேங் கறதுக்காகவாவது ஒரு கடிதாசு எழுத மாட்டானு... செய்யலியே! நான் எங்கே போய் அவனைத் தேடுவேன்?'' முனுசாமி கண்களில் நீர் தேங்கியது.

''அங்கேதான் சிக்கல் இருக்கு!'' என்று சொல்லிவிட்டு வலுக்கட்டாயமாக முனுசாமியை அனுப்பி வைத்தேன்.

கிராமத்திலேயே பிறந்து வளர்ந்த முனுசாமி ரொம்ப அப்பாவி. கொஞ்ச நிலபுலன் இருந்தது. ஐந்து வகுப்புவரை தான் படித்தான். ஆனல் உலக ஞானம் நிறைய உண்டு. அவனுக்கும் அவன் தம்பி வரதனுக்கும் பதினஞ்சு பதினறு வயசு வித்தியாசம்.



பெரியவங்க காலமான பிறகு முனுசாமியும், அவன் மனைவி தாயாரம்மாவும்தான் வரதனை வளர்த்து மனுஷனுக்கினுங்க. முனுசாமி பிழைப்புக்கு ஒரு பெட்டிக்கடை தொடங்கினன். தம்பியும் அதிலேயே உட்கார்ந்து குடும்பஸ்தனுக மாறணும் என்பது முனுசாமியின் ஆசை.

வரதனும் அப்படித்தான் இருபது இருபத்தி இரண்டு வயசு வரை இருந்தான். ஒரு நாள் கொட்டுகிற மழையில் பக்கத்து டவுனுக்கு இரண்டாவது ஆட்டம் சினிமாப் பார்க்கப் போய்விட்டு வந்தான். தாயாரம்மாள் உரிமையுடன் கடிந்து கொண்டாள். ஆனால் அந்தச் சொற்களை வழக்கம்போல் ஏற்றுக்கொள்ளும் நிலையிலே வரதன் மனசு இல்லை. ''உங்களுக்கு என்னை ஒழிச்சுக் கட்டிட்டு என் பங்குக்குள்ள நிலங்களையும் நிரந்தரமாக அனுபவிக்கணும்னு ஆசை! அந்த ஆசையிலே நான் சினிமாப் பார்க்கச் செலவழிக்கிறது கூட உங்களுக்கு விருப்பமில்லே. கஞ்சத்தனமான உங்ககூட இருக்கவே எனக்குப் பிடிக்கல்லே. நான் வருகிறேன்'' என்று இரவோடு இரவாகப் போய்விட்டான்.

கொஞ்ச நாட்கள் தேடிப் பார்த்த பிறகு முனுசாமிக்கும் அலுத்துப் போய்விட்டது. தம்பி எங்கே இருக்கிறான் என்று அவருக்குத் தெரியாது.

ஆறு வருடங்கள் கழித்து ஒருநாள் காலையில் எந்த வித முன்னறிவிப்பும் இல்லாமல் வரதன் அண்ணன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். 'இவள்தான் என் மனைவி' என்று ஒரு பெண்ணையும் அறிமுகப்படுத்தினான். பட்டணத்தில் எங்கோ பட்டரையில் வேலை செய்வதாகச் சொன்னான். தம்பியைப் பார்த்த மகிழ்ச்சியில் அண்ணன் தூண்டித் துருவி ஒன்றையும் விசாரிக்கவில்லை. தாயாரம்மாள் கவனித்தமட்டில் அந்தத் தம்பதிகளிடையே அவ்வளவு அன்யோன்யம் நிலவியதாகத் தெரியவில்லை. பிறர் கவனிக்கவில்லை என்று அவர்கள் நினைத்த நேரத்திலெல்லாம் அவர்களிடையே ஏதோ பூசல் இருந்து கொண்டேயிருந்தது.

தாயாரம்மாள் இதைத் தன் கணவரிடம் சொன்னாள். ஒருவேளை, தன் பங்கைப் பிரித்து வாங்கும்படி வரதனைத் தூண்டுகிறாளோ அவன் மனைவி என்ற சந்தேகம் முனுசாமிக்கு எழுந்தது. அப்படியே அவன் கேட்டால், அதையும் செய்துவிடுவது என்று முனுசாமி கணக்கு வழக்குகளைத் தயாராக வைத்திருந்தார். ஆனால் வரதன் என்னவோ அதைப் பற்றிப் பேச்சே எடுக்கவில்லை.

அவன் வந்து சில நாட்களுக்குப் பிறகு திடீரென்று ஒரு செவ்வாய்க் கிழமை மாலை வரதன் அண்ணனின் கடைக்கு வந்தான். தான் அன்றைக்கு ராத்திரியே பட்டணம் போக வேண்டியிருப்பதாகவும் அவன் மனைவி மேலும் இரண்டு நாட்கள் அண்ணியுடன் இருந்து விட்டுப் பிறகு பட்டணம் வரப்போவதாகவும் சொல்லிவிட்டு அப்படியே கிளம்பிவிட்டான்.

மறுநாள் காலையில் தாயாரம்மாள் வரதன் மனைவி வீட்டில் இல்லாததைக் கவனித்தாள். பிற்பகல்வரை அவளைக் காணவில்லை. அவள் பெட்டியையும் காணவில்லை. 'சரி! இங்கே இருக்கப் பிடிக்காமல் புருஷன் பின்னோடு போய்விட்டாள் போலும்!' என்று நினைத்துக் கொண்டாள்.

ஆனால் ஞாயிற்றுக்கிழமைதான் அவள் காணாமற்போன மர்மம் தெரிந்தது.

பக்கத்துக் கிராமத்துக்குப் போகும் பாதையை விட்டுச் சற்று விலகியிருந்த துறவுக் கிணற்றில் மிதந்த கோணிச் சாக்குக்குள் அவள் சடலம் இருந்தது. நிச்சயமாகத் தற்கொலை இல்லை! கொலைதான். துணி, நகை, அடையாளங்களைக் கொண்டு அவள் யார் என்று நிருபிக்கப்பட்டது.

போலீஸார் தீவிர விசாரணையில் இறங்கிவிட்டார்கள். முனுசாமியும் தாயாரம்மாவும் தங்களுக்குத் தெரிந்ததையெல்லாம் சொன்னார்கள். அவர்களுக்குத் தெரியாத விஷயம் வரதன் பட்டணத்தில் எங்கிருக்கிறான் என்பது. இரண்டாவது அவன் மனைவியின் ஊர், உற்றார் உறவினர் விஷயங்கள்.

போலீஸ் இன்ஸ்பெக்டர் பல தடவைகள் முனுசாமியையும் தாயாரம்மாவையும் சேர்த்தும் தனித் தனியாகவும் விசாரித்தார். ஆனால் அவர் யாரையும் கைது செய்யவில்லை.

நான்கைந்து நாட்கள் கழித்து ஊரில் ஒரு வதந்தி அடிபட்டது. அண்ணன் தம்பிகளிடையே பாகப் பிரிவினை பற்றி அபிப்பிராய பேதம் உண்டு. முனுசாமிக்கு நாடோடியாகப் போன தம்பிக்கு ஏதும் பாகம் கொடுக்க விருப்பம் இல்லை. அவனைச் சாமர்த்தியமாக ஒழித்துக் கட்ட விரும்பினார். அதற்காக ஏதோ சாக்குப்போக்குச் சொல்லித் தம்பியை ஊருக்கு அனுப்பிவிட்டு இரவோடு இரவாகத் தம்பி மனைவியைத் தாயாரம்மாள் உதவியுடன் கொன்று சடலத்தைக் கோணியில் கட்டிக் கிணற்றில் போட்டுவிட்டார். போலீசாரின் சந்தேகம் வரதன் மீது விழ இந்த ஏற்பாடு. போலீஸாருக்குத் தன் மீதுதான் சந்தேகம் என்றதும் தம்பி வரதன் இந்தப் பக்கமே எட்டிப் பார்க்கப் பயந்து எங்கோ ஓடி நன்றாக ஒளிந்து கொண்டான். இனிமேல் முனுசாமிக்குச் சொத்து பாகப் பிரிவினை ஆகுமோ என்பது பற்றிக் கவலை இல்லை! பிரஸ்தாப தினத்தன்று காலையில் முனுசாமி, ''சரி சரி! சனியன் ஒழிந்தது என்று கம்மா இரு'' என்று தாயாரம்மாவிடம் கூறியதைப் பக்கத்து வீட்டுக்காரர் கேட்டிருக்கிறார். ஆகவே போலீஸுக்கு முனுசாமி — தாயாரம்மா மேலேதான் இப்போது சந்தேகம் திரும்பி யிருக்கிறது என்பதுதான் வதந்தி.

முனுசாமி என்னை வந்து பார்த்துப் பிரலாபித்துவிட்டுப் போய் நான்கு நாட்களுக்குப் பிறகு போலீஸில் முனுசாமியைக் கைது செய்து ரிமாண்டில் வைத்து விட்டார்கள். ''சரி, சரி! சனியன் ஒழிந்தது என்று கம்மா இரு'' என்று முனுசாமி குறிப்பிட்டது சலவைக்காரன் காணாமற் போக்கிய பழைய துணி! அதை யார் நம்புகிறார்கள்? தாயாரம்மாவுக்கு நான் தைரியம் சொன்னேன். ''ஆண்டவன் இருக்கார், அம்மா! நல்லவங்களுக்குக் கெடுதல் ஒன்றும் வராது'' என்று ஆறுதல் கூறி யனுப்பினேன்.

ஒரு வாரம் கழித்து ஒரு நாள் இரவு ஒன்பது மணி இருக்கும். என் வீட்டு வாயிற் கதவை யாரோ தட்டினார்கள். போய்த் திறந்தேன். வரதன் நின்றுகொண்டிருந்தான். அவன் தலை, சட்டை எல்லாமே கலைந்திருந்தன.

''வாத்தியாரய்யா! எங்க அண்ணனைப் போலீஸிலே பிடிச்சுட்டாங்களாமே? நிஜமா?

உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டான் பதற்றத்துடன்.

''உள்ளே வா வரதா!... நீ கேள்விப்பட்டது உண்மைதான்! உன் பெண்டாட்டியை யாரோ கொலை பண்ணிட்டாங்க தெரியுமில்லே?'' என்றேன் அனுதாபத்துடன்.

வரதன் ஓர் அசாதாரணச் சிரிப்புச் சிரித்தான். ''யாரோ கொன்னுட்டாங்களா?... நான் கொன்னேன் வாத்தியாரையா! அவள் பொம்பிளேயா? பேய்!... ஒழிச்சுட்டேன்.. எனக்கு அந்த வித்தையைச் சொல்லிக் கொடுத்தவளே அவள்தானே?... என் அண்ணன்கிட்டே எனக்கு எவ்வளவு ஆசை? என்னைப் போயி பிள்ளை குட்டியில்லாத அண்ணனுக்கு விஷம் கொடுத்துச் சாகடிச்சுச் சொத்தையெல்லாம் முழுசாக அமுக்கணும்னு சொன்னாள். 'அப்படியா சமாசாரம்? பெத்தவங்களுக்கு மேலே என்னை வளர்த்து மனுஷனாக்கிய அந்த உத்தமனை ஒழிச்சுக் கட்டவா யோசனை சொல்றே! வா! உன்னையே ஒழிச்சுப்புடறே'ன்னு ஒரு பிளான் போட்டுச் சனியனை ஒழிச்சேன். ஆனால் போலீஸிலே என் அண்ணனைச் சந்தேகிப்பாங்கன்னு கனவிலேயும் நினைக்கலே. விஷயத்தைக் கேள்விப்பட்டதும் என் உடம்பு பதறிப் போச்சு. எங்க அண்ணன் எனக்குத் தெய்வம் மாதிரி. தலை மறைவாப் போயிடணும்கிற ஆசையை விட்டுட்டு இதோ ஓடி வந்துட்டேன். தயவுசெய்து என்னைப் போலீஸ் ஸ்டேஷனுக்கு நீங்களே கூட்டிக்கிட்டுப் போய் ஒப்படைச்சுடுங்க! எங்க அண்ணனை விடுவிக்கச் சொல்லுங்க.''

வரதன் அழுதேவிட்டான். சகோதர பாசம் அதில் பொங்கி வழிந்தது.

போலீஸ் இன்ஸ்பெக்டர் எங்களை எதிர் பார்த்திருப்பது போல் வரவேற்றார். ''இந்த ஆசாமிதான் வரதனா?... இவன் வருவான்னு எனக்கு நன்றாகத் தெரியுமே!... ஏனப்பா வரதா! அன்றைக்குச் சாயங்காலம் பட்டணத்துக்குப் போக பஸ்ஸிலே டிக்கட் வாங்கிட்டே. ஆனால் பக்கத்துக் கிராமத்திலேயே இறங்கிட்டே! உன் கையிலே ஒரு பை இருந்தது. அந்தப் பையிலிருந்த ஒரு கோணிச் சாக்கை எடுத்துக் கிராமத்துச் சாவடித் திண்ணையிலே படுத்திருந்தே. காலையிலே கருக்கல்லே எழுந்து உங்க ஊர் பக்கமா நடந்து போனே. போகிறபோது கோணி உங்கிட்ட இருந்தது. திரும்பி வர போது இல்லே. ஏழு மணிக்கெல்லாம் நீ இறங்கின இடத்திலேயே திரும்ப பஸ் ஏறிப் போயிட்டே! அதற்கெல்லாம் வலுவான சாட்சியங்கள் இருக்கு. ஆனாலும் ஏன் உன் அண்ணனை மிரட்டி உள்ளே வைச்சேன் தெரியுமா? உங்க அண்ணனுக்கு ஒரு கெடுதல் ஏற்பட நீ சகிக்க மாட்டாய் என்று அவர் பேச்சிலிருந்து தெரிந்து கொண்டேன். உன்னைப் பட்டணத்தில் தேடிக் கண்டுபிடிக்க அலைவதை விட உன்னை இங்கே வரவழைக்க இந்த உபாயத்தைக் கையாண்டேன். எந்த நிமிடத்திலும் அவரை விடுவிக்க உத்தரவு வாங்கி வைத்திருக்கிறேன்'' என்றார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

தான் சொல்ல வேண்டிய வாக்குமூலத்தைத் தெளிவாகவே சொன்னான் வரதன்.



''டைப் அடிக்கும் போது, பார்த்து ஜாக்கிரதையாக அடிம்மா.''

''ஓ! நான் தப்புத் தப்பாக டைப் அடிப்பேனென்று பயப்படுகிறீர்களா?''

''அதற்காகச் சொல்லல்லே! டைப் ரைட்டருக்குள் ஒரு குட்டித் தேள் புகுந்ததை, நம்ம பியூன் கோவிந்தசாமி பார்த்தானாம்!''

தன் அண்ணனுக்கு விஷம் வைக்க அவள் யோசனை சொன்னதும் அவன் அதற்கு ஒப்புக் கொண்டவன் போல் நடித்து, 'சரியான யோசனை!...நான் இன்னிக்குச் சாயங்காலமே பக்குவமா அவங்க ஆகாரத்திலே விஷத்தைச் சேர்த்துட்டு நான் ஊருக்குப் போறதாகச் சொல்லிக் கிளம்பிப் பக்கத்துக் கிராமத்திலே போய் இருக்கேன். நீ ராத்திரி ஒன்றும் சாப்பிட்டுவிடாதே! காலையிலே இருள் விலகற நேரத்திலே கிளம்பி நடந்து பக்கத்துக் கிராமத்துக்கு வந்துவிடு. நான் உன்னைப் பாதி வழியிலே பார்த்துக் கூட்டிக்கிட்டுப்போயிடறேன். விஷம் நாளைக்கு மத்தியானம் வேலை செய்யும். ஆகாரக் கோளாறுலே போயிட்டாங்கன்னுதான் சொல்லுவாங்க. நாம் செய்தி கேட்டு வந்தது போல் மறு நாளைக்கு வருவோம்' என்று சொல்லிவிட்டு வரதன் கிளம்பினானாம். மறுநாட் காலையில் துறவுக் கிணற்றண்டை காத்திருந்து அவளையே தீர்த்துட்டானாம்! அண்ணன்மீது அவனுக்கு அத்தனை பாசம்! அன்பு!

''அண்ணாச்சி!... ஆண்டவன் இருக்கான்! உண்மை. ஒத்துக்கறேன். ஆனால் அந்த ஆண்டவனுக்குக் கூடப் பிறந்த அண்ணன் தம்பி யாருமில்லே போலிருக்கு! சகோதர பாசத்தைப் பற்றிக் கொஞ்சமாவது அவனுக்குத் தெரிஞ்சிருந்தால், என் தம்பிக்கு ஆயுள் தண்டனை வாங்கிக் கொடுத்து என்னை இப்படித் தனியாக விடுவானா?'' என்று முனுசாமி என்னைப் பார்க்கும்போதெல்லாம் பிரலாபிக்கத் தவறுவதில்லை!



## தேன் மழை

ஒருவருக்கு ஆடியபாதம் என்று பெயர் வைத்து விட்டால் அவர் பாதம் ஆடிக் கொண்டே இருக்கிறதா, என்ன? ஒருவர் பெயர் கண்ணாயிரம் என்று இருந்தால் அவருக்கு ஆயிரம் கண்களா இருக்கின்றன? அதே மாதிரி இந்தப் படத்துக்கு இந்தத் தலைப்பு எப்படிப் பொருந்துகிறது என்று பார்த்துக் குழம்புவதில் பொருள் இல்லை. ஒரு படம் என்றால் அதற்கு ஒரு பெயர் இருக்க வேண்டுமல்லவா? அவ்வளவுதான்.

மஞ்சள் பத்திரிகை ஆசிரியர் மர்மமாகக் கொலை செய்யப்படுகிறார். அந்தக் கொலை பற்றிய துப்பறியும் கதை ''தேன் மழை''.

'சோ'வுக்கும் நாகேஷுக்கும்தான் இந்தப் படத்தில் 'சான்ஸ்' அதிகம். நிரபராதியைத் தப்புவிப்பதற்கு வேண்டிய தடயங்களை வில்லனிடமிருந்து தந்திரமாக அபகரிக்க முயன்று அவர்கள் இருவரும் அடிக்கும் கூத்து சொல்லி முடியாது. நடக்க இயலாதவன் மாதிரி நோயாளி வண்டியில் உட்கார்ந்து அட்டகாசம் பண்ணும் நாகேஷும், அவருக்குச் சிகிச்சை செய்யும் டாக்டராக வரும் 'சோ'வும் சேர்ந்து கொண்டு எல்லாரையும் சிரிக்க வைக்கின்றனர். பிரதான கதையை விட இந்தத் தமாஷ் பகுதி படத்தில் அதிகமாக ஆக்கிரமித்துக் கொள்ளுகிறது. ஆகவே, பிரதான கதை மறந்து விடுகிறது!

நிரபராதி பாஸ்கரின் பாகம் ஜெமினி கணேசனுக்குப் பொருத்தமானதுதான். கே. ஆர். விஜயா நிர்மலாவாக வந்து பார்வையிலேயே பரிவையும், பாசத்தையும், கனிவையும், காதலையும் காட்டிக் கண்ணீரையும் உகுத்து நடிப்பில் நல்ல பெயரைத் தட்டிக் கொள்கிறார். ஆனால் நிர்மலா தன் வீட்டில் தனிமையிலே ஆடிப் பாடி மகிழும் காட்சி ஏனோ அசடு வழிகிறது.

வில்லனாக வரும் சுந்தரராஜன் கம்பீரமாகவும், அழுத்தமாகவும் பேசி நடிக்கிறார்.

திரைக் கதை, வசனம் தீட்டியிருப்பவர் 'சோ'. வசனம் நகைச்சுவை ததும்ப அமைந்திருக்கிறது.

பாடல் ஒன்றும் நன்றாக இல்லை.

ஆரம்பத்தில், நடிக, நடிகையர்களை அறிவிக்கும் 'பாணி' நன்றாயிருக்கிறது. கார்ட்டூன் மாதிரி அவர்களை நடை பயில விட்டிருப்பது ரஸிக்கத் தக்கது.

முக்தா பிலிம்ஸின் ''தேன் மழை''யை முழுமையாகப் பார்க்கும்போது மனத்தில் எதுவும் தங்கவில்லை. வானம் இருண்டிருக்கிறது — ஆனால் மழை பெய்யவில்லையென்றால்?

## தனிப் பிறவி

''எந்தப் புற்றில் எந்தப் பாம்பு இருக்குமோ?'' என்பது தனிப் பிறவி படம் தரும் பாடம். கொல்லூப் பட்டரை இரத்தினம் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவன் என்பது மகன் முத்தையனுக்குத் தெரியாத விஷயம். தன் தங்கை சிவகாமிக்குக் காதலன் ரவி கிடைத்தானென்று மகிழ்கிறான் முத்தையன்; அவனும் கொள்ளைக் கூட்டத்தைச் சேர்ந்தவன் என்பது சஸ்பென்ஸ்! கடைசியில் முத்தையனே கொள்ளைக் கூட்டத் தலைவனாக வேஷமிட்டுப் போலீசுக்குக் காட்டிக் கொடுக்கும் 'தனிப் பிறவி'யாக விளங்குகிறான்.



'தனிப் பிறவி' எம். ஜி. ஆர். என்றால் குத்துச் சண்டை, 'கும்கும்' அடிகளுக்குப் பஞ்சமில்லை. ஆனால் இத்தனை அடிகளும், குத்துக்களும் வாங்கும் சண்டைக்காரர்கள் முகத்தில் சிறு காயமோ, ரத்தமோ காணோம்! எம். ஜி. ஆர். முருகன் வேஷத்தில் வருவது காணக் கிடைக்காத காட்சி!

'குமரிப் பெண்' படத்திலிருந்து படத்துக்குப் படம் கதாநாயகி 'பாண்டு'டன் காட்சியளிக்கிறாள்! ஆனால் அது பழைமையாகித் திகட்டி விட்டதே!

நாகேஷ் — மனோரமா — ராமசாமி ஹாஸ்ய விருந்தை அளிக்கின்றனர்.

காதல், சண்டைக் காட்சிகளுடன் 'தனிப் பிறவி' மற்றப் படங்களிலிருந்து தனித்து நிற்கிறது.




(ஜஞ்சே லோக்) ✽ 

# மேன்மக்கள்

தமிழ் நாடக மேடையிலே 'புதுமை, புதுமை' என்று போற்றப்பட்ட 'மேஜர் சந்திரகாந்த்' நாடகம்தான் ஹிந்தியில் 'மேன் மக்கள்' என்று பொருள் தரும் ஜஞ்சே லோக்' படமாக வெளி வந்துள்ளது.

நாடகத்தின் புதுமையையும் மேவிவிட்டது படத்தின் புதுமை. இப்படி ஒரு புதுமையைத் திரைப்பட உலகில் புகுத்தியவர்கள் மிகத் துணிச்சல்காரர்கள்; மெய்யாகவே திரைப் படத்தில் ஒரு புரட்சியை உண்டு பண்ணியவர்கள். திரைப்படத்தின் முன்னேற்றத்தைக் காண விழைபவர்களால் மனமாரப் பாராட்டப்பட வேண்டியவர்கள்.

இந்தத் திரைப் படத்தில் பெண் நடிகைக்கு அதிக வேலை வைக்கவில்லை. கூத்தும் கேளிக் கையுமாகக் காட்டப்படும் அலங்கோலக் காட்சிகளுக்கு இடம் தரவில்லை. ஹிந்தித் திரையுலகுக்கு கே. ஆர். விஜயாவை அறிமுகப்படுத்துவதாக விளம்பரம் செய்தவர்கள் அவருக்கு அதிகம் வேலை வைக்காமலே படம் பிடித்திருக்கிறார்கள். எனவே, திரையில் நடிக்காமலே நடித்த அவரது நடிப்பு 'ஏ ஒன்' என்று நாம் பாராட்டிவிடலாம்; அப்படி நாம் பாராட்டுவது அவரது நடிப்புக்குப் பாதகம் விளைவித்துவிட முடியாது!

மேஜர் சந்திரகாந்தாக வரும் அசோக் குமார் — கதைப்படி குருடர் — பாத்திரத்தின் தரமறிந்து நடித்திருக்கிறார் என்று கூறுவதைக் காட்டிலும் அந்தப் பாத்திரமாகவே ஆகிவிட்டார் என்று கூறுவதே பொருந்தும். அதோடு மேன்மக்கள் மேன்மக்கள்தான் என்பதை நிரூபிப்பதேபோல் நடித்து ரசிகர்களின் மனத்தில் நடிப்புக்கு ஓர் அசோக் குமார் என்று இடம் பெற்றுவிட்டார். அவரது மகன் ஸ்ரீகாந்தாக வரும் ராஜகுமார் தமது நடிப்பின் மூலம் அப்பனுக்கேற்ற பிள்ளையாக நடித்துத் திரையுலகத்தில் தமக்கும் ஒரு நிலையான பெயர் தேடிக்கொண்டு விட்டார்.

இப்படிப் போட்டி போட்டுக்கொண்டு இருவரும் சேர்ந்து உயிர் ஊட்டும் இந்தப் படம் இடைவேளை வரை இதயத்துக்கு இதமளிக்காதது ஒரு பெருங் குறையே. நகைச்சுவை பெருங் கேலிச் சுவையாகி, இவ்விஷயத்தில் ஹிந்திப் படம் முன்னேறப் பல யுகமாகுமோ என்றே சிந்திக்க வைக்கிறது. கத்திரிக்கோலை நன்றாகச் சாணை பிடித்து, தயவு தாட்சிண்யமின்றி வேண்டாத பகுதிகளை வெட்டிப் படத்தைச் சிறியதாக்கியிருந்தால், காரம் போகாத கடுகாக மணத்திருக்கும். அதோடு இந்தப் படத்தில் பெண் நடிகை ஒருத்தியைப் போட்டிருப்பதைப் போடாமலே விட்டிருந்தால்...அமெச்சூர் நாடகங்களில் பணத்துக்காகப் பயந்து பெண் நடிகர்களை மேடையில் விடாமல் திரை மறைவிலிருந்து பேசச் செய்வது போலச் செய்திருந்தால், இன்னும் பிரமாதமாயிருந்திருக்கும்.

மேஜர் சந்திரகாந்த் ஒருசமயம் அதிக நரையோடு காணப்படுகிறார். மற்றொரு சமயம் கருமையான கேசங்களோடு காட்சி தருகிறார். ஒப்பனைக்காரர்களின் இந்தக் கைவண்ணத்தை என்னவென்று சொல்ல?

ஹிந்தியில் ராஷ்டிரபதி பரிசைப் பெற்ற இக்கதை தமிழிலும் படமாகப் போகிறதாகச் செய்தி அடிபடுகிறதே! பணி மஜும்தாரின் இந்தத் துணிச்சலை அவர்களும் மேற்கொண்டு மெருகேற்றினால் தமிழ்த் திரையுலகம் உலகத் திரையுலகத்தில் நற்பெயர் எடுத்துவிடும் என்பதில் ஐயமில்லை.

# காற்றினிலே



அத்தியாயம் 8

## திருமணமா? மறுமணமா?

"ஏன் இப்படி மனம் வெதும்பிக் கிடக்கிறீர்கள்? டாகூர் துவாரத்துக்காவது போகலாமே?" என்று ரத்தன்சிங்கை அழைத்தாள் சந்திரமுகி.

ரத்தன்சிங் வேதனைச் சிரிப்புச் சிரித்தான். "டாகூர் துவாரத்துக்குச் செல்வதா சதிக் கூட்டத்துக்கோ, போர்க்களத்துக்கோ செல்வதா என்று நான் யோசிக்க வேண்டியதாகி விட்டது. அன்று நான் தந்தையாரிடம் பெரிதாகப் பேசினேன்: ஒரு நாட்டில் வீரத்தையும் பக்தியையும் இறைவனே ஒரு விகிதாசாரப்படி கலந்து நிர்ணயிப்பான் என்று. நாடு மட்டுமல்ல, ஒவ்வொரு தனி மனிதனும்கூட பக்தியையும் வீரத்தையும் தன்னிச்சைப்படி நிர்ணயித்துக் கொள்ள முடியாது போல்தான் தோன்றுகிறது. ஏனென்றால் இந்த ராஜகுலத்தில் பிறந்து விட்டால் அப்புறம் தனிமனிதனாகத் தன்னை நினைத்துக் கொள்வதற்கே விதியில்லை போலிருக்கிறது. நான் என்னைத் தனி மனிதனாக நினைத்து என்னுடைய சுய இயல்பு என்று ஒன்றைக் கருதி அவ்வழியில் செல்லப் பார்க்கிறேன். இதனால்தான் தந்தையார் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. சோதரர்கள் மல்தேவும், ராய்மல்லும், வீர்சிங்கும் என்னை வெறுக்கிறார்கள். ராஜஸ்தானத்தின் வீர பரம்பரைக்கே ஒரு களங்கமாக நான் வந்திருக்கிறேன் என்று கருதுகிறார்கள்.

# வரும் கீதம்

ரா. கணபதி



மேர்தா மக்களை க்ஷத்ரிய தர்மத்தில் நடத்திச் செல்லவே பிறந்த ஒருவன் நான் என்றும், எனவே நான் ஒரு தனி மனிதன் என்பதை அறவே மறந்துவிட வேண்டும் என்றும் வற்புறுத்துகிறார்கள். அந்தத் தியாகம் புரிய என்னால் முடிய வில்லை. கண்ணனை எப்படித் தியாகம் செய்வேன்? ஆனால் கண்ணனைக் கேட்டால் அவன் என்ன சொல்வானோ? அர்ஜுனனிடம் சொன்னது போல், ''யுத்தம் செய், அதுதான் உன் கடமை. நீ நேரடியாக என்னைப் பூஜிப்பதைவிட அதுவே எனக்கு உண்மையான பூஜையாக இருக்கும்'' என்பானோ என்னவோ? சந்திரமுகி, என்னைப் பற்றிக்கூட எனக்குக் கவலையில்லை. என்னுடைய பக்தி அற்பமானது. அதை ஒருகால் நான் விட்டு விடவும் கூடும். ஆனால் குழந்தை மீராவின் பக்தி எவ்வளவு அற்புதமானது? அவள் போயும் போயும் இந்த ராஜபுதனத்திலே வந்து இச்சமயம் பார்த்துப் பிறந்து விட்டாளே என்றுதான் துயரப்படுகிறேன். பொரியும் மணற்பரப்பில் விழுந்த நீர்த் துளிபோல் அவள் இந்தச் சூழ்நிலையில் தவித்துப் போவாளே என்றுதான் துயரப்படுகிறேன்'' என்று விம்மினான் ரத்தன் ஸிங்.

அச்சமயத்தில் அங்கு குழந்தை மீராவே வந்து சேர்ந்தாள். தகப்பனாருடைய தொங்கிய முகத்தைத் தூக்கினாள்.

ரத்தன்சிங் பரிதாபம் தோய்ந்த கண்களுடன் துள்ளித் திரியும் அந்தக் குழந்தையைப் பார்த்தான்.

"மீரா! நல்ல வேளையாக நீ குழந்தையாக இருக்கிறாய்! அதனால் நீ சந்தோஷப்பட முடிகிறது. இப்போதே முடிந்தமட்டில் சந்தோஷப்பட்டு விடு!" என்றான். துக்கம் அவனைக் கவிந்து கொண்டது.

"ஏன் இப்படி எதையோ பறி கொடுத்த மாதிரி ஆகிவிட்டீர்கள்? உங்களுக்கு என்ன வந்து விட்டது என்றே புரியவில்லை" என்றாள் சந்திரமுகி.

"ஏன் 'பறி கொடுத்த மாதிரி' என்கிறாய்? உண்மையிலேயே பறி கொடுத்தாயிற்று" என்றான் ரத்தன்.

"அப்பா, புதையல் கெட்டுப் போய் விட்டதா? கண்ணனும் புதையல் போலவே காணாமற் போவான். தெரியுமோ? அப்புறம் அகப்பட்டு விடுவானாம். பாகவதத்தில் அப்படி இருப்பதாகப் புஜாரி சொன்னார்" என்றாள் மீரா பளிச்சென்று.

"நான் அவனைத் தேடவே மறக்கும் போது எப்படி அகப்படுவான் கண்ணே?" என்று துயரத்துடன் கேட்டான் ரத்தன்.

"அச்சச்சோ! இதுகூடத் தெரியாதா உங்களுக்கு? காணாமல் போன அப்புறம் அவனே நம்மைத் தேட ஆரம்பித்துவிடுவான். அப்புறம் வந்து பிடித்துக் கொள்வான்" என்றாள் மீரா.

குழந்தையின் வாக்கு தெய்வ வாக்காகப் பலித்தது. சதிக் கூட்டத்துக்கும், போர்க் களத்துக்கும் செல்லாத ரத்தன்சிங் டாகுர் துவாரத்துக்கும் செல்லவில்லை. ஆனால் கண்ணனே அவனைத் தேடி வந்தான்; அவனைத் தன்னிடம் எடுத்துக் கொண்டான்!

**க**ணவனுடன் உடன்கட்டை ஏறுவது தான் பொதுவாக ராஜபுதன ஸ்திரீகளின் வழக்கம். ஆயினும் குழந்தை மீராவை வளர்க்கும் பொருட்டு சந்திரமுகி உயிர் வாழ்ந்துதான் ஆகவேண்டும் என்று புத்திர சோகமுற்ற ராவ்தூதா விதித்து விட்டார்.

நாதனிழந்த சந்திரமுகி நாதமிழந்த வீணையாக உயிர் வாழ்ந்தாள். ஆனால் மீராவை வளர்ப்பதற்காக அல்ல; மீராவால் வளர்க்கப்படுவதற்காகவே.

மீரா வளர்ந்தாள். பக்தியில் வளர்ந்தாள். அதாவது துயரத்தில் வளர்ந்தாள். ஆம், கண்ணனைக் கூடிய இன்ப பக்தி மெல்லக் கரைந்து போய், கண்ணனைப் பிரிந்த துயர பக்தியாகவே ஆகி விட்டது அவளது வாழ்க்கை. "புதையல் மறைவது போல் மறைவேன்" என்று மொழிந்த கண்ணன் அதன்பின் ஏனோ மீராவுக்குத் தரிசனம் தரவேயில்லை.

ஆரம்ப காலத்தில் கிரிதர விக்கிரகத்திலேனும் அவ்வப்போது உயிருடன் வாழ்ந்தான். அவனது கண்கள் ஒரு சமயம் சிரிப்பில் மலரும்; இன்னொரு சமயம் கோபத்தில் சிவக்கும்; பிறிதொரு சமயம் துயரத்தில் சலனமற்று நிற்கும். அந்தந்த பாவத்துக்கு அநுசரணையாக மீரா உபசரிப்பாள். அவனுடைய புருவம் இம்மி நெரிந்தால் என்ன பொருள், அவனது இதழ்க்கடை இம்மி நெளிந்தால் என்ன பொருள் என்பதெல்லாம் அவளுக்கு மட்டுமே தெரிந்திருந்தது. ஏன், கண்ணன் நகைப்பதும், சினமுறுவதும், துக்கப்படுவதும்கூட அவளது கண்களுக்கு மட்டுமே தெரிந்தன.

விக்கிரகத்துடனேயே அறுபது நாழியும் வசித்தாள். அதற்குத் தைல ஸ்நானம் செய்விப்பாள். வாசனைப் பொடி தேய்ப்பாள். பிறகு அவனது காது மடல்களிலும்கூடச் செம்பஞ்சைத் திரித்து விட்டுச் சுத்தம் செய்வாள். அன்னம் படைப்பாள் அமுதனுக்கு. இவள் கண்களை மூடிக்கொண்டால் மட்டுமே, அதில் ஒரு முந்திரிப் பருப்பையோ, கனியையோ, பிடி அவலையோ அவன் எடுத்துக் கொள்வான். இதற்கெல்லாம் மேலாகத் தன்னையே நிவேதனமாக அவனுக்கு அளித்தாள் மீரா.

ஆனால் நாட்கள் செல்லச் செல்லச் சிலையில் பிரஸன்ன பாவத்தைக்கூடக் கண்ணன் நிறுத்திக்கொண்டு விட்டான். மீராவைச் சோதனை செய்தான் என்று மட்டும் அதைச் சொல்லி விடலாமா? தன்னையே சோதனை செய்து கொண்டான் என்றும்தான் கூறவேண்டும்.

இந்தத் துயரத்தோடு இன்னொரு துயரமும் சேர்ந்து கொண்டது. சிசோதியா—ராட்டோர் பிணவோடு, ரத்தன்சிங்கின் மறைவும் சேர்ந்ததால் டாகுர் துவாரத்திலும் அரண்மனையிலும் கண்ணன் விழாக்கள் யாவும் நின்று விட்டன. ஊரே பொலிவிழந்து போயிற்று. சதிகளில் இறங்கி விட்ட மேர்தாவுக்கு கோஸ்வாமிகளும், ஹரிதாஸர்களும் வருவது அடியோடு நின்று போயிற்று. பஜனைகளுக்கும், பக்தர் சேவைக்கும் ஏங்கினாள் மீரா.

அரண்மனையிலேயே அவளுடைய கிரிதர கோபாலனைப் பூஜிப்பதில்கூட அவளுக்கு ஏதோ ஒரு தயக்கம் ஏற்படலாயிற்று. தாத்தா அதை விரும்பவில்லை என்பதைக் குழந்தை உள்ளம் புரிந்து கொண்டது. எனவே, கண்ணனை வாவென்று அழைக்கும் போதே, அவன் வந்துவிட்டால் எப்படி விருந்திடுவது, அவன் சயனிக்க எப்படிக் காசிப் பட்டு விரிப்பைத் தருவது என்றும் கலங்கினாள் மீரா. 'அரண்மனையில் விருந்திட முடியாவிட்டால் என்ன? வீடு வீடாகச் சென்று பிச்சை வாங்கி வந்து பிரியனுக்கு இடலாமே' என்று அடுத்தகணம் எண்ணுவாள். ராஜபோகத்தையும், அதற்குள்ளே அமைந்த சோகத்தையும் விட்டு ஏதுமற்ற ஏழையாக நிச்சிந்தையாக ஊர்தோறும் பிச்சை எடுக்க வேண்டும் என்று ஆசைப்படுவாள். கண்ணனுக்குக் காசிப்பட்டு மெத்தை விரிக்க முடியாவிடில் என்ன? காட்டு மலர்களைப் பறித்து வருவதை யாரும் தடுக்க முடியாதே! அந்த மரங்களும் ஆசை ஆசையாக மாதவனுக்கென மலர் தருமே! அவற்றை வாரி எடுத்து வந்து கிரிதரனுக்குத் தரலாமே! அதோடு கனி மரங்கள் உதிர்க்கும் பழங்களையும் பரமனுக்குப் படைக்கலாமே!' என எண்ணு

வாள். இவ்வளவெல்லாம் செய்வதெனில் கண்ணனை நேருக்கு நேராகக் காண வேண்டுமே! அதையும்கூடத் தவருக எடுத்துக் கொள்வார்களோ? அப்படியாயின் உச்சி மாடத்துக்குச் சென்று பலகணி வழியாக வேனும் அவனைக் கள்ளத்தனமாகப் பார்க்க வேண்டியதுதான் என்று எண்ணுவாள்.

எண்ணமே பண்ணில் வரும். பாடுவாள்:

வருவாய் வந்தென் விழி தன்னில்
பதிவாய், மோகன வடிவமுகா!

உணவுக்குயிர் தரும் லவணம்போல்
உணர்வுக்குயிர் தரும் லாவண்யா!
நாவினில் இனிக்கும் மது போலே
மனத்தினில் இனிக்கும் மதுர நாதா!

படிப்படி ஏறிப் பிச்சை புகுந்து
பணியாரமும் பழமும் படைத்திடுவேன்
வனம் வனம் சென்று வண்ணமலர் கொணர்ந்து
வண்டினம் மொய்க்கும் பாயல் விரிப்பேன்

உப்பரிகை ஏறி உச்சிமாடத்தில் நின்று
சாளரத்தால் உன்னை மீளவும் காண்பேன்
குன்றையெடுத்த எந்தன் குணக்குன்றே
தாமரைப் பாதத்தைத் தாரகம் தாராய்

மீரா வளரத்தான் வளர்ந்தாளா? சொல்வதற்கில்லை. குழந்தையாக இருந்தபோதே முழுமை பெற்று விட்டாளல்லவா அவள்? அப்புறம் வளர இடம் எங்கு இருந்தது? வளர முடியாமல் பல நெரிசல்களிடையே குமைய அல்லவா தொடங்கி விட்டாள்?

வளர்ச்சியோ, தேய்வோ இவையெல்லாம் உள்ளுலகத்தைப் பற்றிய விஷயங்கள். இருவேறு உலகங்களில் வசித்த மீரா வெளி உலகப் பார்வைக்கு எப்படி வளர்ந்தாள்? நன்ருகவே வளர்ந்தாள். பேதை பெதும்பையாளுள். பெதும்பை மங்கையாளுள். மங்கை மடந்தையாளுள்.

**மீ**ரா வளர்ந்து வருகையில் ராஜஸ்தானத்தின் இரு பெருங்குடியினரிடையே துவேஷமும் வளர்ந்து வந்தது.

ராகவதேவனைச் சூழ்ச்சியால் கொன்ற ரண்மல்லேயும் அதே விதத்தில் ஒழிக்க வேண்டுமென்று சிசோதியர்கள் திட்டமிட்டனர். போர்க்களத்திலன்றிச் சதியின் மூலம் காரியம் சாதிப்பதைச் சண்டன் ஒப்பமாட்டார் என்பதால் அவர் அறியாமலே தங்கள் இட்டத்தை முடிக்க முற்பட்டனர்.

ரண்மல்லின் ஆசைநாயகியான பார்மலி என்ற சேடியைக் கையில் போட்டுக்கொண்டனர் சதிகாரர்கள். அவள் ஒரு நாள் ரண்மலுடன் சிருங்கார சாகஸங்கள் புரிவது போல் நடித்துக் கோப்பை கோப்பையாக அவனுக்கு மது அளித்தாள். ரண்மல் போதையேறிக் கிடக்கும் போது, பார்மலி மிகவும் கொஞ்சலாக, ''என்னை அடிக்கடி விட்டுவிட்டு ஓடிவிடுகிறீர்களே; இனி மேல் நீங்கள் என்னை விட்டுப் பிரியவே முடியாதபடி கட்டிப் போடட்டுமா?'' என்ருள்.

''ஆகா, உன்னுல் கட்டுப்பட நான் பாக்கியம் அல்லவா செய்திருக்க வேண்டும்? இந்தா, இதனுல் என்னைக் கட்டிப் போடு'' என்று கூறித் தனது வெகு நீண்ட தலைப் பாகையை அவளிடம் வீசினுன் ரண்மல்.

அதனுல் அவனை வளைத்து வளைத்துக் கட்டிலுடன் கட்டிப் போட்டாள் பார்மலி.

அடுத்தகணமே சிசோதிய வீரர்கள் திமுதிமுவென உள்ளே புகுந்தனர்.

அவர்களின் தலைவன் ரண்மல்லைப் பார்த்துத் திக்கக்கிக் கொண்டு நகைத்தான். ''எங்கள் ராகவதேவ்ஜியின் கையைச் செயலற்றதாக்கிக் கொன்ற பாபி, இப்போது நீ எப்படி எங்களோடு போரிடுகிருய், பார்ப்போம்'' என்று கூறி வாளைப் பாய்ச்சினுன்.

மாவீரனுன ரண்மல் அந்த நிலையிலும் கட்டிலோடு சேர்ந்து எழுந்து நின்று போரிட முயன்ருன். கைக்குத் தட்டுப்படும் பொருள்களையெல்லாம் சீய்த்துச் சீய்த்து விரோதியர் மீது குறி தவருமல் எய்தான். இருப்பினும் வயோதிகனுன ஒருவன் — கட்டுப்பட்ட நிலையில் — இளைஞர் பலரை எதிர்ப்பது எவ்வளவு நாழிகைக்குச் சாத்தியம்? ராட்டோர்களின் இணையற்ற தலைவன் ரண்மல் நெடுமரம் விழுவதுபோல் விழுந்து மாண்டான்.

இனி ராட்டோர்கள் சித்தோரில் தலைதூக்க முடியாது என்று கண்டு கொண்டான் ரண்மல்லின் மகன் ஜோதா. மேவாரிலிருந்து தங்களது பூர்விகமான மார்வாரின் எல்லைக்கே ஓடினுன். அவ்வப்போது தன் படையுடன் உள்ளே புகுந்து தாக்கிச் சிறு சிறு வெற்றிகளும் தோல்விகளும் அடைவான்.

சித்தோர் மகாராணுவின் மாபெரும் சேனைக்கு ஜோதாவை அடக்குவது பெரிய காரியமல்ல. எனினும், ஜோதாவை விட்டு வைத்திருந்ததற்கு ஒரு காரணம் உண்டு. அவனது அத்தையான ஹம்ஸாபாய் கும்பாஜி

## இந்தக் காலத்தில் சொன்னது !

இந்தக் காலத்தில் ஜனங்
களுக்குத் தலைமை தாங்கி
நடத்திச் செல்லும் வேலை பெருங்
கஷ்டமாக இருக்கிறது. ஏனென்ருல்
அவர்கள் உங்களைப் பின்பற்றுகிருர்
களா, அல்லது துரத்துகிருர்களா
என்று உங்களால் நிச்சயிக்க முடிவ
தில்லை.

ஆதாரம்: வால் ஸ்டீரீட் ஜர்னல்
தகவல்: அ. பாண்டியராசன்.



ராணாவின் பாட்டியாக இன்னமும் உயிரோடிருந்ததுதான் காரணம். ரண்மல் கொலையுண்டபின் அவள் மனமிடிந்து போயிருந்தாள். ரண்மல்லைக் கொலை செய்த முறையில் சிசோதியத் தலைவன் சண்டனும் மிகுந்த அதிருப்தியுற்றிருந்தார். எனவே, அவரே தமக்குரிய பெருந்தன்மையுடன் கும்பராணாவிடம் ஜோதாவை மிகவும் தாக்கிக் கஷ்டப்படுத்த வேண்டியதில்லை என்றும், அவ்வப்போது அவனைச் சமாளித்தாலே போதும் என்றும் கூறியிருந்தார். பெரியப்பா கிழித்த கோட்டை மீறாத கும்பாஜியும் இதன்படியே நடந்து கொண்டான்.

மடந்தை மீராவுக்குக் கல்யாணம் செய்ய வேண்டும் என்று ராவ்தூதாவும், சந்திரமுகியும் ஓயாமல் சிந்திக்கத் தொடங்கினார்கள். முன்னரே மணமான ஒரு கற்பரசியிடம் மறுமணம் பற்றிப் பேசினால் எப்படித் துடிதுடிப்பாளோ அப்படித் துடித்துவிட்டாள் மீரா.

சந்திரமுகிக்கு மீராவின் உள்ளம் ஓரளவு புரியும்...... ஓரளவுதான் புரியும். கண்ணனை வாஸ்தவமாகவே கடிமணம் புரிந்துகொண்டு வாழ முடியும் என்று அவளால் நினைக்க முடியவில்லை. மீரா கிரிதரனை வரித்தது விளையாட்டாக நிற்க வேண்டியதுதான் என்றே கருதினாள் அவள்.

"மீரா, உன் தந்தை இருந்திருந்தால் உன்னைப் புரிந்து கொண்டிருப்பாரோ என்னவோ? நான் உனக்குப் பல படிகள் கீழே நிற்பவள். உன் நிலை எனக்குப் புரியாது. ஆனால் என்னிலும் எத்தனையோ படிகள் கீழே நிற்கிறது உலகம். வயதுவந்த இளவரசி திருமணமாகாதிருந்தால் இதை உலகம் ஏற்காது. உன் தந்தை அடிக்கடி சொல்லுவது போல் தனிப் பண்புக்கு இடம் தரக்கூடாத ராஜ குலத்தினர் நாம். ராஜ்யத்தின் நற்பெயரே நம்மிடம்தான் இருக்கிறது. கண்ணனைத் தெய்வமாக வணங்கு. காந்தனாக நம்மையொத்த ஒரு நரனை ஒப்புக்கொள், கண்ணே!" என்று மகளைக் கேட்டுக்கொண்டாள் சந்திரமுகி.

மீரா குமுறிக் குமுறி அழுதாள்.

"அம்மா! கண்ணனைத் தவிரக் காந்தன் யாருண்டு? யாரிடம் காந்த சக்தி இருக்கிறதோ அவனல்லவா காந்தன்? உள்ளவை அனைத்தையும் தன்னிடம் இழுத்துக் கொள்ளும் கண்ணன் ஒருவனேயல்லவா காந்தன்? ஆகர்ஷணம் செய்வதாலேயே அல்லவா அவனை கிருஷ்ணன் என்கிறோம்? அவன் என்னை இழுத்துக்கொண்டு விட்டான். அதிலிருந்து மீளுவது என் கையிலுள்ள விஷயமல்ல.... இதையெல்லாம் நான் எப்படிச் சொல்லிப் புரிய வைப்பேன்? உடம்பு எனக்கு நாற்றக் குடிசையாகத் தெரிகிறது. இதற்குக் கலியாணமாவது, கார்த்திகையாவது என்று தோன்றுகிறது. தாம்பத்தியப் பேச்சை எடுத்தால் குமட்டுகிறது. ஆனால் அதே சமயத்தில் கண்ணனை இதே உடலோடு சேர வேண்டும் என்று துடிக்கிறேன். அவனோடு சிருங்கார விழாக் கொண்டாடிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இது ஏன் என்று எனக்கே தெரியாதபோது உனக்கு என்ன சொல்லி விளங்க வைப்பேன்?" என்று நெஞ்சுடைந்து புலம்பினாள் மீரா.

மற்ற பக்தர்களுக்கு வெளிப் போராட்டம் மட்டுமே இருந்தது. வெளிப் போராட்டம் மட்டுமின்றி, தன் போக்கே புரியாத உள் போராட்டமும் மீராவிடம் சேர்ந்துகொண்டது. புறத்திருந்தும், உள்ளே இருந்தும் இரு பெரும் மலைகள் அவளை நெருக்கின.

சந்திரமுகி மீராவை அநுதாபத்துடன் புரிந்து கொள்ள முயன்றாள். எனினும் தங்கள் குல வழக்கத்தை அவள் விட முடியவில்லை. கண் நிறைந்த கன்னிப் பெண்ணை— பண் நிறைந்த பருவ மங்கையை — கண்ணுக்குத் தெரிகிற ஒரு வரனின் கையில் ஒப்படைத்தாலன்றி, தாயுள்ளத்துக்கு நிம்மதி ஏது?

கன்னி இருந்தாளைக் கொண்டு
நன்றும் கிறிசெய்து போனான் ;
நாராயணன் செய்த தீமை
என்று மெங்கள் குடிக்கு ஓர்
ஏச்சுக்கொல் ஆயிடுங் கொல்லோ ?

என்று ஆழ்வார் பாடியது போலவே சந்திரமுகியும் அஞ்சினாள்.

பல அரச குமாரர்களின் சித்திரங்கள் வரவழைக்கப்பட்டன. மீராவின் முன் அவற்றை நீட்டுவாள் தோழி. தீயைக் கண்ட கண் நோவுக்காரன் போல் புண்பட்டுத் தவிப்பாள் மீரா.

ஜாதகங்கள் பல வரவழைக்கப்பட்டன. சோதிடர்கள் வரவழைக்கப்பட்டனர். ராவ்தூதாவும் சந்திரமுகியும் சோதிடனுடன் விவாதிப்பதைக் கேட்கும் போதெல்லாம் அலமந்து போவாள் மீரா. புத்தியே பேதலித்து விட்ட நிலையில் ஒரு நாள் தானே அவ்விடத்துக்கு வந்துவிட்டாள். கழுத்து முறிந்த கிளி கதறுவது போல் சோதிடரைப் பார்த்துப் பாடினாள்.

சோதித்துச் சொல்லிடுவீர், சோதிடரே - பரஞ்
சோதியுடனே நான் சோடி சேர்வேனோ என
(சோதித்து)
மாயனைப் பிரிந்துநான் மாமைதனை இழந்தேன்
பரமனைப் பிரிந்து நான் பசலைபடர்ந் திளைத்தேன்
பரிவு கொண்டே இங்கு கிரிதரன் வந்துவிட்டால்
பரமகைச் சுமையைப் பேதை தாங்குவனோ எனச்
(சோதித்து)
அழுது குமுறுவதில் பழகிவிட்டேன் மிகவும்
துன்பம் பிரிவைச் சிறு குன்றுபோலக் கடந்தேன்
அன்பனைக் கூடுகிற இன்ப மேரு கிடைத்தால்
ஏறிச் செல்ல ஏழைக்கு இயன்றிடுமோ என்று
(சோதித்து)
ப்ராணனைத் துளைத்திடும் பாணம்எய்தான் நாதன்
ப்ரேமை என்ற புயலில் பேதுறச் செய்தான்
கிரிதர நாகரனின் திருதரும் சேவடியில்
சித்தம் வைத்த பித்திக்கு சித்திஉண்டோ என்று
(சோதித்து)

கண்ணனுடன் தன் ஜாதகம் சேருகிறதா என்பது மட்டும் மீராவின் கவலையில்லை. அவனைச் சேர்ந்து விட்டால் அந்த இன்பத்தைச் சுமக்கும் திராணி தனக்கு உண்டா என்றும் சோதிடரைப் பார்த்துக் கேட்டாள்.

உணர்ச்சியின் உன்னத நிலையில் தானே பாட்டுப் பிறந்து விடும். அந்த நிலையிலிருந்து அணுவளவு கீழே வந்துவிட்டபின் மீராவுக்கே தன் செய்கை வெட்கமாகவும் வியப்பாக

வும் இருந்தது. பாட்டனுரையும் அன்னையையும் எதிர்த்துப் பார்க்கவும் அவளுக்குக் கூச்சமாக இருந்தது. ஓடினாள் தன் கிரிதரன் சந்நிதிக்கு. அங்குதான் அவள் மனம் விட்டு, மானம் விட்டுப் பாடவும், ஆடவும், வாடவும் முடியும்.

அவனை கிரிதரன் வாட வைத்தானு? அல்லது பழக்கத்தான் போட்டானு?

கிரிதரனிடம் எவ்வளவோ மன்றுடினள் மீரா. ஆனல் பாறையில் தூவிய விதைபோல், அந்த விதைக்கு வார்த்த நீர் போல் மீராவின் இன்ப நினைவுகளும் அவற்றுக்கு அவள் வார்த்த கண்ணீரும் அந்தக் கல் நெஞ்சக்காரனிடம் வீணுகிவிட்டன. மலையைத் தூக்கியவனே கல்லாகி விட்டானே?

அழுதழுது மீராவின் கண்கள் வற்றின; பாடிப் பாடித் தொண்டை வற்றியது. பாட முடியாவிட்டால் என்ன? ருக்மிணி செய்தது போல் கண்ணனுக்குக் கடிதம் எழுதலாமா என்று யோசித்தாள் மீரா. ஆனல் அவள் எழுதப் பிறக்கவில்லையே!

தன்னல் எழுத இயலாததையும் உடைந்த குரலில் குருதி கசியப் பாடினள் மீரா:

கடிமலர்ப் பாதனைக் கடிமணம் புரியக்
கடிதம் எழுதுவதும் கடினம் மிகவாக்க!
எழுதுகோலை எடுத்தால் நழுவுகிறது நெஞ்சு
நடுங்குகிறது கரம் அடங்குகிறது எண்ணம்
ஓலை தெரியுமோ நீர்மாலை பெருகும் கண்ணில்?
வார்த்தையும் வந்திடுமோ ஆர்த்திமிகு
உள்ளத்தில்
சிந்தித்தாலே மேனி சிதறிப் பறந்திடுமேல்
சீரார் திருவடியை நேராய்ப் பிடிப்பதென்றே?

தனது நிலை துரௌபதியின் மானம் போகவிருந்ததற்கு இம்மியும் தாழ்ந்ததல்ல என்றே மீரா கருதினள். திருமணமாகி விட்ட தனக்கு மீண்டும் விவாகம் செய்யும் சுற்றத்தினர் பாஞ்சாலியின் துகிலை உரிந்த கூட்டத்துக்குச் சமமாகவே அவளுக்குத் தோன்றியதும் உண்டு. 'மான சம்ரக்ஷணம் தருக' என்று உருகி உருகி உலகநாதனைப் பிரார்த்தித்தாள்.

உலகநாதன் இன்று இவளுக்கு நாதனுக வந்து, கணவன் என்ற தனது அந்தஸ்தை நிலைப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே மீராவின் ஆசை. ஆனல் கூடவே ஓர் அச்சமும் எழுந்தது. அன்று பாஞ்சாலி ஆடை குலைந்து நின்றபோது அவளை அவளது கணவன்மார் யாரும் காக்கவில்லையே! கண்ணனை அவள் கடவுளாகக் கருதிப் பிரார்த்தித்து அன்றே வென்றுள்? தான் மட்டும் ஏன் கண்ணனையே கணவனுக எண்ண வேண்டும்? அவனது அன்புக்கு ஏன் ஏங்க வேண்டும்? இதுவே தவறே?

'தவறல்ல. ஆண்டாள் இப்படித்தானே பாவித்தாள்? அவளைப் பாவித்த கண்ணன் தன்னைக் கைவிடுவானு?

'ஆனல் ஆண்டாள் நிலைமை வேறு. 'வேள்வியில் இடப்பட வேண்டிய புனித அவி நான்; என்னை நாய்க்குத் தந்து விடாதீர்கள்' என்று அவள் சொன்னதை மனமார ஏற்ற பெரியாழ்வாரை அவள் தந்தையாகப் பெற்றிருந்தாள். ஆனல் ராஜ குலத்தில் பிறந்த என் தாயார் பெரியாழ்வாரைப் போலப் பேச இயலுமா?



''கலாவின் மாமியார் செத்துப் போய் விட்டாராம். அதற்கு **கண்டலன்ஸ்னு** சொல்றதா? இல்லே, **கங்கராஜு¬லேஷன்னு** சொல்லணுமா?''

''நீ, எது சொன்னுலும் சரி!''

◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊◊

'ஆனல் அவள் பேசியதும் உண்டே! ஆம், ஆதியில் எனக்குக் கண்ணனை நாயகனுகக் காட்டியதே அன்னையல்லவா? சாளக்கிராமத்தை என் 'அகமுடையான்' என்று அவள் கூறும் போது அந்தப் பதத்துக்கு என்ன பொருள் என்பதுகூட அல்லவா எனக்குத் தெரியாது?'

அன்னையிடம் சென்றுள் மீரா. ''அம்மா, நீ செய்த சிலையை உன் கையாலேயே உடைத்தெறியலாமா?'' என்று கதறினுள். ''ஆதியிலேயே நீ என்னுடைய கிருஷ்ணப் பிரேமையை ஏன் தகர்க்கவில்லை? அப்படிச் செய்திருந்தால் இன்று எனக்கு எவ்வளவோ நிம்மதி கிடைத்திருக்குமே!'' என்றுள்.

அரும்பிட்ட போதிலே அன்பும் பயிரினை நீ
அழித்திருந்தால் இந்தஅல்லல் இல்லைஅம்மா!
வித்து முளைத்தெழுந்து மெத்தப் பரந்து வட
விருட்சமாய் விரிந்தபின் வெட்டுவதேனே?
உச்சிக் கிளைக்கு என்னை இச்சித்து ஏற்றினய்
பிடியைவிட்டால்இன்று பிழைப்ப தெப்படிஅம்மா?
கழல் கருவில்பட்ட சிறுதுரும்பென அவன்
நாம வெள்ளத்தில் எந்தன் நாவும் சிக்குண்டது
மந்தவாரணம் என பக்தி மதுவுட்கொண்டு
போதை கொண்ட எனக்குன் போதனை ஏறுமோ?

சந்திரமுகி மகளின் நிலை கண்டு மனம் நொந்து புண்ணுனுள். ''கண்மணி! எனக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. உன் தந்தையுடன் நானும் போயிருந்தால் இந்தக் கொந்தளிப்பு எனக்கில்லாது இருந்திருக்கும். உனக்காகவே உயிரைக் கையில் பிடித்துக் கொண்டேன். உனக்காகவே இப்போது இந்தப் பாடு படுகிறேன். வா, உன் அகமுடையான் என்று நான் சொன்ன சாளக்கிராமம் எங்கு இருக்கிறதோ, அந்த டாகூர் துவாரத்துக்கே வா. அங்காவது நமக்குச் சிறிது நிம்மதி கிடைக்கிறதா என்று பார்ப்போம்'' என்றுள் சந்திரமுகி. **(தொடரும்)**

# "அக்கினிப் பிரவேசம்"

எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

கட்டடக் கோபுரத்தில் மணி பத்தடித்தது. நடையில் அரவம் அடங்கி விட்டது. தலை மேல் மின் விசிறியின் ரீங்காரம். லலிதா ஜமக்காளத்தைக் கீழே விரித்துக் கணவன் கட்டில் ஓரமாகப் படுத்துக் கொண்டாள்.

கடைசி முறையாகச் சுற்றிவிட்டு வந்து நர்ஸ், அறையில் உட்கார்ந்து கொண்டாள். திறந்த கதவின் வழியாகச் சிந்திய வெளிச்சம் கண்ணை உறுத்திற்று. இலேசில் தூங்க முடியாது. மனத்துக்குள்ளேயும் அடங்காத ஓர் உறுத்தல்.

விரல் சொடுக்கைப்போல் அளவாய், விறுடிச் சத்தம் சுவர்க் கடிகாரத்திலிருந்து புறப்பட்டுக் கொண்டிருந்தது. கொசு வலைக்குள்ளிருந்து மணி முனகினான். ஓர் உலுக்கலுடன் எழுந்து வலையை விலக்கிப் பார்த்தாள். அவன் அசையவில்லை. தூக்கத்தில் கலந்த முனகல்.

தூக்கத்திலும் விழிப்பிலும் அந்த முனகல்தான்; கடந்த பத்து நாட்களாய். அன்று புதன்கிழமை. பத்து நாட்களுக்குமுன்பு ஞாயிற்றுக்கிழமை, பிற்பகல் இரண்டு மணி இருக்கும். அன்று நடந்த நிகழ்ச்சியை நினைத்ததும் உடல் முழுவதும் பொறியில் அகப்பட்ட எலி போல் 'வெடவெட' வென்று உதறிற்று.

ஒரு திரைப்படத்துக்குப் பிற்பகல் காட்சிக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள். அவன் தயாராகி விட்டான்; டெர்ரிலின் சட்டையும் கால் சராயுமாக. கால் பூட்ஸ் மாட்ட வேண்டியது ஒன்றுதான் பாக்கி. அவள் இன்னும் தயாராகவில்லை.

''லல்லு! இன்னும் எத்தனை நாழி? இரண்டாவது ஆட்டத்துக்காவது போகப் போகிறோமா இல்லையா?''

குளிக்கிற அறையிலிருந்து முகத்தைக் கழுவிக் கொண்டு, காதோரம் சோப்பு நுரை இன்னும் சரியாக நீங்காமல் வந்தவளைப் பார்த்ததும் அவன் குரல் சட்டென்று அடங்கிற்று. ''சரி! இனி மேல் ஒரு மணி நேரம் போதும்!''

'களு'க்கென்று ஒரு சிரிப்பு அவள் இதழிலிருந்து ஒலித்தது.

''நீ போய் 'டிரஸ்' பண்ணிக் கொள். ஸ்டவ் மேலே இருக்கும் பாலை நான் கவனித்து இறக்குகிறேன். நாழியாகி விட்டது.''

''உங்களுக்குப் பழக்கம் இல்லை.''

''ஏன் இல்லை? லாபரட்டரியில் காய்ச்சி இறக்கி யிருக்கிறேன், வேணும்கிறது. நீ உள்ளே போ.''

உதட்டைச் சுளித்து முகத்தை ஒரு வெட்டு வெட்டிவிட்டு அவள் உள்ளே போய் விட்டாள்.

நீண்டு புரண்ட கூந்தலின் நிழலில் நழுவியவள் காதில் அந்தச் சத்தம் கேட்டது. தோள் மேலிருந்து அவிழ்ந்து குலையும் சேலையை அள்ளிக் கொண்டு, கதவை உடைத்துக் கொண்டு ஓடி வந்தாள். 'ஸ்டவ்' திகுதிகுவென்று எரிந்து கொண்டிருந்தது. உடல் முழுதும் அதன் ஜ்வாலையோடு தரையில் புரண்டு கொண்டிருந்தான் மணி.

வாய் விட்டு வார்த்தைகளாக வராத ஓலத்துடன், அவனை அந்த அழிவினின்றும் பிய்த்து எடுப்பவளைப் போல, இழுத்துக் கட்டிக் கொண்டாள் லலிதா. அந்த அணைப்பில் தீயை அணைக்கும் ஒரே தீவிரம்தான் நடுத்தண்டாய் நின்றது.

அவன் உடம்பெல்லாம் வெந்து கருகி விட்டது. நெருப்பில் வெந்த கிழங்காய், நினைவின்றிக் கிடந்த அவனை ஆஸ்பத்திரி



**கல்கி வெள்ளிவிழா சிறுகதைப் போட்டியில் மூன்றாவது பரிசு பெற்ற கதை**

யில் கொண்டு வந்து சேர்த்தது. நேற்றுப் போல மனத்தில் கொழுந்துவிட்டு நிற்கிறது.

விடியற்காலை. 'பெட்பானை' எடுத்துச் சுத்தம் செய்து விட்டுப் பக்கத்து ஸ்டூலில் வந்து உட்கார்ந்து கொண்டாள் வனிதா. ஆயாசத்தில் அவள் கண்கள் மூடியிருந்தன.

''ஹார்லிக்ஸ் கரைக்கட்டுமா ?''

பதில் சொல்லக்கூட அவனுக்குத் தெம்பில்லை. இமைகளை அசதியுடன் புரட்டி, விழிகளை உருட்டி ஜாடை காட்டிவிட்டு, மறுபடியும் அவன் கண்களை மூடிக் கொண்டான். ஒரு விக்கல் எடுத்தது போல, தொண்டைக் குழியில் சிறு நெளிவு. கைகள் சீவனற்றுக் கிடந்தன.

அவள் எழுந்து போய் வெந்நீர் எடுத்துக் கொண்டு வந்தாள். கரைத்து அவுன்ஸ் கிளாஸில் ஊற்றி, ஒவ்வொரு விழுங்காய், கொஞ்சம் கொஞ்சமாய்க் கொடுக்க ஆரம்பித்தாள். பாதி



வெள்ளை

டெட்

சலவையின் மேன்மை
வெண்மையுடன் தூய்மை




வெள்ளை டெட் பவுடரினால் மட்டும்தான் உங்கள் வெள்ளைத் துணிகளை பளிச்சிடும் வெண்மையுடனும் வண்ண நிறத் துணிகளை துப்புரவாகவும் வெளுக்க முடியும். நவீன டெட் ஒன்றுதான் துணிகள் பாழாகாமல் சலவை செய்ய உதவுகிறது.

**ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட். பம்பாய்**

Shilpi SOM 38 Tam

கூடக் குடித்தபாபமில்லை. அவள் வெறுப்பாய் உதடுகளை அழுத்தி மூடிக் கொண்டாள்.

கொசுவலை விலகியதில் தோள் மேலும் கைகளிலும் ஈ மொய்க்க ஆரம்பித்து விட்டது. அவள் கவனிக்கவில்லை. வெறுப்பும் ஆத்திரமுமாக, அசைக்க முடியாத கைகளையும், நகரமுடியாத உடலையும் பார்த்து, மார்பின்மேல் கவிந்த முகத்துடன் உறும ஆரம்பித்தாள்.

ஈரம் படர்ந்த கண்ணை மறைக்க, இமைகளைத் தாழ்த்தியபடி அவன் விசிறியை எடுத்து விசிற ஆரம்பித்தான். காலை நேரத்துக் குளிர்ந்த காற்று, அதன் இதம் அவள் வேதனைக்கு ஒரு மருந்தாக இருந்திருக்க வேண்டும். கண்களை மூடிக் கொண்டாள்.

குளிர்ந்த காற்று; குளிர வைத்த பானம்; சில்லென்ற தண்ணீர். பஞ்சில் தோய்ந்த குளிர்ந்த 'ஜான்ஸன் வயலெட்' திராவகம்; எல்லாமே குளிர்ச்சியாகத்தானே இருக்க வேண்டும் அவளுக்கு. வெம்மையில் வெந்து போய் விட்ட உடலுக்கு மாற்று அது?

மணி ஒன்பது. டாக்டர் வரும் வேளை.

'' 'இஞ்செக்ஷன்' போடப் போறார்.....' என்ற நினைப்பிலேயே அவளை ஒரு பீதி கவ்விக் கொள்ளும். வேதனையுடன் வலியும் சேர்ந்து கொள்ளும் கொடூரமா? அவளால் ஏன் அந்தச் சிறு வலியையும் கூடத் தாங்கிக் கொள்ள முடியவில்லை? பெரும் அளவில் அதைச் சகித்துக் கொண்டதில், அவளுடைய பொறுமையின் வலிமை முழுதும் வடிந்து விட்டதோ?

அவன் சிலையாய்ச் சமைந்து அவளையே வெறித்த பார்வையாக நிலைமாறாது உட்கார்ந்திருப்பான்.

லலிதாவுக்குக் கணவன் தேடிக் கொண்டிருந்த போது அவளைக் கேட்டால் ஒரே மாதிரி பதில்தான் வரும். 'சிவப்பாய் ஒல்லியாய்ப் பார்க்க அழகாக இருக்கிறவராக..'' என்று கண்களில் நீலம் தெறிக்கக் குறும்புப் புன்னகையோடு சொல்வாள். அப்படி இல்லை என்று அவள் வேண்டாமென்று சொல்லி விட்ட பையன்களும் உண்டு.

மணி அந்த வருணனைக்குப் பொருத்த மானவனே அல்ல. அவள் கையை அவன் பிடித்துக் கொள்ளும்போது வெண்மையும் கறுப்பும் மின்னியது போலப் பளிச்சென்று தெரியும். அவன் தோற்றமும், அவள் பொலிவும், அவளுடைய இளமை மிடுக்கும் அவனுடைய சற்றுச் சோர்ந்த நடையும், ஜோடியாக யாருக்கும் தென்படாது. இருந்தும் அவனுடைய படிப்புக்காக, நல்ல குணத்துக்காகத்தான் மணந்து கொண்டாள்.

சில சமயம் அந்த நினைவு அவளுக்கு ஒரு குறையாக மனத்தில் மேலெழுந்து நிற்கும். அவனுடைய மடியில் தலை வைத்துப் படுத்தபட அவன் பேசும் போது, அவன் முகத் தருகே முகம் வைத்துக் கண்ணாடியில் பார்க்கும் போது, விளையாட்டாய்ப் புன்முறுவலில் அவன் உருவம் இணையும் நேரத்தில், ஏதோ ஒரு முரண் அவளுக்கு உறுத்தலாய்த் தென்படும். கையால் பிரித்த நீர் சேருவது போல, மனத்தில் தலையெடுத்த அந்த ஏக்கம், சற்று நேரம் பொறுத்து மீண்டும் மறைந்துபோகும்.

அவள் நினைப்பதுண்டு. அவர்களுக்குப் பிறக்கும் குழந்தை எப்படி இருக்கும்? அவளைப் போலத்தான் இருக்க வேண்டும். நல்ல சிவப்பாய், கதுப்புக் கன்னங்களும் கற்றை மயிருமாக, அழகான கண்களும் குறுகுறுத்த பார்வையுமாக, எண்ணெய்க் குளிக்குப் பிறகு பார்த்தால் முகம் முழுத் தக்காளிப் பழம் போல—

குழந்தை அவளைத்தான் கொள்ள வேண்டும் என்பது என்ன? ஓர் ஏமாற்றம் நெஞ்சடியில் நச்சரிக்கும். தன் பலவீனத்தைத் தானே வெல்ல மீண்டும் மீண்டும் முயலுவாள்.

இப்போது இயற்கை அவளைப் பழி வாங்க நினைத்து விட்டதா? அவளுடைய மனத் தெளிவின் அளவுக்கு இப்படி ஒரு பெரும் சோதனையா? உடம்பு தேறி வந்த பின்னும் மணி எப்படி இருப்பான்?

அவளுக்குப் 'பகீர்' என்றது.

அவளால் அந்தப் புறத் தோற்றத்தை மறந்து அவனுடைய மனத்தின் அழகைப் பார்க்க முடியுமா? வாய்விட்டுச் சொல்லாவிடினும் நினைப்பில் ஓர் அச்சம் தோன்றாமல் இருக்குமா? கண் மறைவாய் யாரேனும் அதைக் குறிப்பிட்டால் அவளுக்குச் சகித்துக் கொள்ளத் துணிவு இருக்குமா? ஆர்வத்துடன் அவன் அவளைத் தழுவிக் கொள்ளும் நேரம் அவளால் அருவருப்பின்றி அந்த அணைப்பை ஏற்கமுடியுமா? அவன் அதை அறிந்தால் எவ்வளவு தூரம் நொந்து போவான்?

அவளுக்கு ஏன் அப்படி நேர வேண்டும்? விரும்பியது கிடைக்காவிடினும், கிடைத்ததில் அவள் தேற்றிக் கொண்டிருந்தாள். இப்போது இன்னொரு தோல்வியா? இரண்டே ஆண்டுகளுக்குள் இரண்டாவது சோதனையா?

''ஸ்ஹா! உடம்பை அரிக்கிறது. பஞ்சை எண்ணெயில் நனைத்து இலேசாய்த் தேய்த்து விடு. எனக்குத் தாங்கவில்லை.''

பஞ்சை எடுத்து எண்ணெயில் நனைத்துக் கொண்டான். சற்று அழுத்தமாகப் பட்டால் உரித்துவிடக்கூடிய வெங்காயத் தோல். இலேசாய்ப் பஞ்சைப் பூச ஆரம்பித்தான். அவளை அறியாமல் கண்கள் மூடிக் கொண்டன. தன்னையறியாமல் மனத்தில் பொங்கும் இலேசான அருவருப்பு. கடமையின் அழைப்பும், தன்னுடைய ஸ்தானத்தின் நினைப்பும் கூட அவளை இன்னும் பக்குவப்படுத்த முடியவில்லை. தன்னுடைய பலவீனம் வெளியே தெரியக் கூடாது. தெரிந்தால் அவன் உடைந்து போவான். ஆனால் இந்த உணர்ச்சியை வென்று தன்னை உறுதிப் படுத்திக் கொள்ளும் சாதனையும் அவ்வளவு எளிதாக இல்லை.

''நிறுத்து போதும். எனக்கு எரிகிறது.''

அவள் மெதுவாய் அழ ஆரம்பித்தாள். குழந்தையைப் போல் குரல் கேவிக்கொண்டு போகிறது. தீப்புண்ணில் இறுகிப் போன விரல்கள் அவன் மணிக்கட்டின் மேல் படிந் தன. அந்த நெகிழ்ச்சியில் அவன் கரைந்து விடுவான் போல இருந்தது அவனுக்கு.

''அழாதீர்கள்..... எல்லாம் சரியாகப் போய் விடும்.''

அழுகையில் உருக் குழம்பிப் போன சத்தங்கள் அவனிடமிருந்து புறப்பட்டுக் கொண்டேயிருந்தன.

''ஏன் அழுகிறீர்?''

கேள்விக்கு மேல் கேள்வி கேட்டு அவன் எழுந்து நின்றான். மணியைக் கவனிக்கும் 'ஹவுஸ் ஸர்ஜன்' அந்த வாலிபன். அந்தக் குரலிலேயே ஓர் ஆறுதல் தருவதைப் போன்ற மயக்கம். பேச்சிலேயே மனத்தைக் கட்டுக் குலைய வைக்கும் மருட்சி.

''மணி. நீங்கள் தேறிக் கொண்டிருக்கிறீர்கள். எல்லாம் சரியாகப் போய்விடும்.''

''தாங்க்யூ..... டாக்டர்....!''

''எங்கே, என்னைப் பாருங்கள். கையைத் தூக்குங்கள்.''

''நோ....நோ.... வலிக்கிறது டாக்டர்.''

''வலி இல்லே அது. தூக்க முடியுமா என்ற பயந்தான். முயன்று பாருங்கள். உங்கள் நம்பிக்கை வெற்றி அடையும். எங்கே ?''

''வேண்டாம் டாக்டர்.....ப்ளீஸ்!''

டாக்டர் சுந்தர் ஒரு சிறு புன்னகையோடு கைகளைப் பிடித்துத் தூக்குவான். கண்ணாடி நொறுங்குவது போன்ற ஓர் அலறல் அறை முழுவதும் சிதறும். லலிதா முகத்தை மூடிக் கொண்டு தேம்புவாள்.

''நீங்கள் அவருக்குத் தைரியம் சொல்ல வேண்டும். நீங்களே அழ ஆரம்பித்தால்? கொஞ்சம் கவனியுங்கள். தோல் சுருங்கி மூட்டுகள் இயக்கமின்றிப் போய்விடக் கூடாது. அப்புறம் சாதாரணமான அசைவுகளும்கூடச் சிரமமாக இருக்கும்.''

''சரி, டாக்டர்.''

''நீங்கள் படித்தவர்கள். அவருக்குப் படும்படி நல்ல வார்த்தைகளாகச் சொல்லி ஊக்கப்படுத்த வேண்டும். என்ன?''

''ஆகட்டும், டாக்டர்.''

''குட்.''

சுந்தர் அடுத்த படுக்கைக்கு நகர்ந்துவிட்டான். அவன் போன பிறகும் அந்தக் குரல் அவள் காதில் ஒலித்துக்கொண்டேயிருந்தது. பண்பாய் நயமாய் எப்படிச் சொல்லுகிறான்? கடமையைச் சொல்லுவதிலும்கூடக் கண்டிப்புக் கலந்தாலும் எப்படி ஒரு மெருகு?

வைத்தியக் கல்லூரி மாணவர்கள், படிப்பின் ஒரு பகுதியாய் நோயாளிகளை நேரில் பார்த்துக் கொள்ள அங்கே வருவார்கள். அவர்களைச் சூழ வைத்துக் கொண்டு அவன் விளக்கங்கள் கூறும் விதம் அவளைக் கவரும். தெளிவாய், அவளுக்கும்கூடப் புரியும்படியாக, எவ்வளவோ சிக்கலான கேஸ்களையும் கூட அவன் எடுத்துச் சொல்லும் முறையில் அந்த ஆராய்ச்சியின் கனம் தெரியாத வருணனையில், அவளும்கூட உன்னிப்பாய்க் கேட்டுக் கொண்டிருப்பாள்.

ஆஸ்பத்திரிக்கு முதன் முதலில் வந்த போது, பிரித்துப் பிரித்து அவள் கவலையோடு கேட்டதற்கெல்லாம் எவ்வளவோ தெம்போடு அவளுக்கு ஆறுதலாகப் பதில் சொன்னார் அவர்?

சேர்ந்த மூன்றாம் நாள் மாலை. அவள் தலைமாட்டில் உட்கார்ந்திருந்தாள். சோர்ந்தாற்போல் தூங்காமல் இருந்ததில் சிவந்து போன விழிகள். ரயில் பயணத்தில் ஓடும் காட்சிகளை உட்கார்ந்துகொண்டே பார்ப்பது போல், சுற்றிலும் தெரியும் பரபரப்பான இயக்கத்தைத் தான் மட்டும் மலைப்போடு ஒரு நிலையில் கவனித்துக் கொண்டிருந்தாள்.

''இன்று நீங்கள் நிம்மதியாகத் தூங்கலாம்.'' அவன் பணிவோடு எழுந்து நின்றான், ஒரு முறை நிமிர்ந்து பார்த்துவிட்டு.

''இந்த மூன்று நாட்களும் எனக்கும் இடமில்லாமல்தான் இருந்தது. சொன்னால் நீங்கள் கவலைப்படுவீர்கள் என்று சொல்லவில்லை. இனி மேல் நீங்கள் நிம்மதியாக இருக்கலாம்.''

அவள் குளிர்ந்து கொண்டாள். பொல பொலவென மலர்த் துளிர்கள் உதிர்ந்தன. அந்த அநுதாபத்தை அவளால் தாங்க முடியவில்லை. அவனும் நகர்ந்து போய் விட்டான், அந்த நெகிழ்ச்சியைப் பொருத மனத்தோடு.

எவ்வளவு வேலைகள் இருந்தாலும் பொறுமை இழக்க மாட்டான் சுந்தர். புன்சிரிப்போடுதான் பதில். நோயாளிகள் குறை சொன்னாலும், எரிந்து விழுந்தாலும் கூட அவனுக்குக் கோபம் வந்து அவள் பார்த்ததில்லை. நர்ஸுகள் நான்கு விதமாய்க் கேள்விகள் கேட்கும் போதும் சில சமயம் சொன்னபடி செய்யாத போதும்கூட அவன் குரல் மென்மையோடுதான் இருக்கும்.

அவள் வியப்பதுண்டு. எந்தச் சமயமும் தன்னுள் உவகை பூத்தவண்ணம் எப்படி அவனால் இருக்க முடிகிறது? சற்றேனும் களைப்புத் தட்டாத சதா களை இலகும் அந்த முகம் எப்போதாவது கலங்குமோ? எல்லோரையும் அயர வைக்கும் கவலை, வேதனை, கோபம் இவைகள் எல்லாம் அவனுக்குக் கிடையவே கிடையாதோ ?

அவன் மேல் தனக்கு எழுந்த வியப்பின் எதிர் நிழலாய் ஒரு நாள் அவளிடமிருந்து அவனுக்கு ஒரு பாராட்டு வந்தது.

''நீங்கள் தனியாக நின்று அயராத சேவை செய்து, அவரைக் காப்பாற்றி விட்டீர்கள். உங்கள் கணவர் பாக்கியசாலிதான். இந்த விபத்தில் பிழைத்தது மட்டும் அவருடைய அதிருஷ்டம் அல்ல—''

அந்தப் பேச்சிலிருந்த ஏதோ ஒரு மணம்—அதன் கவர்ச்சி நிறைந்த ஒரு கமழ்ச்சி—அவனைக் கிறுகிறுக்க வைத்தது.

அப்புறம் இந்த இரண்டு நாட்களாய் ஒரு சலனம். காற்றுக்கூடப் படமுடியாமல் நெருங்கிய மரங்களின் நடுவே தேங்கிய தண்ணீரில், ஒரு கல் விழுந்ததும் ஏற்படும் அலைகளைப் போல் மனத்தில் ஓர் அசைவு. அது பிறர் பாராமலே தன்னுள் இயங்கி அடங்கி விடுவதைப் போலத் தன் உணர்ச்சியைத் தனக்குள்ளேயே அடக்கிக் கொள்ள முயலும் துடிப்பு.

அப்புறம் சுந்தர் வரும்போது அவள் நிமிர்ந்து பார்க்கவே கூசினாள். அவன் அங்கே நிற்கும் சில நிமிஷங்களில், காற்றுப் படாமல் அகல் விளக்கைக் கையை மறைத்துக் காப்பதைப் போல், அத்தனை உணர்ச்சிகளின் விசிறலிலிருந்து தன்னைத் தடுத்துக் கொள்ள முயலுவாள்.

ஆனாலும் அவனுள் ஏதோ ஒரு நினைப்பு தலையெடுக்கும். அதன் நிழலைக் கண்டதுமே

# நவராத்திரி விசேஷ விற்பனை!



## தீபாவளி புதிய ரக பட்டு சேலைகள்!

உஷா
க்ரீம்
இந்திரா
லோட்டஸ்
வஸந்த்

### 5 புதிய தீபாவளி கலர்கள்!

விஞ்ஞான ரீதியில் நன்கு ஆராய்ச்சி செய்து அவரவர்களின் மேனிக்கு வெகுவாகப் பொருந்தும் வண்ணம், பல வண்ணச் சேர்க்கைகளினால் உருவாக்கப்பெற்று, ரமியமாக அமைந்த வசீகரமான புதிய வண்ணச் சேலைகள்—இந்த உடல் கலர்கள் முற்றிலும் புதியவை!

மேற்சொன்ன 5 கலர்களில் உங்களுக்குப் பிடித்தமான எந்தக் கலரையும் நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இவ் வருஷம் தீபாவளிக்கு எல்லோரும் ஒரே கலரையே அணிந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் தவிர்க்கப்பட்டுள்ளது.

### தீபாவளி புதிய பார்டர் கலர் — ரேடியம் கலர்

வஸந்த் மற்றும் கற்பகம் கலர் புடவைகளுக்கு இந்த நவீன சிருஷ்டியான ரேடியம் கலர் பார்டர்கள் அமைக்கப்பெற்றுள்ளன. உன்னதத்தை அள்ளும் பார்டர் — உடல், காண்ட்ராஸ்ட் — இணைப்பு வெகு பிரமாதம்!

### 4 புதிய தீபாவளி பார்டர் டிசைன்கள்!

இந்தப் புதிய பார்டர் டிசைன்கள் ஒவ்வொன்றும் வெகு நேர்த்தியாக, அனுபவமிக்க தொழில் விற்பன்னர்களால் கற்பனை ரீதியில் உருவகப்படுத்தப்பெற்று உங்களைப் பரவசப்படுத்தும் தன்மை வாய்ந்தவை! ஒவ்வொரு டிசைனும் எல்லாக் கலர் களிலும் அமைக்கப் பெற்றுள்ளது.

சாதனா
விஜயா
சந்திரிகா
மாலா

### தீபாவளி புதிய புட்டா — திரிவேணி

இதுவும் இவ்வருஷ தீபாவளிக்கென்றே புதிய முறையில் தயாரிக்கப்பெற்று எல்லாக் கலர்களிலும் போடப்பட்டுள்ளது. இதன் வேலைப்பாடு வெகுஜோர்!

### தீபாவளி புதிய உடல் டிசைன் — அப்ஸரா

சேலையின் மேல்புறமும், உட்புறமும் வெவ்வேறு கலரும் டிசைனும் கொண்டவை. இது பட்டுச்சேலை தயாரிப்பில் ஓர் அபூர்வ சாதனை மட்டுமல்ல — அரிய சாதனையும் கூட!

## நல்லி சின்னசாமி செட்டி

பனகல் பார்க் எதிரில்

தி. நகர் (போன்: 41115 • 43369) சென்னை-17

அவள் மனம் நடுங்கும். கழைக்கோடியாய் ஆடும் இதயத்தை உறுதிப்படுத்திக் கொள்ளத் தவிப்பாள்.

அன்று இரவு மணிக்கு ஜுரம் வந்து விட்டது. நாவுக்கு அடியில் வைத்த தர்மா மீட்டரில் வெள்ளி நூல் மளமளவென்று ஏறிற்று. இரவு முழுவதும் ஓயாத புலம்பல். வழக்கமாய் அவள் தூக்கம் கலைந்து உட்கார்ந்திருப்பாள். அன்று அவளும் தூங்கவில்லை. ஆனால் நல்ல நினைவும் இல்லை.

காலையில் பெரிய டாக்டர் வந்து பார்த்தார். அவர் நெற்றிச் சுருக்கத்தைப் படித்த போது அவள் நெஞ்சில் ஒரு இனுசான பீதி கண்டது. வழக்கமாய் ஒரு சிரிப்போடு ஆறுதல் சொல்லிவிட்டுப் போகும் அவர் அன்று ஏதும் சொல்லவில்லை.

அவர் போனதும் அவள் அவன் முகத்தருகே குனிந்து உட்கார்ந்திருந்தாள். அவன் மூச்சு அவள் முகத்தை எரித்தது. திடீரென்று எழுந்த அந்த நோயின் உக்கிரத்தைக் காண கையில் விளைவத் தெரியாத சந்தேகங்கள் மனத்தில் ஒன்றோடொன்றாய்ப் புழுங்கின.

வழக்கம் போல் இருந்தால் அவள் சுந்தரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டிருப்பாள். ஆனால் அன்று அவன் காலடிச் சத்தம் கேட்டதுமே அவள் திரும்பி உட்கார்ந்து கொண்டாள். அவனை நேர்முகமாய்ப் பார்த்து எதுவும் கேட்க அவளுக்குத் துணிவில்லை. ஏதோ ஒரு குற்ற உணர்வு உள்ளே பொசுங்கிக் கொண்டிருந்தது.

கட்டிலில் தலைமாட்டில் அவன் எழுதி விட்டுப் போயிருந்த அட்டைக் குறிப்பை எடுத்துப் படித்தாள். ''ஸெப்டிக் ஜுரமாக இருக்கக் கூடும். பெரிய டாக்டர் சொன்னபடி மேற்கண்டவைகளை உடனடியாகச் செய்ய வேண்டும்........''

சட்டென்று அவள் உடம்பெல்லாம் அதிர்ந்தது. வளைந்த வில்லிருந்து அறுந்த நாணைப் ஒரு சிரிப்பு அவளுள் கேட்டது. கால் நகத்திலிருந்து இரத்தம் பாய் போலச் சுருண்டு கொண்டே முகம் வரை ஏறிற்று. ஒரு கிலி அவளைக் கவ்விக் கொண்டது.

அவள் சஞ்சலத்தின் விளைவா அது? அவனுடைய மனத்தின் உறுதியை, சற்றே சரியத் தொடங்கிய தாராக முன்னை, விதி திமிர்ந்து பார்க்கிறதா? தன் எண்ணங்களே தன்னை எரிக்கத் தொடங்கின. அதில் அவள் இப்போது வெந்து கொண்டிருந்தாள். அதை வெளியார் உணர முடியாது.

அவனுக்கு அவ்வளவு அருகே இருந்தும் அவர்களிடையே உணர்ந்த அந்தத் தூரம். நெருங்க முடியாதபடி அவளைச் சுற்றி ஒரு நெருப்பு அவளுக்குத் தெரிந்தது. அது அவளை எரித்து விட்டாலும் பரவாயில்லை. அவள் விலக மாட்டாள். அவள் உணரும் அந்த விநாடியில், அந்த நேரத்தின் அடங்காத வெம்மையில், அவளும் ஒரு தீயில் குளித்துக் கொண்டுதான் இருந்தாள்.

ஊரடங்கிய இரவு வேளை.

எங்கேயோ மணி பதினொன்று அடித்தது. தடதடவென்று நர்ஸ் டெலிபோனை நோக்கி



''என்ன சார் அங்கே? ஏதாவது 'ஆக்ஸிடெண்டா'?''
''ஆமாம்! 'மொபைல் கோர்ட்' பஸ், ஒரு கிழவி மேலே மோதி, மேலேயே அனுப்பி விட்டது.''

ஓடி வரும் சத்தம் கேட்டது. அவள் பாயிலிருந்து சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள்.

''டாக்டர்! உடனே வாருங்கள். பெட் நம்பர் 39. பேஷண்டின் நாடி அடங்கிக் கொண்டிருக்கிறது.''

போனைப் போட்டுவிட்டு நர்ஸ் மறுபடியும் வெளியே ஓடினாள். கூடவே மூன்றாவது அறையிலிருந்து ஒரு பெண் வாய் விட்டு அலறும் சத்தம் கேட்டது.

ஆஸ்பத்திரியில் அந்தச் சுதந்திரம் கிடையாது. மற்றவர்கள் அவளைக் கண்டித்து அடக்கும் குரலும் கேட்டது. விழித்துக் கொண்டே நோயாளிகள் படுக்கையில் புரளும் போது, பெருமூச்சு விடும் விதம் நம்பிக்கையற்று ஒலித்தது.

திடீரென்று ஒரு காற்று அவளைச் சுற்றிச் சுழன்று எழுந்தது. முகத்திலும் வாயுள்ளும் அது மோதிற்று. ஆடைகள் உடலோடு ஒட்டிக் கொண்டு படபடவென்று அடித்துக் கொண்டன. ஒரு கிலியோடு தாவித் தன் கணவன் கையைப் பற்றிக் கொண்டாள்.

நேரம் ஓடிக் கொண்டிருந்தது. டாக்டர் கால் பூட்ஸின் சத்தம், நர்ஸ் பரபரப்புடன் அலையும் காலடிகளின் ஒலி, காற்றில் சுழன்று வந்த அடங்கி அடங்கி எழுந்த அந்தப் பெண்ணின் விசும்பல், யாவும் அவளைப் பொங்கி எழுந்து அழுத்தும் அரவ அலைகளாய்த் தோன்றின. அரை மணி நேரம் ஆகி இருக்கும்.

நர்ஸ் அறைக்குத் திரும்பினாள். அவள் நடை சோர்ந்து போயிருந்தது. முகத்தில் தெளிவில்லை. கைவிரல்கள் கவுன் பையில் அமைதி இழந்து அலைந்தன. 'ப்ச' என்று உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

ஒரு விம்மல் அவளுள் சுருண்டு எழுந்தது. கழுத்தில் புரண்ட தாலியைச் சட்டென்று எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டாள். விரல்கள் குவி மலராய்க் கூம்பின.

விடியற்காலை நேரம். அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. பாயைச் சுருட்டிக் கட்டில் அடியில் போட்டு விட்டாள். அவன் இன்னும் கண் விழிக்கவில்லை.

மார்பில் ஏதோ புண்ணாய் வலித்தது.

கொஞ்சம் கொஞ்சமாக விடிய ஆரம்பித்து விட்டது. வார்டு சேவகன் சோப்புத் தண்ணீர் போட்டுக் கழுவ ஆரம்பித்து விட்டான். காலி செய்து சுத்தம் செய்த அலமாரிப் பெட்டிகளில் டெட்டால் வாசம்.

நர்ஸ் வந்து புதுத் துப்பட்டியும் தலையணை உறையும் மாற்றி அவனைப் படுக்க வைத்தாள். ஜுர வேகத்தில் கனிந்த பழமாக முகம் மினு மினுத்தது. மருந்தும் கஞ்சியும் பாதி சாப்பிடுமுன்னரே மறுபடியும் தூங்கி விட்டான்.

குளியலும் உடை மாற்றும் இன்றி, கூந்தலை வெறுமனே அள்ளிச் செருகிக் கொண்டு, பசியும் உறக்கமும் மறந்து உட்கார்ந்திருந்தாள் லலிதா. நினைத்தால் வரப் பார்க்கும் கண்ணீர். தொண்டையில் ஓர் அடைப்பு.

''மகளே! என்ன கவலையில் உட்கார்ந்து விட்டாய் அம்மா ?''

குரலின் கனிவு அவளை எழுப்பிற்று. கையில் பைபிள் புத்தகம் பிடித்த சாமியார். வெண்ணிற உடுப்பும் மலர்ந்த முகமுமாக, விரல்கள் ஜபமாலையை நெருட நின்றார்.

''நம் எல்லோரையும் கர்த்தர் காப்பாற்றுவார், நாம் நம்பிக்கையோடு வேண்டிக் கொண்டால்.''

அவளுள் எழுந்த துயரத்தை முகத்திலிருந்து மறைக்க அவள் முயலவில்லை. அநுதாபம் நிறைந்த கண்களைக் கண்டதும் திகைத்து நின்றாள். பரிதாபம் நிறைந்த பார்வைக்கு ஆளான நிலையில் கண்கள் கசியத் தொடங்கின.

''நான் பிரார்த்தனை செய்கிறேன் அம்மா! உன் கணவர் குணமடைவார். நம்பிக்கையை ஒரு போதும் தளரவிடக் கூடாது. நினைத்துப் பார். ஆண்டவனைக் காட்டிலும் நமக்கு நன்மை செய்ய வலிமை உள்ளவர் வேறு யார் ?''

அவள் கரம் குவிந்தது. மௌனமாய் நின்றாள்.

''பிரார்த்தனை உன் மனத்துக்கும் தெம்பு தரும். கணவனிடம் அன்பும் பரிவும் கொண்ட உன் வேண்டுகோளுக்கு ஆண்டவன் செவி சாய்ப்பார்.''

ஆண்டவன் கருணைக்கு வேண்டிய தூய்மையான உள்ளம் அவளிடம் இருக்கிறதா? மாசற்ற அன்பைப் பொழியும் மனம் அவளுக்கு இருக்குமா ? இருந்தால் அவள் நம்பிக்கை அணையாது. அவள் பிரார்த்தனைக் குரல் உறுதி நிறைந்ததாய் இருக்கும். தன்மயமாய் விழுங்கும் அன்புக்கு அவள் தன்னை ஆளாக்கிக் கொள்வாள்.

அவர் மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்தார். அவள் கண்ணை மூடிக் கொண்டு மணியின் கால்மாட்டில் நின்று கொண்டிருந்தாள்.

அவர் போயும் வெகுநேரம் அவள் மோன நிலை கலையவில்லை. ஆடாது நின்ற கற்பூரக் கொழுந்தென, மனம் அந்த ஒரே குறியில் அசைவற்று ஒன்றிக் கிடந்தது.

இரவு பத்து மணி இருக்கும். மணி கண்ணிமைகளைப் புரட்டி அவளைப் பார்த்தான். அவன் கண்களில் ஒரு தெளிவு புலப்பட்டது. அவளை ஓர் உணர்ச்சி வெள்ளம் மூழ்கடித்தது. மூர்க்கமான பரிவுடன் அவனை அப்படியே வாரி இறுகத் தழுவிக் கொண்டிருப்பாள்; அவர்கள் நிலையும் இடமும் வேறாக இருந்திருந்தால்.

அவன் கையை மெதுவாக எடுத்துத் தன் கைமேல் வைத்துக் கொண்டாள். அவன் திருப்தியோடு கண்ணை மூடிக் கொண்டான்.

''ஆரஞ்சு பிழிந்து எடுத்துக் கொண்டு வரட்டுமா ?''

''சரி!''

ஞாயிற்றுக்கிழமை.

விடுமுறை நாளின் அமைதியோடு காலை விழித்துக் கொண்டது. விடியற்காலையில் டெம்பரேச்சர் எடுத்து விட்டு நர்ஸ் புறப்பட்டாள். அவன் புறம் தேடும் பார்வையோடு திரும்பினான்.

''நார்மல்.''

மணி அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தான். கொசு வலையை நாற்புறமும் இறக்கி விட்டாள். மெதுவாய் வெளியே நடந்து வந்தாள்.

வராந்தாவில் வெள்ளை உடுப்புடன் நர்ஸுகள் நடந்து வந்து கொண்டிருந்தார்கள். காலையில் செய்தித் தாள் கொண்டு வரும் பையன் அறைக்குள் நுழைந்து புறப்பட்டுக் கொண்டிருந்தான். தரையில் காவலுக்கு வந்த பெண் ஒருத்தியின் குழந்தை சிரித்தபடி தவழ்ந்து கொண்டிருந்தது.

நடந்து வந்து கொண்டிருந்தவளின் காலடி சட்டென்று நின்றது. அவள் இதயத்துள் தந்தியை மீட்டுவது போன்ற பிரார்த்தனை இசை.

கண்ணெதிரே நீண்ட விசாலமான அறை. ஒளி தரும் மெழுகுவத்திகள் எரிந்தன. வரிசையாய் மண்டியிட்ட உருவங்கள். பிரார்த்தனையில் ஒன்றிக் கூம்பி நின்ற உள்ளங்கள்.

அவளும் அசைவற்று அப்படியே நின்றாள். அவளுக்கும் பிரார்த்தனை செய்ய முடியும். அதற்கு வேண்டிய அகத் தூய்மையும் மன உறுதியும் அவளுக்கும் உண்டு. அந்த நம்பிக்கையின் வேர் உள்ளத்தில் ஆழ ஊன்றி விட்டது.

தீயில் குளித்தது அவள் கணவன் அல்ல. அக்கினிப் பிரவேசம் செய்து மீண்டது அவள் தான். அது அவள் மனத்தில் இருந்த அழுக்கு அனைத்தையும் எரித்து விட்டது.

[கவிஞர், பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்களுக்கு 23-10-66யன்று அறுபத்தியோராவது வயது நிறைவு பெறுகிறது. அவரது சேவையைப் பாராட்டுமுகமாக அவரது புகைப்படத்தை இவ்விதழ் மேலட்டையில் வெளியிடுவதுடன் அவரைப் பற்றிய இக்கட்டுரையையும் மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். —ஆசிரியர்]

# குருதேவருக்குப் பல்லாண்டு

ராஜேசுவரி நடராஜன்

குருதேவர் ரவீந்திரநாத தாகூருக்குத்தான் நூற்றாண்டு விழா எல்லாம் நடந்து அமர்க்களப்பட்டதே. இப்போது சாவகாசமாய்ப் பல்லாண்டு கூறுவானேன் என்று வாசகர்கள் நினைக்கக்கூடும். நான் இப்போது பல்லாண்டு கூற முன்வந்தது அந்தக் குருதேவருக்கு அல்ல. அந்த வங்கக் குருதேவரின் குரலை நமக்கெல்லாம் உணர்த்திய எங்கள் குருதேவர் — பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்களுக்குத்தான். அறுபத்தொரு ஆண்டுகள் நிறைவு பெற்று விளங்கும் பேராசிரியர் அவர்களுக்கு அண்மையிலே மணிவிழா கொண்டாட விருக்கிறது அன்பர் குழாம். மணி விழாக் காண இருக்கும் அவருக்கு, இந்த அருமையான சந்தர்ப்பத்திலே, அவரது காலடியில் அமர்ந்து கல்வி பயிலும் பாக்கியத்தைப் பெற்ற நான் பல்லாண்டு கூறக் கடமைப்பட்டவள்தானே? ஒருவரை வாழ்த்தவும் வணங்கவும் இதைவிட அருமையான சந்தர்ப்பம் வேறு ஏது?

''முப்பத்து மூன்றாண்டின் முன் முறைக்கு நீ தம்பி'' என்று என் தந்தை தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்கள் பேராசிரியர் ராகவனைத் தமது தம்பியாக்கிக் கொண்டபோதே அவர் எனக்குச் 'சிற்றப்பன்' ஆகிவிட்டார். (இது அவருடைய பாஷையேதான்!) ஆனால் அந்தச் சிற்றப்பனையே குருதேவராக அடைவதற்கு நான் பதினைந்து வருஷ காலம் காத்திருக்க வேண்டியிருந்தது! திருநெல்வேலி ம. தி. தா. இந்து கல்லூரியிலே அவர் ஆங்கிலப் பேராசிரியராகப் பணியாற்றிய காலம் அது. அதே கல்லூரியிலே மாணவியாகப் பயிலும் பேறு பெற்றவள் நான். அப்போது எங்கள் தமிழ்ப் பள்ளிப் பேராசிரியராக இருந்தவர் திரு அ. முத்துசிவன் அவர்கள். அவரும் பேராசிரியர் ராகவனிடம் ஒன்றிரண்டு வருஷங்கள் மாணவராக இருந்தவர். பேராசிரியரைக் குறிப்பிடுகின்றபோதெல்லாம் 'குருதேவர்' என்றே குறிப்பிடுவார். பேராசிரியர் ராகவன் அவர்களுடைய வகுப்புகள் என்றால் மாணவ மாணவிகளுக்குக் கொண்டாட்டம் தான். அன்றாடம் நவ நவமான விஷயங்கள் கிடைத்துக் கொண்டேயிருக்கும். எத்தனையோ பேராசிரியரிடம் கல்வி பயின்றிருந்தாலும் கூட, இவரை மட்டும் பேராசிரியருக்கும் மேலான குரு ஸ்தானத்திலே வைத்துத்தான் வணங்கி வந்திருக்கிறது அவர்களிடம் பயின்ற மாணவ சமுதாயம்.

பேராசிரியர் ராகவன் வகுப்பு நடத்துகிற அழகே தனி. அமைதியாக, ஆர்ப்பாட்டம் எதுவும் இல்லாமல் அவர் பாடம் சொல்லுகின்ற முறை மாணவர் கவனத்தையெல்லாம் கவர்ந்து நிற்கும். ஏதோ பரீட்சைக்கு மட்டும் தயார் செய்கின்ற காரியமாக இருக்காது. பரீட்சைக்கே தேவையில்லாத நல்ல பல விஷயங்களையும்



அறிந்து கொள்ள முடியும் அவரது வகுப்பிலே. மாணவர்களின் சிந்தனையைத் தூண்டி, அவர்களது இலக்கிய உணர்வைத் தட்டி எழுப்பி, ரஸனையை வளர்ப்பது ஒரு கலையாகவே அவருக்குக் கைவந்திருந்தது. வெளியிலும் அவரைச் சுற்றி ஒரு மாணவர் கூட்டம் எப்பொழுதும் இருந்து கொண்டே இருக்கும். மாணவர்களைக் காந்தம் போல் கவர்ந்தவர் அவர். அவரது கைலாசபுரம் வீட்டிலும் சரி, அவரது அபிமானத்துக்குரிய மாணவர்கள் அவரை விட்டு வைப்பதில்லை. ஏதாவது இலக்கியச் சர்ச்சைகள் நடந்த வண்ணமாகவே இருக்கும். அப்படி அவரால் உருவான மாணவர்கள் இன்று நாடெங்கிலும் இலக்கியப் பணிபுரிந்து கொண்டிருக்கிறார்கள். இதை அவருடைய ஆசிரியத் தொழிலின் வெற்றி என்றுதான் சொல்ல வேண்டும்.

பேராசிரியர் அ. சீநிவாசராகவன் அவர்கள் ஏறக்குறைய பத்துப் பதினைந்து ஆண்டுகாலம் திருநெல்வேலியிலே பணியாற்றியிருக்கிறார்கள். அதைத் தொடர்ந்து சில காலம் 'சிந்தனை' பத்திரிகாசிரியராகவும் பணியாற்றியதுண்டு. அதன் பின்னர்தான் தூத்துக்குடி வ. உ. சி. கல்லூரியின் முதல்வராகப் பொறுப்பேற்றுச் சிறப்பாகத் தொண்டாற்றி வருகிறார். இன்று பேராசிரியர் சீநிவாச ராகவனை அறியாத தமிழர்கள் யாரும் இருக்க முடியாது. செக்கச் சிவந்த மேனி. அழகும் கம்பீரமும் நிறைந்த தோற்றம். தாம்பூலம் தரித்த வாயிலே மாறாத புன்னகை. அறிவொளி வீசும் விழிகள். சற்றே வழுக்கை விழுந்த தலை—இனிக்க இனிக்கப் பேசும் பண்பு—இவைகளின் கூட்டம்தான் திரு அ. சீ. ரா. ஒரு முறை பார்த்தவர்கள், ஒரு முறை பழகியவர்கள் எளிதில் மறந்து விட முடியாது. தோற்றத்திலும் இனியவர். பழகுவதற்கும் இனியவர்.

பேராசிரியரின் பிறந்த ஊர் பாம்புப் பட்டினம். என்ன, புரியவில்லையா? தஞ்சை ஜில்லா நாகப்பட்டினம்தான். அந்த நாகப்பட்டினத்தைத்தான் அவர் பாம்புப்பட்டினம் என்று குறிப்பிட்டு, அதைப் பற்றி அருமையான கட்டுரையும் எழுதியிருக்கிறார். இதுவரை படிக்காதவர்கள் கட்டாயம் படிக்க வேண்டிய கட்டுரை அது. அவர் பிறந்ததும் வளர்ந்ததும் பாம்புப்பட்டினத்திலே தான் என்றாலும் அவர் சேவையைத் தேடிக்கொண்டது திருநெல்வேலிதான். இன்று அவரைக் கேட்டுப் பாருங்கள்—உங்கள் ஊர் எது என்று. திருநெல்வேலிதான் என்று சொன்னாலும் சொல்லலாம். ஏனென்றால் அவரை அவ்வளவு தூரம் கவர்ந்த ஊர் அது. திருநெல்வேலியிலே முப்பத்து மூன்று ஆண்டுகளுக்கு முன்னே கம்பன் திருநாளை முதன் முதலாகக் கொண்டாடினார்கள், ரஸிகமணி டி. கே. சி.யின் தலைமையில் 'வட்டத்தொட்டி' அன்பர்கள். அவர்களிலே பேராசிரியர் ஒருவர். ''என் வாழ்க்கையில் அதை ஓர் அபூர்வமான அனுபவம் என்று நிச்சயமாகச் சொல்வேன். அவ்வளவு உற்சாகம், கவிதையில் அவ்வளவு உறுதியான மோகம், அதற்கு முன் ஒரே காலத்தில் அத்தனை பேரிடத்தில் நான் கண்டதில்லை. தமிழிலும் இலக்கியத்திலும் எனக்குப் புதியதொரு நம்பிக்கை பிறந்தது'' — என்று அவருடைய அநுபவத்தைச் சொல்கிறார். ஆங்கிலப் பேராசிரியராக அடியெடுத்து வைத்த அவரை, திருநெல்வேலி மண்ணும், தாமிரவருணித் தண்ணீரும் பொதிகைத் தென்றலும், டி. கே. சி. தலைமையும், 'வட்டத்தொட்டி' கூட்டுறவும் நல்ல தமிழ் அன்பராக மாற்றியதோடு மட்டுமின்றி, தமிழ் அறிஞராகவும் ஆக்கித் தந்துவிட்டன. இதுவரை ஆங்கிலப் பேராசிரியராக மட்டுமே இருந்த அவர் தமிழ் இலக்கிய ரசிகராக, கவி பாடும் 'நாணலாக' உருவெடுத்தார். ஏற்கனவே அவருக்கிருந்த பன்மொழிப் புலமையும், நுண்ணிய இலக்கிய உணர்வும் இதற்குத் தூண்டுகோலாக அமைந்தன.

ஆங்கிலக் கவிக்குக் குழைந்த அவர் உள்ளம் தமிழ்க் கவிக்கு மேலும் குழைந்து நெகிழ்ந்தது. உலக இலக்கியப் பூஞ்சோலையிலிருந்து நறுமணம் கமழும் மலர்களைப் பறித்துத் தமிழ் மகளுக்குச் சூட்டி மகிழ ஆரம்பித்தார் அவர்.

'' பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள்
தமிழ் மொழியில் பெயர்த்தல்
வேண்டும் ''

என்ற பாரதியின் வாக்கைக் கருத்தில் கொண்டு பிறநாட்டு இலக்கியங்களின் தனித்தன்மை சிதையாமல் அவற்றுக்குத் தமிழ் வடிவம் தர முனைந்தார் — ''மொழிபெயர்ப்பு என்பதே கடினமான சோதனை. அதுவும் கவிதையை மொழிபெயர்ப்பது என்பது

# ஃபாஷனில் கண்ணுள்ளவர்கள்



விரும்புவது டாட்டா டெக்ஸ்டைல்ஸ் வாயில் புடவைகள். வழிவழி வந்த எழில் வகைகளோடு, தற்கால இழைகளிலும் கிடைக்கும் எண்ணற்ற பிரிண்ட் வகைகளில் ஒன்றுதான், வெள்ளைப் பின்னணி கொண்ட இந்த ஃபாஷன் டிசைன். கண்ணைக் கவரும் வண்ண வண்ண ரகங்களில் வருகின்றன டாட்டா டெக்ஸ்டைல்ஸ் வாயில் புடவைகள்—அவற்றின் புதுமைப் பொலிவு நாள் முழுவதும் நீங்காது நிலைத்து நிற்கும்.

எல்லாப் பெரிய கடைகளிலும் கிடைக்கும்

**TATA** Textiles

ULKA-TT. TAM



# ஸ்ரீ விசாலம் சிட் பண்டு லிமிடெட்.

(ஸ்தாபிதம் 1947)
(பதிவு செய்யப்பட்ட அலுவலகம்: திருநெல்வேலி-6.)
மத்திய அலுவலகம்: 61-B, உஸ்மான் ரோடு,
தி. நகர், மதராஸ்-17. (போன்: 42916.)

அங்கீகரிக்கப்பட்ட மூலதனம்: ரூ. 5,00,000 ★ செலுத்தப்பட்ட மூலதனமும் சேர்வும் ரூ. 1,20,123

மொத்த ஆஸ்திகள் 85 லட்சங்கள்

பிக்சட் டெபாசிட்டுகளுக்கு $9\frac{1}{2}\%$ வரை வட்டி வழங்கப்படுகிறது

31--3-66-ல் சிட்டு நடைமுதல் நிதி

**Rs. 1,63,00,000** -க்கு மேல்

[19 வருடங்களில் 2 லட்சத்திலிருந்து 163 லட்சத்திற்கு வளர்ச்சி அடைந்துள்ளது]

M. 26வது குரூப் ரூ. 25,000 சீட்டு விரைவில் ஆரம்பமாகிறது!
மாதம் ரூ 1250 விதம் 20 தவணைகள்.
ஏலங்கள் வழக்கம்போல்
எங்கள் திருச்சி கிளையில் நடைபெறும்.
தணிக்கை செய்யப்பட்ட பாலன்ஸ்ஷீட்டுகள் சேர விரும்புகிறவர்களுக்கு அனுப்பி வைக்கப்படும்.

163, 160, 150, 140, 130, 120, 110, 106, 100, 90, 83, 80, 76, 70, 60, 50, 43, 40, 32, 30, 21, 20, 18, 15, 10, 9, 8, 7, 6, 2

1948, 1949, 1950, 1951, 1952, 1953, 1954, 1955, 1956, 1957, 1958, 1959, 1960, 1961, 1962, 1963, 1964, 1965, 1966

PARAMOUNT

காற்றைப் பிடித்துக் கரகத்தில் அடைக்கின்ற கணக்குத்தான்'' என்று சொல்லும் பேராசிரியரே, அருமையாக, அற்புதமாகக் கவியரசர் தாகூரின் கவிதைகளைத் தமிழாக்கித் தந்திருக்கிறார். அவற்றைப் படிக்கின்றபோதோ மொழி பெயர்ப்பு என்ற எண்ணமே நமக்கு வருவதில்லை. கவி உள்ளத்தைப் புரிந்து பாடக் கவிஞனால்தானே முடியும்? குழந்தையைப் பற்றிய பாடலொன்று இதோ.

**வாழி இந்தப் பிஞ்சுள்ளம்**
**வாழி இந்த வெள்ளை மனம்**
**வாழி மண்ணை முத்தமிட**
**வானைக் கொணர்ந்த இந்த உயிர்**
**ஆழிக் கதிரோன் ஒளியை இவன்**
**ஆசையோடு தழுவுகிறான்**
**தாழா அன்பு தவழத் தன்**
**தாயின் முகமும் கொஞ்சுகிறான்.**

கவிதை மொழிபெயர்ப்பு என்று சொல்ல முடியுமா? கவியின் உள்ளத்தையும் உணர்ச்சியையுமே அல்லவா கொண்டுவந்து புகுத்தியிருக்கிறார்?

பேராசிரியர் அ. சீ. ரா. கவிஞர் மட்டுமல்ல. நல்ல கட்டுரையாளர். இனிய பேச்சாளர். கம்பன் கவிதையிலே இதயம் பறி கொடுப்பவர். பாரதியின் கவிதைகள் சிலவற்றை ஆங்கிலத்திலே ஆக்கித் தந்திருக்கிறார். ''கம்பனையும் பிற நாட்டார் அறியும் வண்ணம் ஆங்கிலத்திலே மொழி பெயர்க்க வேண்டும். அதைத் தாங்கள் தான் செய்ய வேண்டும்'' என்று கம்ப அடியார்கள் பலர் அவரை வற்புறுத்திக் கொண்டிருக்கிறார்கள். அவருக்கும் ஆசையும் ஆர்வமும் இருக்கிறது. மற்றவர்கள் கொடுக்கின்ற ஊக்கம்தான் அவரை அந்தப் பணியிலும் ஈடுபடச் செய்ய வேண்டும். அந்தப் பணியை அவர் மேற்கொண்டாரானால் அது அவரது வாழ்விலே அவர் சாதித்த மகத்தான சாதனையாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

அன்று கல்லூரியிலே அவர் வகுப்பு நடத்திய காலத்திலும் சரி — இன்று மேடையிலே அவர் பேச்சைக் கேட்கின்றபோதிலும் சரி, நல்ல சங்கீதக் கச்சேரி ஒன்றைக் கேட்பது போன்ற ஆனந்தமும், இனிமையும் நெஞ்சில் நிறைவதை உணரலாம்., அவரது சிந்தனை ஓட்டமும், கற்பனைத் திறமும் பழகு தமிழ் நடையும், சொல் அழகும் சற்றே தலைநீட்டும் நையாண்டியும், எல்லாவற்றுக்கும் மேலாக அந்தக் குரலினிமையும் கேட்பவர் உள்ளத்தில் நெடுநாட்கள் ஒலித்துக் கொண்டேயிருக்கும். இதை உணர்ந்த மதுரை சர்வகலாசாலைத் துணை வேந்தர் திரு தெ. பொ. மீ. சொல்கிறார்: ''பேராசிரியர் அ. சீ. ரா. எதிர்காலத்தில் பழுத்தினிக்கப் போகும் பிஞ்சு மனங்களோடு உறவாடி அவற்றை வளர்க்கும் பேறு பெற்றவர். அப்பிஞ்சு உள்ளங்களின் தெய்வத் துடிப்பினை அறிந்தவர். ஆங்கிலப் பேராசிரியராகப் பணி புரிந்ததில், தலைமுறை தலைமுறையாய்ப் பாட்டிற் பழகிய தமிழ் மனம் உடையவர்'' என்பதாக. பேராசிரியர் எங்கள் குருதேவர் — இன்னும் பல்லாண்டு, பல காலம் ஆரோக்கியத்துடன் வாழ்ந்து நல்ல பல இலக்கியப் படைப்புக்களை நமக்கு ஆக்கித் தர வேண்டும் என்று அவரது மாணவ சமுதாயத்தின் பிரதிநிதியாக நின்று முழுமுதற் கடவுளை வேண்டிக் கொள்வதுடன் மீண்டுமொரு முறை பல்லாண்டு கூறி வணங்குகிறேன்.



ஆங்கிலத்தில் பெரும் புலமை நிறைந்த அந்த பிரமுகர் ஆங்கில மொழிச் சொல் எதையும் கலவாமல் அன்பர்களோடு உரையாடுவதென் முடிவு செய்தார். கோயம்புத்தூரிலுள்ள பொழுதுபோக்குச் சங்கமொன்றில் உறுப்பினர்கள் பயன்படுத்தும் ஒவ்வோர் ஆங்கிலச் சொல்லுக்கும் ஆறு பைசா அபராதம் செலுத்த வேண்டுமென்று வரையறை செய்தார்; இதன் பயனாக ஆங்கிலச் சொற்களுக்கேற்ற தமிழ்ச் சொற்களைப் பலரும் அறிந்து கொள்ளும்படி செய்தார்; சங்கத்தின் நிதிவளமும் இதனால் பெருகிற்று! இந்தப் பெரியார் யார் என்று தெரியவில்லையா? திரு ஆர். கே. சண்முகம் செட்டியார் அவர்கள்தான்.

ஆதாரம் : 'சோமலே' எழுதிய பல்சுவைக் கட்டுரைகள்.
அனுப்பியவர் : 'லக்ஷ்மிராமன்'

## கூட்டுக் கணக்கு

அவன் அவசரமாகப் பணம் வேண்டுமென்று கேட்டான்.

''பாங்கியில் பணத்தை வைத்துக்கொண்டு என்னிடம் வந்து கடன் கேட்கிறாயே?'' என்றார் நண்பர்.

''அது இரண்டு பேர் பேரிலும் இருக்கிறது...'' என்று கையைப் பிசைந்தான் அவன்.

''இருந்தால் என்ன? என்னிடம் கெஞ்சுவது போல் உன் மனைவியிடம் கெஞ்சுவது...''

''அவள் ஒத்துக் கொண்டாலும் என் மாமியாருக்கு மனம் இரங்காதே? இவர்கள் இரண்டு பேர் பேரிலும் அல்லவா கணக்கு இருக்கிறது!'' என்று பெருமூச்சு விட்டான் அவன்.

— எம். கே. கே.





## மதிப்பில் மாற்றம்!

ஒரு வெறும் இரும்புத் துண்டானது 5 டாலருக்குத்தான் விற்கப்படுகிறது. அதே இரும்புத் துண்டைக் குதிரை லாடங்களாகச் செய்தால் 10.50 டாலர் விலை போகிறது. ஆணிகளாக்கி விட்டால் அதுவே 3,285 டாலர் தருகிறது.. கடிகார பாலன்ஸ், ஸ்பிரிங்குகளாக ஆக்கிவிட்டாலோ அதன் விலை 2,50,000 டாலர் ஆக உயர்ந்து விடுகிறது!

இப்படித்தான் மனிதனுக்கும். அவன் தன்னைத் தானே எப்படிப் பயன்படுத்திக் கொள்கிறான் என்பதைப் பொறுத்துத்தான் அவன் மதிப்பும்அமைகிறது!

ஆதாரம்: ''ஸன்ஷைன்''
தகவல்: ஏ. கே. கந்தசாமி

## உங்களுக்குத் தெரியுமா?

- **இசைத்தட்டின் நீளம் என்ன?**

  சாதாரண கிராமபோன் ரெகார்டில் முள் சுற்றும் தூரம் 220 கஜம். - அதாவது ஒரு பர்லாங்.

- **கடலில் விழுந்தோர்க்கு வாசனைத் திரவியம்**

  போர் விமானத்தில் செல்பவர்களிடம் ஒரு வாசனைச் சரக்கு கொடுக்கப்படுகிறது. விமானம் நொறுங்கியோ அல்லது பாரசூட்டில் இருந்து தவறி விழுந்துவிட்டாலோ அவர்கள் தங்களிடமுள்ள வாசனைப் பொருளைத் தங்களைச் சுற்றிப் பரப்பி விடுவார்கள். அது சுறா மீன்களுக்குப் பிடிக்காததாகையால் அவைகள் அவர்களைக் கடிக்கமாட்டா.

- **குரானை ஒப்பிக்க எத்தனை நேரமாகும்?**

  உலகிலேயே இரண்டாவது பெரிய சர்வகலாசாலையாக விளங்குவது கெய்ரோவில் உள்ள முகம்மதியக் கல்லூரி. இதில் சேர்பவர்கள் யாவருக்கும் ஒரு பரீட்சை உண்டு. எல்லோரும் குரானை மனப்பாடம் செய்து ஒப்பிக்க வேண்டும். அதன் பின்னரே இதில் அனுமதிக்கப்படுவர். இதை ஒப்பிக்க மூன்று நாட்கள் ஆகும். அங்கு படிக்கும் 25,000 மாணவர்களும் இதில் தேறவே செய்கிறார்கள்.

தகவல்: ப. பத்மநாபன்




**கொவ்வை:** இதை நான் பார்த்தது கூட இல்லை. ஆயினும், சிவப்பாகத்தான் இருக்கவேண்டும் என்று நம்பி, என் கதைகளில் எல்லாம் கோபக்காரர்களின் கண்களைக் கொவ்வைப்பழமாக ஆனதாக வர்ணித்திருக்கிறேன். சில சமயங்களில் கதாநாயகிகளின் அதரங்களை வர்ணிக்கவும் பயன்படும்.

**பாகல்:** இந்தப் பழம் எனக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்காது. நானாக, அறிந்து வாங்குவதில்லை. நான் எவ்வளவோ சிரமப்பட்டுப் பாகற்காய்தான் வாங்கிச் செல்வேன். பைக்குள் இருந்த அந்த அரை மணி நேரப் போதில் எப்படித்தான் அது பழுக்குமோ? வீட்டுக்குப் போனால், மனைவி 'இந்தப் பாகற் பழத்தையும் கிழத்தையும் எல்லாம் யார் உங்களை வாங்கி வரச் சொன்னார்கள்?' என்று பொறுக்கிப் பொறுக்கி மஞ்சள் பழத்தை விட்டெறிவாள். அதிலிருந்து சிவப்பாக விதை தெறித்துப் பறக்கும், கண்ணையிலின் சிலம்பிலிருந்து முத்தோ—மாணிக்கமோ—மறந்து விட்டேன் எது என்று — சிதறினாற்போல்.

**சிவம்:** கழுத்தில் உருத்திராட்சம், உடலில் பட்டை பட்டையாகத் திருநீற்றுடன் எவரேனும் காட்சியளித்தால், அசல் சிவப்




**பு**கழ்பெற்ற சிந்தனையாளர் இங்கர்சால் திறமையான வக்கீலும் கூட. அவரது வாதத் திறமை ஈடிணையற்றது. ஒரு முறை நீக்ரோ ஒருவன் ஆடு திருடிவிட்டதற்காகச் சிறைக்கு அழைத்துச் செல்லப்படுவதைக் கண்ட அவர் அவனுக்காக மனமிரங்கித் தாமே வழக்காட முன்வந்தார்.

மிகத் திறமையாக வாதாடி அவனுக்கு விடுதலையும் வாங்கிக் கொடுத்துவிட்டார்.

''இப்பொழுது சொல். நீ ஆடு திருடியது உண்மையா அல்லது இது ஜோடிக்கப்பட்ட கேஸா?'' என்றார் இங்கர்ஸால்.

அதற்கு அவன் சொன்னது இது தான்: ''ஐயா, நான் ஆடு திருடியது என்னவோ உண்மைதான். ஆனால் நீங்கள் கோர்ட்டில் அபாரமாக வாதாடி நான் திருடவேயில்லை என்பதை நிரூபித்ததும் எனக்கே நான் திருடினேனா, இல்லையா என்று சந்தேகம் வந்துவிட்டது!'' என்றான்.

தகவல்: எறும்பு
ஆதாரம்: 'சிந்தனையாளர் இங்கர்சால்'

---

பழமாய்த் தோன்றுவதாகச் சொல்கிறோம். வைஷ்ணவர்கள் மட்டும் ஏன் சும்மா இருக்க வேண்டும்? கழுத்தில் துளசிமாலை, உடலில் பன்னிரு நாமங்களுடன் திகழும் பெரியவர்களை வைஷ்ணவப் பழம் என்று ஏன் சொல்லக்கூடாது?

**நெல்லி:** உள்ளங்கையில் நெல்லிக் கனியெனத் தெளிவாகப் புரிவதாகச் சொல்வார்கள். தெளிவுபடுத்தும்போது. இதற்கு என்ன பொருள் என்பது எனக்கு என்றுமே விளங்கியதில்லை. நான் எம். ஏ. வாசித்துக் கொண்டிருந்த நாட்களில் பாடத்தில் ஏதும் புரியாவிட்டால், சமையலறையில் சென்று ஒரு நெல்லிக் கனியை வாங்கி உள்ளங்கையில் வைத்துக் கொண்டு, சிறிது நேரம் பொறுப்பேன். அதற்குள்ளேயே, எனக்கு அவ்வளவு சிக்கலான விஷயங்களெல்லாம் புரிய மாட்டா என்பது விளங்கிவிடும்! வாழ்க நெல்லிக் கனி!

**மா:** ஒரு மாம்பழத்துக்காகக் கோபித்துக் கொண்டு, கைலாயத்தை விட்டுக் குமரன் ஆண்டியாய் ஆவினன்குடி புகுந்து, பின் மலைமீதேறிப் பக்தர்களை ஆட்கொண்டது மாம்பழ மாகாத்மியமா அல்லது பழனித் தலபுராணமா என்பது ஆராய்ச்சிக்குகந்த பொருளாம். மாம்பழத்துக்காகக் கோபித்துக்கொண்ட பாலகனுக்குப் போய் வாழைப் பழத்தில் பஞ்சாமிர்தம் செய்து அபிஷேகம் செய்வது பொருத்தமல்ல என்பது என் ஆராய்ச்சி முடிபு.

**பலா:** அப்பன் சொறியன், ஆத்தாள் சடைச்சி, அண்ணன் விழியன்... என்று இப்படி ஒரு விடுகவி உண்டு இப்பழத்திற்கு. வேறெந்தப் பழத்துக்கும் விடுகவி இல்லை. பலாவின் பெருமையே பெருமை!

**பேரிக்கை:** பணம் செலவழிக்காமல் வாங்கக் கூடிய பழம் இது. அதாவது, பழைய நியூஸ் பேப்பரையும் (புதிய) துணிமணிகளையெல்லாம் போட்டு, இலவசமாக வாங்கித் தின்னலாம்.

**வாழை:** வாழைப் பழத்தில் ஊசி ஏற்றுகிறாற்போல் என்று ஒரு பழமொழி. வாழைப் பழத்தில் எதற்கு ஊசியை ஏற்ற வேண்டும் என்று நீங்கள் எண்ணலாம். அந்தக் காலத்தில் ஆபீசுகளில் குண்டூசிகளைச் செருகிவைக்க நாரினால் செய்த 'பின் குஷன்' கிடையாது. வாழைப் பழத்தில் ஊசிகளைக் குத்திவைத்திருப்பார்களோ, என்னவோ? (இது என் சொந்தக் கருத்து) வாழைப் பழத்தில் குத்திய ஊசியை எடுத்துக் காகிதங்களில் தைத்தால் சரக்கென்று இறங்கும்!

வாழைப் பழத் தோலுக்குத் தனியான மதிப்பொன்று உண்டு. அது என்ன? ஆரஞ்சுத்தோலில் வேண்டுமானால், 'மார்மலேடு' பண்ணிச் சாப்பிடலாமே ஒழிய, வழுக்கி விளையாடி 'ஸ்கேட்டிங்' செய்வதற்கு வாழைத் தோல்தான் உகந்தது!

பக்கத்து வீட்டுக் குழந்தை முன்பொரு சமயம் காலணாவை விழுங்கி விட்டது. உடனே டாக்டரிடம் தூக்கிக்கொண்டு ஓடினார்கள். டாக்டர் குழந்தையின் வயிற்றைத் தம்மால் ஆனமட்டும் பிசைந்து பார்த்து விட்டுத் தம்மால் முடியவில்லை என்பதை ஒப்புக்கொள்கிற தோரணையில் ஒரு வைத்தியம் சொன்னார். ஓர் அரையணாவுக்கு வாழைப் பழம் வாங்கிக் குழந்தைக்குக் கொடுங்கள். காசு தானாக வந்துவிடும்!

தகப்பனோ சரியான பேர்வழி. காலணாவிற்காக அரையணா செலவழிப்பதா? வேண்டாம் என்று வாளாவிருந்து விட்டார்.

குழந்தை பிழைத்து விட்டது. பாவம், அது விழுங்கிய காலணா பிழைக்கவில்லை. அதற்குள் சர்க்காரே காலணாவெல்லாம் செல்லாது என்று சட்டம் பிறப்பித்தனர்!

— 'களப்பாள் நம்பி'

அதிகரித்த வெப்பத்தால்
ஏற்படும் விரிசல், பிளவு, அரிப்பு
முதலியவைகளை எதிர்த்து நிற்கும்

# ஏஸிஸி
# ஹை அலுமினு
# ஃபயர்பிரிக்குகள்

**உங்கள் பிரத்தியேகத் தேவைக்கேற்ப தயாரிக்கப்படுகின்றன!**





எங்கள் ஃபயர்பிரிக்குகளை உங்கள் பிரத்தியேகத் தேவைக்கேற்றபடி தயாரித்துத் தருகிறோம். உங்களுடைய பிரத்தியேகத் தேவை என்ன என்பதை எங்களுக்குத் தெரிவியுங்கள். மீடியம், ஹை மற்றும் ஸூபர் அளவில் அலுமினு உள்ள ஏஸிஸி ஃபயர்பிரிக்குகள் கிடைக்கின்றன. மிகவும் அதிகரித்த வெப்பத்தில், கடினமான சூழ்நிலையில், நீடித்து உழைப்பதற்கேற்ற உரம் பெற்றவை இந்த ஹை அலுமினு ஃபயர்பிரிக்குகள்.

இதர விவரங்களுக்கு
எழுதுங்கள்:
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங்
கம்பெனி ஆஃப் இந்தியா
லிமிடெட்
பம்பாய். அஹமதாபாத்
பெங்களூர், கல்கத்தா
கோயம்பத்தூர். புது டில்லி
இந்தூர். கான்பூர். மதராஸ்
பாட்னு. ஹைதராபாத்

ஏஸிஸி
கட்னி

தி அஸோஸியேடட் ஸிமெண்ட் கம்பெனீஸ் லிமிடெட்
தி ஸிமெண்ட் மார்க்கெட்டிங் கம்பெனி ஆஃப் இந்தியா லிமிடெட்

JWT. CM-2478

முதல் பரிசு நாவல்

# முள்ளும் மலரும்

உமாசந்திரன்

## அத்தியாயம் 11

**மா**யாண்டி பழையகாலத்து ஆசாமி. அடாபிடித்தனம் எதுவும் தெரியாத அப்பாவி. ஆரம்ப நாட்களில் மலைச் சரிவில் குழாயமைப்பு வேலைகள் நடந்து கொண்டிருந்த சமயத்தில் கையால் இயக்கக்கூடிய விஞ்ச் யந்திரத்தை ஒட்டும் பொறுப்பு அவனுடையதாகத்தான் இருந்தது. அதன் பிறகு அவன் ஒர்க்ஷாப்பில் மெக்கானிக்காகச் சேர்ந்து விட்டான். இருந்தபோதிலும் வாரா வாரம் காளியண்ணனது ஒய்வு நாட்களிலும் அவன் வேறு விடுமுறை பெற்றுச் செல்லும் நாட்களிலும் மாயாண்டியின் ''டூட்டி'' ஒர்க்ஷாப்பில் இல்லாமல் காளியண்ணனின் உடும்புக் கொட்டகையில்தான் இருக்கும். எந்த ''டூட்டி'' போட்டாலும் மாயாண்டி மனம் கோணாமல் செய்து வந்தான்.

காளியண்ணன் மாயாண்டியை மதிப்பதே கிடையாது. முதுகெலும்பில்லாத தொடை நடுங்கி என்று அவனைக் கேலி செய்து, மிகவும் அலட்சியமாகத்தான் அவனிடம் நடந்து கொள்வான். ஆனால் மாயாண்டிக்குக் காளியண்ணனிடம் ஓர் அலாதி விசுவாசம். காளியண்ணன் அவனைக் கீழே போட்டு மிதித்தாலும் அவனுக்குக் கவலையில்லை. அவன் காலைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டு அவன் ஏவியதைச் செய்து கொண்டிருப்பான். இத்தனைக்கும் வயதிலும் வேலை அனுபவத்திலும் காளியண்ணனுக்கு அவன் எவ்வளவோ மூத்தவன் தான். தன்னைவிடப் பதினைந்து வயது இளையவனை காளியண்ணனிடம் அந்த நாற்பது வயது ஆசாமி ஓர் அடிமையைப் போல்



கு பாச்சிக்கு முதன் முதலில் புகையிலையைக் கொண்டு வந்தவர் ஒரு துருக்கியர். சந்தை தினத்தன்று அவர் தமது மூட்டையை அவிழ்த்து, ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு மக்களைப் பார்த்துப் பேச ஆரம்பித்தார்:

''மக்களே! அனைவரும் வாருங்கள்! எனது புகையிலையை வந்து வாங்குங்கள். இதன் விலை அதிகமுமில்லை; மிக மலிவுமில்லை. இது துருக்கியப் புகையிலை. நான் வாங்கிய விலைக்கே உங்களுக்கு விற்கிறேன். ஆஹா! என்ன மணம்! உப்புத்தாளைப் போன்று இது தொண்டையை அறுக்கிறது! வாருங்கள்! வந்து புகையுங்கள்! ஆண் மகனின் தலைக்கு மேலே எப்பொழுதும் புகை சூழ்ந்திருக்க வேண்டும். அது துப்பாக்கிக் குண்டுப் புகையாகவோ அல்லது புகையிலைப் புகையாகவோ இருப்பதுதான் ஆண் மகனுக்கு அழகு!''

குபாச்சி மக்களுக்குப் புகையிலைப் புகையைப் பற்றி விவரம் தெரியாது; பலர் வந்தனர்; எரிந்துகொண்டிருந்த சிகரெட்டை ஒரு முறை இழுத்தனர்; இருமினர்; போய் விட்டனர்; பணம் கொடுத்துத் தன்னையே யாரேனும் மூச்சுத் திணற வைத்துக் கொள்வார்களா?

நீண்ட நேரம் ஆயிற்று. யாரும் துருக்கியரின் புகையிலையை வாங்கவில்லை.

துருக்கியர் பார்த்தார். மீண்டும் உரத்த குரலில் புகையிலையின் தன்மைகளைப் பற்றிக் கூற ஆரம்பித்தார்:

''புகை பிடிப்பவர் எவரையும் நாய் கடிப்பதில்லை; யாரெல்லாம் புகைக்கிறார்களோ அவர்களுக்குப் பெண் குழந்தைகள் பிறப்பதில்லை; புகை பிடிப்பவர்களின் வீட்டுக்குத் திருடன் வர மாட்டான்; அவர்கள் முதுமை அடைய மாட்டார்கள்! இது சத்தியம்! வாருங்கள்! வாருங்கள்!''




துருக்கியர் குர்ஆனின் மீது ஆணையிட்டுக் கூறியதால் அவரது புகையிலையைப் பலர் வாங்கினர்.

ஓராண்டுக்குப் பிறகு ஒரு குபாச்சி நகரத்தான், புகையிலை விற்கும் துருக்கியரை டெர்பண்ட் கடைத் தெருவில் கண்டான். அவரை அம்பலப்படுத்த வேண்டும் என்று எண்ணினான். ஆனால் அந்தத் துருக்கியர் அளித்த பதில் இதுதான்:

''...ரனின் மீது ஆணையாக நான் கூறியவை உண்மைதான். புகை பிடிப்பவனை நாய் கடிக்காது என்றேன். ஏன்? அவன் எப்பொழுதும் தன் கையில் ஒரு கோலை வைத்திருப்பான். இல்லையெனில் அவனால் நடக்க முடியாது. பெண் குழந்தைகள் பிறக்காது என்றேன். காரணம் அவனுக்கு எந்தக் குழந்தையுமே பிறக்காது. திருடர்கள் வராததற்குக் காரணம் அவன் இரவு முழுவதும் இருமிக் கொண்டிருப்பான்; ஆள் விழித்திருக்கிறான் போலும் என்று திருடர்கள் வரமாட்டார்கள். புகை பிடிப்பவன் முதுமையை அடைய மாட்டான் என்றேன். ஆம்! அதற்குள் அவன் இறந்து விடுவான்!''

குபாச்சி நகரத்தான் அயர்ந்து போய் விட்டான்.

— அஹமத்கான் அபுபெக்கர்.

நடந்து கொண்டது சாதாரணமாகப் பார்ப்பவர்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். ஆனால் எதற்கெடுத்தாலும் மற்றவருக்குப் பணிந்து பணிந்து பழகிய மாயாண்டியின் கண்களுக்கு யாரையும் மதியாத காளியண்ணனின் முரட்டு சுபாவம் அவனை ஒரு வீரனாக உருவகப்படுத்திக் காட்டியதில் ஆச்சரியம் ஏதும் கிடையாது. அந்த வீரனுக்கு எந்தக் காணிக்கையும் செலுத்தத் தயாராக இருந்தான் அந்த அப்பாவி.

காளியண்ணன் புலியுடன் போராடி வெற்றி வீரனாகத் திரும்பி வந்த செய்தி மாயாண்டியின் கண்களில் காளியண்ணனின் மதிப்பைப் பல மடங்கு உயர்த்தி விட்டது. தானே அந்தப்



புலியைக் கொன்றுவிட்டு வந்தவன் போல் பெருமைப்பட்டுக் கொண்டான் மாயாண்டி. உச்சிக்கடவில் அந்தச் செய்தி பரவியதுமே முதல் முதலாகக் காளியண்ணனின் வீட்டுக்கு ஓடியவன் மாயாண்டிதான். தனது லட்சிய வீரனின் வீரச் செயலைக் குறித்து அவனை நேரில் பாராட்ட வேண்டுமென்ற துடிதுடிப்பை அவனால் எப்படி அடக்கிக் கொள்ள முடியும்?

ஆனால் உற்சாக மிகுதியில் மாயாண்டி உளறிக் கொட்டிய பாராட்டு மொழிகளைக் காளியண்ணன் காதில் வாங்கிக் கொண்டால்தானே?

"செத்த புலியைப் பத்தி இப்ப என்னய்யா பேச்சு? என் தோள் பட்டையைப் பாத்தியா? இது சரியாகி நான் டூட்டிக்கு வர்றதுக்கு ஒரு வாரமாவது ஆகும். அதுவரைக்கும் என் டூட்டியெல்லாம் உன் தலைமேலேதான்" என்றான் காளி.

"அதென்ன பிரமாதம் காளி? இப்பவே வேணும்னாலும் உன் டூட்டியை நான் கவனிச்சுக்கிறேன்."

"கவனிச்சுத்தானே ஆகணும். இன்னும் இங்கே நின்னு வளவளன்னு ஏன் பேசிக்கிட்டிருக்கே? உடும்புக் கொட்டகையைப் பார்த்து ஓடு சீக்கிரம். இதுக்குள்ளேயுமே அங்கே எல்லாரும் வந்து காத்திருக்கப் போறாங்க" என்று அவனை விரட்டினான் காளி.

அந்த வீரன் பேச்சுக்கு மாயாண்டி மறு பேச்சுப் பேசுவானா என்ன? மறு நிமிஷமே அங்கு நிற்காமல் உடும்புக் கொட்டகையை நோக்கி ஓடிவிட்டான்.

மாயாண்டியின் அந்த அப்பாவித்தனத்தை நினைத்து வள்ளிக்குப் பரிதாபமாக இருந்தது. காளியண்ணன் எவ்வளவு உதாசீனம் செய்தாலும் பாராட்டாமல் அவனுக்குத் தொண்டு செய்வதையே பிறவிப் பயனாகக் கருதும் அந்த ஆத்மாவைப் பற்றி அவளுக்கு எப்போதுமே அநுதாபம் உண்டு. இன்று அந்த அநுதாபம் பல மடங்கு அதிகமாக அவள் நெஞ்சில் நிறைந்தது. சாப்பாட்டு நேரம் வந்தபோது அவள் அஞ்சலையத்தையிடம் சொன்னாள்:

"அத்தே, மாயாண்டியண்ணன் காலையிலே கூட ஒண்ணும் சாப்பிடலே. அண்ணன் சொன்னதும் உடும்புக் கொட்டகைக்கு ஓடிப் போயிடுச்சு. நாள் முழுதும் பட்டினியாயிருக்கப் போகுதே, பாவம்..."

"ஆமாம் வள்ளி, நல்லவேளை ஞாபகப்படுத்தினே. நீதான் ஒரு நடை மாயாண்டிக்குச் சாப்பாடு கொண்டு போய்க் குடுத்திட்டு வந்திடேன்" என்றாள் அத்தை.

வள்ளி தனக்குச் சாப்பாடு எடுத்து வருவாள் என்று மாயாண்டி சிறிதும் எதிர்பார்க்கவில்லை. உண்மையில் அவன் அதுவரை சாப்பாட்டைப் பற்றியே நினைக்கவும் இல்லை. சாதாரணமாகவே அவனுக்குப் பசிவேளை என்று நிச்சயமாக எதுவும் கிடையாது. ஓர்க்ஷாப் டூட்டிக்குப் போகும்போதுகூட அவன் பகல் நேரத்துச் சாப்பாடு எடுத்துக் கொண்டு போவதேது? அவன் மனைவி ஒரு பத்திரகாளி. அவன் வேலைக்குக் கிளம்பிப் போகும் சமயத்தில் கூடக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருப்பாள். பிள்ளை குட்டி எதுவுமில்லாத வெறிச்சோடிய வாழ்க்கை வாழ்ந்து வாழ்ந்து மாயாண்டி மரத்துப்போயிருந்தான். ஏற்கனவே எச்கலெடுத்த ஒற்றைநாடி உடம்பு. அந்த அரை உடம்பும் அவனைச் சிறிதும் மதிக்காத மனைவியின் சுடு சொற்களைக் கேட்டுக் கேட்டுக் கால் உடம்பாய்க் குன்றிப் போயிருந்தது. அந்த உடம்புக்குப் பசி தாகம் என்று எப்போதாவது தோன்றுமா என்றுதான் யாரும் வியக்கும்படி இருந்தது.

"காளியண்ணனா எனக்குச் சாப்பாடு எடுத்துப் போகச் சொல்லிச்சு?" என்று வள்ளியைக் கேட்டான் அந்த அப்பாவி.

உண்மையைச் சொல்லி அந்த எளிய உள்ளத்தை ஏமாற்றத்தில் ஆழ்த்த வள்ளி விரும்பவில்லை.

"அண்ணன் வேலையைத்தானே நீ பாக்கறே. அந்த விசுவாசம் அண்ணனுக்கு இல்லாமலா போயிடும்?" என்றாள் பட்டும் படாததுமாக.

"எனக்குத் தெரியும். இந்த மாயாண்டின்னா உங்கண்ணனுக்கு உயிராச்சே" என்று பெருமைப் பூரிப்புடன் கூறிய மாயாண்டி அவள் கொண்டுவந்த சாப்பாட்டுப் பாத்திரத்தை வாங்கி ஒரு பக்கமாக வைத்தான்.

"இப்ப சாப்பிடப் போறதில்லையா?"

"காலையிலே நாயர் கடையிலே டீ குடிச்சுட்டுத்தானே புறப்பட்டேன் வள்ளி. பசியெடுக்க இன்னும் கொஞ்சம் நேரமாகும். வேலை முடிஞ்சதும் எப்படியும் அண்ணனைப் பார்க்க வருவேனில்லே? பாத்திரத்தை அப்ப கொண்டு வந்து குடுத்திடறேன்" என்றான் மாயாண்டி.

திரும்பி வரும்போது மூலைக்கடைத் திருப்பத்தில் ஒட்டுப் பாலத்தில் உட்கார்ந்து வேர்க்கடலையைத் தட்டித்

பெட்போர்டு

# சிக்கனம்

வாங்குகையில் குறைந்த விலை, குறைவான பெட்ரோல் செலவு, மிக அதிகமான டயர் மைலேஜ் ஆகியவை மூலம்

பெட்போர்டு

# நம்பக்கூடிய தன்மை

எல்லா நிலப்பரப்புக்கும் ஏற்றவாறு ஜெனரல் மோட்டார்ஸால் டிஸைன் செய்யப்பட்ட உறுதியான சேஸிஸ் ப்ரேம், கூடுதலான சக்தி கொண்ட ஆக்ஸில்கள் மூலம்

பெட்போர்டு

# பத்திரத்தன்மை

சிரமமற்ற ஸ்டீரிங், சவாரி செய்வதில் சுகம், எதிரில் தெளிவாகப் பார்க்கும் சௌகரியம் ஆகியவையுடன்

**ஏர் ப்ரேக்குகள் மூலம்**



இந்த வண்டியில் ஸெர்வோ யூனிட்டுடன் ஹைட்ராலிக் முறையில் இயங்கும் சக்திகொண்ட ப்ரேக்கு பொருத்தப்பட்டுள்ளது. காற்றழுத்த விநியோகம் நின்று விட்டால், தொடர்ந்து இயங்கும்படியாக ப்ரேக்குகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.







ஹிந்துஸ்தான்

# பெட்போர்டு

டீஸல் பெட்ரோல்

**வாங்குங்கள்**




ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் லிமிடெட், கல்கத்தா-1

இந்தியா முழுவதும் விற்பனையும் சேவை வசதியும் உள்ளன

தட்டி உடைத்துத் தின்று கொண் டிருந்த மங்காவைப் பார்த்ததும் வள்ளி, ''மங்கா...'' என்று அழைத்தவாறே அவளருகே சென்றாள்.

''இப்படி எங்கே வந்தே அக்கா?''

''மாயாண்டி அண்ணனுக்குச் சோறு கொண்டு போய்க் குடுத்திட்டு வரேன்.''

''சரித்தான்... யாரு அந்தக் கொட்ட கையிலே நீட்டி பார்த்தாலும் சோறு கொண்டு போறது உன் வேலேதானு?'' என்று சிரித்தாள் மங்கா.

''நான் கொண்டு போகலேன்னு, மாயாண்டியண்ணன் பசியோடதானே இருக்கும்?'' என்றாள் வள்ளி.

''அந்த அண்ணனேப் பத்தி அவ் வளவு கரிசனப்படறயே. இங்கே ஒரு தங்கை பசியோட இருக்கிறது உனக்கு மறந்துதானே போச்சு...'' என்றாள் மங்கா சிரித்துக் கொண்டே.

''ஏன்? ஆத்தா உனக்குச் சோறு வச்சிட்டுப் போகல்லியா?''

''ஆத்தாவுக்கு என் மேலே என்ன கோவமோ? சோத்துப் பானையைக் காலியா வச்சிட்டுப் போயிருக்கு. அதனுலேதான் இந்த வேர்க்கடலையை மென்று பசியை மறக்கடிச்சுக்கிட்டிருக் கேன்; அதுவும் முனியாண்டியண்ணன் கணக்கிலே கொடுக்கத் தொட்டு!''

''அடடா... நீ ஏன் அப்படி இருக் கணும் மங்கா? நேரே எங்க வீட்டுக்கு வந்திட வேண்டியதுதானே?''

''மத்த நேரமா யிருந்தா நீ சொல்ல ணும்னு காத்திருப்பேனு என்ன? இப்பத் தான் கடுவம் பூனே மாதிரி உங்கண்ணன் உட்கார்ந்திருக்கே வழியிலே. அது ஒண்ணு சொல்ல, நான் ஒண்ணு சொல்ல வீண் சள்ளே. அந்த வம்பெல்லாம் வேண்டாம்னுதான் ஆத்தா வருகிற வரையிலே இப்படியே ஓட்டறதுன்னு தீர்மானம் செய்திட்டேன். ஆத்தா வரட்டும். என்ன சண்டை போடறேன் பாரு, அதோட.''

''மங்கா, காயக் காய இருந்தா அப்படியெல்லாம்தான் எண்ணம் தோணும். பேசாமல் என்கூட வந்திடு. ஒரு ரசஞ் சோறுவது உனக்குக் கிடைக் காமப் போயிடாது எங்க வீட்டிலே'' என்றாள் வள்ளி.

''அது எனக்குத் தெரியாதா என்ன? உங்கண்ணன் உடம்பு சரியாகி ஒழுங்கா வேலைக்குப் போகிற வரையிலே உங்க வீட்டுச் சாப்பாட்டுக்கும் மங்காவுக்கும் ராசி கிடையாது'' என்றாள் மங்கா தீர்மானமாக.

''ஏன்... எங்கண்ணன்கிட்டே உனக் கென்ன பயம்?''



''சிங்கிள் பெட் ரூம் வேணுமா; டபுள் பெட் ரூம் வேணுமா?''

'''டிரிபிள்' பெட் ரூம் வேணும். நான் ரெண்டு பெண்டாட்டிக்காரனுக்கே!''

''பயமா?... பிடிக்கல்லே. அவ்வளவு தான். அதுக்குத்தான் என்னேக் கண் டாலே கண்ணேக் கரிக்குதே.''

வள்ளி சிரித்தாள்.

''மங்கா! இன்னும் எத்தனே நாளேக் குத்தான் நீ உலகம் தெரியாமே இருக் கப்போறே?'' என்றாள்.

''ஆமாம்... நீ பெரிய உலகத்தைக் கண்டுட்ட மாதிரி'' என்று அவளேத் தோளில் இடித்தாள் மங்கா.

அப்போது படபடவென்று மோட் டார் சைக்கிளின் ஒலி கேட்டது. இரு வரும் ஓரமாக ஒதுங்கி நின்றனர்.

அவர்கள் நிற்பதைப் பார்த்துவிட்ட குமரன் மோட்டார் சைக்கிளின் வேகத் தைக் குறைத்து அவர்கள் அருகே கொண்டு வந்து நிறுத்தினுன்.

''அண்ணனுக்கு எப்படி இருக்கு வள்ளி?''

''மாறுதல் ஒண்ணுமில்லே. அத்தை ரசஞ்சோறு குடுத்துது. சாப்பிட்டுட்டு நல்லாத் தூங்கிக்கிட்டிருக்கு.''

''இனிமேல்தான் ஜாக்கிரதையா யிருக்கணும். காயத்திலே ஈரம் படா மல் பார்த்துக்கிடணும். சீழ் பிடிச்சால் தொந்தரவு'' என்றான் குமரன்.

''அண்ணனுக்கு ஆஸ்பத்திரி வைத் தியமே பிடிக்காது. அதனுலேதான் ஏதேதோ பேசிடுச்சு. நீங்கதான் பெரிய மனசு பண்ணி அதை மன் னிச்சுடணும்'' என்று வள்ளி தயக்கத் துடன் தலே குனிந்தவாறு கூறிக் கொண்டிருக்கும்போதே மங்கா குறுக் கிட்டாள்.

''எப்படி மன்னிக்க முடியும்? அண்ணனுக்குத் தங்கச்சி சிபாரிசா? நீங்க மன்னிக்காதிங்க சார். நீங்க எவ்வளவு பெரியவங்க. உங்களைத் தூக்கி எறிஞ்சுப் பேச அதுக்கு என்ன அவ்வளவு திமிர்னு கேக்கறேன்'' என்முள் மங்கா.

குமரன் சிரித்து விட்டான். ''சரி, மங்கா! மன்னிக்கல்லே. வேறே என்ன தண்டனை கொடுக்கலாம்?'' என்றான்.

''வேலைக்கு வேண்டாம்னு சீட்டைக் கிழிச்சுக் கையிலே குடுங்க சொல்லறேன், அப்பத்தான் புத்தி வரும்.''

''ஐயையோ! பொல்லாத பொண்ணுயிருக்கியே'' என்று சிரித்த குமரன் துடிப்பு நின்றுவிட்ட மோட்டார் சைக்கிளை மீண்டும் இயக்குவதற்காக விசையைக் காலால் உதைத்தான்.

ஒதுங்கி நின்றிருந்த வள்ளி ஓரடி முன் வந்து கூறினாள். ''சார்! எங்க அண்ணன் மேலுக்குத்தான் அப்படியிருக்கு. மத்தபடி அது மனசிலே ஒண்ணும் கிடையாது.''

''ஆமாம்.... மனசிலே என்ன இருக்கும்? அதுதான் சுக்காம்பாறையாச்சே'' என்று நொடித்தாள் மங்கா.

குமரன் சிரித்துக் கொண்டே படபட வென்று ஒலி செய்தவாறு மோட்டார் சைக்கிளை முடுக்கி விட்டு வேகமாகத் திருப்பத்தில் திரும்பிச் சென்றான்.

அன்று வீரமணியும் கனகாவும் ஊருக்குப் புறப்படுவதாயிருந்தனர். அதற்காகத்தான் குமரன் காரியாலயத்தில் கவனிக்க வேண்டிய வேலைகளைச் சீக்கிரமாக முடித்துக் கொண்டு சற்று முன்னதாகவே வீட்டுக்குத் திரும்பியிருந்தான். வேலன்கடவு வரையில் அவர்களுடன் சென்று அவர்களை வழியனுப்பிவிட்டு வரவேண்டுமென்று திட்டம் போட்டுக் கொண்டிருந்தான்.

மோட்டார் சைக்கிளின் ஒலி கேட்டதும் போலா பரபரப்புடன் எழுந்து கேட்டைத் திறக்க ஓடி வந்தான்.

''அவங்க ரெண்டுபேரும் தயாராயிட்டாங்களா போலா?'' என்றான் குமரன்.

''எப்பவோ தயாராயிட்டாங்கோ. 'ஸா'புக்காகத்தான் காத்திருக்காங்கோ!'' என்றான் போலா.

அவர்களுடைய பெட்டி படுக்கைகளெல்லாம் காரில் எடுத்து வைக்கப் பட்டுத் தயாராயிருந்தன. வீரமணியும் கனகாவும் வெளி வராந்தாவுக்கு வந்தனர்.

''ஏன் இரண்டு பேரும் சோர்ந்தாற் போல் இருக்கிறீர்கள்? இன்னும் சாப்பிடவில்லையா?'' என்றான் குமரன்.

''சாப்பிடுவதா? நீ வராமலா?'' என்றான் வீரமணி.

''எனக்காகக் காத்திருக்க வேண்டுமா என்ன?''

''நீ எங்களைக் காக்க வைத்தால் தானே அந்தப் பேச்சு? சொன்ன நேரத்துக்குத் தவறாமல் வந்து விட்டாயே.''

கனகா அலுப்புடன் கொட்டாவி விட்டாள். ''ஆமாம் அண்ணா. நான் எதிர்பார்க்கவேயில்லை. வழியில் அந்தப் புலி வீரனுடைய வீட்டுக்குப் போய் விட்டுத்தான் வருவீர்கள் என்று நினைத்தேன்...''

''அந்த எண்ணம் எனக்கு இருக்கத்தான் இருந்தது. அதற்கு அதிக நேரமும் பிடித்திருக்காது. ஆனால் வழியில் அவனுடைய தங்கையையே பார்த்து விட்டேன். அவளிடமே காளியின் உடம்பைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொள்ள முடிந்தது.''

கனகாவின் இதழ்களில் கேலிப் புன்னகை அரும்பியது.

''குமரண்ணா! நீங்க என்ன ஏசு பரம்பரையா, மகாத்மா பரம்பரையா? காலையில்தான் அவன் உங்களை அவ்வளவு தூரம் அலட்சியம் செய்து அவமரியாதையாகப் பேசியிருக்கிறான். மறுபடியும் அவன் வீட்டுக்குப் போக வேண்டும் என்று நினைத்தீர்களே?''

குமரன் சிரித்தான். ''கனகா! அவனுடைய பண்புக்குத் தகுந்தபடி அவன் நடந்து கொண்டான். அதற்காக நாம் நம்முடைய பண்புகளை விட்டுவிட முடியுமா?'' என்றான்.

''ஆமாம்... என்ன பண்பு வேண்டியிருக்கிறது? முரடனுக்கு முரட்டுத்தனம்தான் புரியும். உங்கள் பண்பைப் பற்றி அவனுக்கு எங்கே புரியப் போகிறது?'' என்றாள் கனகா.

போலா எடுத்து வைத்த சாப்பாட்டை ஒரு வழியாக முடித்துக் கொண்டு மூவரும் வெளியே வந்த போது வானத்தின் சொரூபமே மாறிப் போயிருந்தது. கனத்த நீருண்ட மேகங்கள் கரிய யானைக் கூட்டங்கள் போல் திசையெங்கும் வியாபித்துக் கொண்டு எந்த நிமிஷமும் அந்த மலை முகடுகள் மீது குதித்துவிடத் தயாராகப் பயமுறுத்திக் கொண்டிருந்தன.

''கனகா, பார்த்தாயல்லவா?.... இன்று நீங்கள் புறப்படுவது ஏது?'' என்றான் குமரன்.

''இல்லை, குமரண்ணா, நாங்கள் இன்று போய்த்தான் ஆக வேண்டும்'' என்றாள் கனகா தீர்மானமாக. அது

# B-I



# S. S. ரஜுலா

**சென்னையிலிருந்து**

1966 நவம்பர் 7 — 1966 டிசம்பர் 1

சென்னையிலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்கு பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசதாரருக்கு விண்ணப்பிக்கவும்.

**மெஸர்ஸ் பின்னி & கோ., லிமிடெட்**
7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1

அல்லது கீழ்க்கண்ட கம்பெனியின் அங்கீகாரம் பெற்ற பாஸேஜ் புரோக்கர்களுக்கு விண்ணப்பிக்கவும்

**C. M. குட்டி**
புரொப்ரைட்டர் : குட்டி டிராவல் சர்வீஸ்
38, அங்கப்ப நாயக்கன் தெரு
சென்னை - 1

**மெஸர்ஸ் கோரளா டிராவல்ஸ்**
மாஸ்காட் ஹோட்டல்
திருவனந்தபுரம்

**நாகப்பட்டினத்திலிருந்து**

1966 நவம்பர் 8 — 1966 டிசம்பர் 2

நாகப்பட்டினத்திலிருந்து பினாங்கு மற்றும் சிங்கப்பூருக்குப் பிரயாணம் செய்ய விரும்பும் பிரயாணிகள் தங்களது பிரயாண டிக்கட்டுகளை கீழ்க்கண்ட விலாசத்தில் நேரிடையாகப் பெற்றுக் கொள்ளலாம்

**மெஸர்ஸ் மதுரா கம்பெனி பிரைவேட் லிமிடெட்**
முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம்

பினாங்கு போர்ட் ஸ்வெட்டன்ஹாம், சிங்கப்பூர் முதலிய இடங்களுக்கு நேரடியாக ஏற்றிச் செல்லவும், சிங்கப்பூரில் கப்பல் மாற்றி ஆஸ்திரேலியா நியூஜிலாந்து துறைமுகங்களுக்கு அனுப்பவும் சரக்குகள் சென்னையிலிருந்தும் நாகப்பட்டினத்திலிருந்தும் ஏற்றுக் கொள்ளப்படும்.

பிரயாணிகள் மற்றும் சாமான்கள் ஏற்றும் விவரங்களுக்குத் தயவுசெய்து எழுதவும் :

| | |
|---|---|
| **பின்னி & கம்பெனி லிமிடெட்** | **மதுரா கம்பெனி பிரைவேட் லிட்.** |
| 7, அரமனைக்காரத் தெரு, சென்னை-1 | முதல் லைன் பீச் ரோடு, நாகப்பட்டினம் |

ஏஜண்டுகள் : பிரிட்டிஷ் இந்தியா ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட்

மட்டுமல்ல, பேச்சை வளர்த்தாமல் காரில் ஏறி உட்கார்ந்து கொண்டாள்.

வீரமணி பெருமூச்செறிந்தான்.

மலைப்பாதையில் கொட்டும் மழையில் வீரமணியைக் காரோட்ட அனுமதிக்கக் குமரனுக்கு விருப்பமில்லை. பாதை தனக்கு நன்கு பழக்கமானபடியால் தானே காரோட்டிச் சென்றான். அவன் பயந்தபடியே ஆயிற்று. சம்பா நீர்த்தேக்கத்துச்சாலையில் திரும்பி வேலன் கடவுச் சாலையை எட்டுவதற்குள் வானம் சீறிக் குமுறிக் கொண்டு சோனாமாரியாகக் கொட்ட ஆரம்பித்துவிட்டது. மேகக் கூட்டங்கள் வானத்திலிருந்து பொழிந்தது போதாதென்று கீழேயும் இறங்கி வந்து வழியெல்லாம் அடைத்துக் கொண்டு குமைந்து நின்றன. காரின் முன் விளக்குகள் பிரகாசமாக எரிந்தும் கூடப் பாதையைப் புரிந்து கொண்டு முன்னேறிச் செல்வது மிகவும் கடினமாயிருந்தது. ஆமை வேகத்தில்தான் காரை ஓட்டிச் சென்று கொண்டிருந்தான் குமரன். அப்படியிருந்தும், திடீர் திடீரென்று திருப்பங்களும், ஏற்ற இறக்கங்களும் அவனைத் திக்கு முக்காடச் செய்தன. மயிரிழை தப்பினால் காரோடு அனைவரும் அதல பாதாளத்துக்குச் சென்று விடக்கூடிய பல கட்டங்களைத் தெய்வாதீனமாகத்தான் சமாளித்துக் கொண்டு ஒவ்வொரடியாக முன்னேறிக் கொண்டிருந்தான் குமரன்.

''பயமாக இருக்கிறதே...திரும்பிப் போய்விடலாமே!'' என்று பதைபதைப்புடன் கூறினாள் கனகா. அவளுக்கு அழுகையே வந்துவிடும் போலிருந்தது.

''திரும்ப முடியாது. மலைப்பாதை. முன்னே போவதைத் தவிர வேறு வழியில்லை. நம்மை முன்னோடியாக விட்டுவிட்டு ஒரு லாரி வேறு நம்மைப் பின்பற்றி வந்து கொண்டிருக்கிறது. எப்படியும் வேலன் கடவு வரை போகாமல் தீராது!'' என்றான் குமரன்.

மோட்டார்ப் பாதை வழியே வேலன் கடவு ஏறக்குறைய பத்து மைல் தூரத்தில் இருந்தது. மழை நிற்கும் வழியாயில்லை. இருக்க இருக்க அதன் உக்கிரம் அதிகரித்துக் கொண்டிருந்தது.

வேலன்கடவுவரையில்தான் அவர்களைப் பழி வாங்க வேண்டுமென்று மழை திட்டம் போட்டுக் கொண்டிருந்ததோ என்னவோ... வேலன்கடவு ராவுத்தர் கடையைத் தாண்டி அரைக்கல் தூரத்தில் கௌரியம்மன் கோயிலுக்குச் செல்லும் நடை பாதை வருவதற்குள்ளேயே வெறிச்சென்று மழை நின்றுவிட்டது. அதற்குக் கீழேயுள்ள மலைப் பகுதியெல்லாம் துடைத்து விட்டாற்போல் பளிச்சென்று துலங்கிக் கொண்டிருந்தது. ஒரு பொட்டு மேகத்தைக் கூட அந்தச் சரிவு நெடுகிலும் எங்குமே காண முடியவில்லை.

''தப்பினோம்'' என்று நிம்மதிப் பெருமூச்சுடன் கூறிக்கொண்டே காரை ஓர் ஓரமாக நிறுத்தினான் குமரன்.

''வீரமணி, இனிமேல் நீ தாராளமாக ஓட்டலாம். பாதையும் ஓரளவுக்கு நேராக இருக்கும். மழையைப் பற்றிய பயமும் கிடையாது. நிதானமாகப் போனாலே இருட்டுக்கு முன்னதாக விஜயபுரத்தை எட்டி விடலாம்'' என்றான் குமரன்.

''எப்படியும் இன்றிரவு விஜயபுரத்தில் தங்காமல் தீராது. நீயும் எங்களுடனேயே வந்து இருந்துவிட்டு, நாளைக் காலையில் புறப்பட்டு வந்து கொள்ளலாமே?'' என்றான் வீரமணி.

''அப்புறம் அங்கிருந்து இங்கே திரும்பி வரவேண்டியதில்லை. நேரே உங்களுடன் சென்னைப் பட்டணத்துக்கே போய் விடலாம். எனக்கு வேலையும் போய்விடும்'' என்று சிரித்தான் குமரன்.

''அப்படி ஆனாலும் நல்லதாச்சு, அந்த மாதிரி அத்துவானமான ஓரிடத்தில் வேலை பார்ப்பதை விட வேலையில்லாமல் இருப்பதே மேல் இல்லையா!'' என்றாள் கனகா.

''கனகா, என்ன பேச்சு இது?'' என்று அவளைக் கடிந்து கொண்ட வீரமணி குமரனிடம், ''ஆமாம், நீ எப்படித் திரும்பிப் போவாய்?'' என்றான்.

''என்னைப் பற்றிக் கவலைப்படாதே. மின்சார இலாகா வண்டி ஏதாவது இந்தப் பக்கம் வராமல் இருக்காது.''

அவர்களை வழியனுப்பி விட்டு நின்று கால் கடுத்துப் போன நிலையில்தான் மின்சார இலாகா ஜீப் ஒன்று அந்தப் பக்கமாக வந்தது. அதில் ஏறிக் கொண்ட குமரன் வீடு போய்ச் சேர்ந்ததும் அலுப்புத் தீரக் கட்டிலில் விழுந்து ஒரு தூக்கம் போட வேண்டும் என்று நினைத்துக் கொண்டான். ஆனால் அவன் நினைத்ததற்கு நேர் விரோதமாகப் புதிய பிரச்னை யொன்று அங்கே அவனுக்காகக் காத்திருந்தது. வானம் அவ்வளவு அடை மழையாகப் பெய்த பிறகு கருளியாறு சும்மா யிருக்குமா? கரை புரண்டு ஓடிய வெள்ளம் அணைக்கட்டு உயரத்துக்கு மேலே பொங்கிச் சீறிப் பாய்ந்து சென்று கொண்டிருந்தது. கைகளைப் பிசைந்து கொண்டு குறுக்கும் நெடுக்கும் நடந்தவாறு செய்வது அறியாது தவித்துக் கொண்டிருந்தான் போலா.

(தொடரும்)

சென்னை கெயிட்டி · ஸ்ரீமுருகன் · மேகலா · லிபர்ட்டி

மற்றும் தென்னாடெங்கும்...

















சிட்டாடல்

# காதல் படுத்தும் பாடு



டோமனிக் ஜோஸப்

ஜோஸப் தளியத் Jr.



ELEGANT

# 22. ஆண்டவனை நிமிர்த்திய அடியார்




**வா**னவரும் காமுறுமாறு எல்லா வளங்களும் ஒருங்கே அமையப்பெற்ற சோழ நாட்டில் திருக்கடவூர் என்ற ஒரு திருத்தலம் உண்டு. இராதந்திர கற்பத்திலே திருமால் முதலியோர் அமிர்தத்தைக் குடத்திலிட்டுத் தூய்மையாகிய இந்தத் தலத்தில் உண்ணும் பொருட்டு வைத்தனர். அதுவே அமிர்த லிங்கமாக உருப்பெற்று ஊன்றிக்கொண்டது. ஆதலின், இத்திருத்தலம் ''கடவூர்'' எனப் பெயர் பெற்றது. அத்திருத்தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவர் திருநாமம் அமிர்தகடேச்சுரர். பாலனுக்காகக் காலனை உதைத்த புனிதமான தலம் இது. செந்தண்மை பூண்ட அந்தணர்கள் பலர் அங்கு வாழ்ந்தனர்.

**வயலெலாம் விளைசெஞ் சாலி:**<br>
**வரம்பெலாம் வளையின் முத்தம்**<br>
**அயலெலாம் வேள்விச் சாலை;**<br>
**அணையெலாம் கழுநீர்க் கற்றை**<br>
**புயலெலாம் கமுகின் கா(டு); அப்**<br>
**புறமெலாம் அதன்சீர்போற்றல்**<br>
**செலவெலாம்தொழில்கள் ஆறே**<br>
**செழுந்திருக் கடவூர் என்றும்**

உழவர் பயிலும் பண்ணையில் மருதப் பாடலும், மறைக் கிழவர் பயிலும் இடங்களில் சாமப் பாடலும் முழங்கும். எருமைகள் சொரியும் பாலினால் தடாகங்களில் தாமரை தீம்பால் மணம் கமழும். வேள்விச் சாலையில் ஒதுங்கும் மேகங்களில் ஆகுதிப் புகை மணங் கமழும்.

திருவளர் பதியாகிய அத்திருக்கடவூரில் கலயனார் என்ற பெரியவர் வாழ்ந்தார். கடம் என்றால் கலயம் என்று பொருள். கலயர் என்பது சுவாமியின் பெயர். இதுவே இத்தலத்தில் அவதரித்த நாயனாருக்குத் தாய் தந்தையர் இட்ட பெயர் ஆயிற்று. அவர் அந்தணர் இருமரபில் வந்தவர். கங்கை சூடிய மங்கைபாகன் மலரடியை இடையறாது சிந்தித்து அழலிடைப்பட்ட மெழுகு போல் உள்ளம் உருகும் அன்பு மிக்கவர்; ஒழுக்கத்தால் உயர்ந்தவர்.

பாலனை ஆட்கொண்டு கூற்றை உதைத்த குன்றவில்லியார் ஆகிய அமிர்த கடேசப் பெருமானுடைய ஆலயத்தில் சாலவும் கமழச் சிலமுடன் நாடோறும் குங்குலியத் தீபமிடும் திருத் தொண்டினை அன்புடன் செய்து பாபத்தை விரட்டி வந்தார் கலயனார். ஆதலால் அவர் குங்குலியக் கலய நாயனார் எனப்பட்டார்.

நாயனாருக்கு வறுமை வந்து எய்தியது. வறுமையையும் அவர் பெருமையாகவே நினைந்தார். தமது தூபப் பணியைத் தவறாது புரிந்து கொண்டிருந்தார்.

நாள் செல்லச் செல்ல வறுமை அதிகரித்தது. நிலங்கள் எல்லாவற்றையும் விற்றுவிட்டார். வீட்டில் உள்ள அசையும் பொருள்களையும் விற்றார். பசியினால் சுற்றமும் மக்களும் பெரிதும் துன்புற்றார்கள். நாயனாரின் மனைவியார் மிகவும் வருந்தி, தமது திருமாங்கல்யத்தைக் கணவரிடம் தந்து, ''சுவாமி! இதை விற்று நெல் வாங்கி வாருங்கள்'' என்று கூறினார்.

மனைவியார் கொடுத்த தாலியைப் பெற்றுக் கொண்ட நாயனார் நெல் வாங்கும் பொருட்டுச் சென்றார். வழியில் ஒரு வணிகன் ஒப்பில்லாத குங்குலியப் பொதியினைக் கொண்டுவந்தான். நாயனார் அவனை நோக்கி, ''இது என்ன பொதி?'' என்று வினவினார். ''இது குங்குலியம்'' என்றான் வணிகன். அதனைக் கேட்ட நாயனார் அகமும் முகமும் மலர்ந்தார். 'ஐயனுக்கு இடும் குங்கிலியம் இதுவாயின் நான் பேறு பெற்றேன். இதனினும் சிறந்த பேறு உண்டோ? இந்தக் குங்குலியத்தை விடுத்து வேறு என்ன பெறுவதற்கு இருக்கிறது?' என்று சிந்தித்தார். வணிகனை நோக்கி, ''ஐயா! நான் பொன் தருவேன். இப்பொதியினைத் தாரும்'' என்று கூறித் தாலியை எடுத்துக் கொடுத்தார். வணிகன் அதனைப் பெற்றுக் கொண்டு குங்குலியப் பொதியைக் கொடுத்தான். நாயனார் அதி விரைவாக அதனை எடுத்துக் கொண்டு திருக்கோயிலுக்குச் சென்றார். உடையவர் பண்டாரத்தில் பொதியைச் சேர்ப்பித்து, உலகினையும், மக்களையும் மறந்து, எம்பிரானை நினைந்து அயரா அன்புடன் வழிபாடு செய்து கொண்டிருந்தார்.

சிவபெருமான் திருவருளின்படி குபேரன் கலயநாயனாரது திருமாளிகை முழுவதும் பொன்னும் மணியும் நெல்லும் அரிசியும் குவித்து வைத்தான். பசியினால் களைத்துத் துயிலும் அம்மையார் கனவில் இறைவன் எழுந்தருளி, தமது திருவருளால் செல்வம் நிறைந்த தன்மையை உணர்த்தியருளினார். திருவருட் செயலை எண்ணி எழுந்த அம்மையார், வீடு முழுவதும் பொன்னும் அரிசியும், நெல்லுமாகக் குவிந்திருப்பதைக் கண்டு திருவருளை வியந்து போற்றினார். விடியற்காலையாதலினால், முழுகி, சமையலறைக்குள் சென்று கணவனுக்குத் திருவமுது சமைப்பாராயினார்.

''அன்பனே! மிகவும் பசித்திருக்கிறாய். திருமனைக்குச் சென்று பாலன்னம் புசித்துப் பருவரல் தீர்க'' என்று நாயனார்பால் அருளிச் செய்தார் கண்ணுதற் கடவுள். எம்பெருமான் ஆணையைக் கேட்டுக் கைகூப்பி வணங்கினார் கலயனார். இறைவர் ஆணையை மறுக்க அஞ்சி, திருக்கோயிலினின்றும் புறப்பட்டு மாட வீதியில் உள்ள தமது திருமனையினைச் சேர்ந்தார்.

இல்லத்தை யடைந்த நாயனார் அங்கு இருநிதிக் குவியல்கள் சேர்ந்த செல்வத்தைக் கண்டார். திருமாங்கல்யத்துடன் திகழும் மனைவியாரை நோக்கி, ''இவையெல்லாம் எப்படி வந்தன?'' என்று கேட்டார். அம்மையார் அவரைத் தொழுது, ''எம்பெருமான் திருவருளால் வந்தன'' என்று கூறினார்.

''என்னையும் ஒரு பொருளாக மதித்து ஆட்கொண்ட எந்தையின் திருவருட் திறம் என்னே?'' என்று கைகூப்பி மெய் மறந்தார் நாயனார்.

நாயனாரின் மனைவியார் பரிகலம் திருத்தியமைத்து சிவபெருமானுடைய அன்பர்களுடன் கணவனாரைத் தீபமும் மலரும் கொண்டு வழிபட்டு இனிய உணவு படைத்து ஊட்டினார். அடியார்களுடன் கலயனார் உண்டு இன்புற்றார். செல்வம் எய்திய நாயனார் சிறப்பு மிக்க அன்னம், நல்ல கறி, பால், தயிர், நெய், முதலியவைகளை அடியார்க்குப் படைத்துப் பசியாற்றி வருவாராயினார்.

திருப்பனந்தாள் என்னும் தலத்தில் தாடகை என்ற அம்மை இறைவரை வழிபடுவதற்காகத் திருமஞ்சனக் குடம்



□ ■ □ ■ □ ■ □ ■ □

ஓரிடத்திலிருந்து கிளம்ப வேண்டும். எந்தப் பக்கமாகத் திரும்பி நடந்தாலும் தெற்கு நோக்கியே செல்வதாயிருக்க வேண்டும். அப்படி ஓர் இடம் உண்டா இந்த உலகில்? யோசித்துப் பாருங்கள். தெரியவில்லையா ?

வட துருவ மையத்திலிருந்து எந்தப் பக்கமாகப் போனாலும் அந்தத் திசை தெற்காகவே இருக்கும். ஏனெனில் அவன் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும் ஒரு தீர்க்கரேகையின் மீதே இருக்கும்.

-இரா. சண்முகம்



''டாக்சிக் கட்டணம் உயர்ந்து விட்டது!''
''எனக்கு அதைப் பற்றிக் கவலை இல்லை''
''அது சரிதான். லாரிக் கட்டணம் உயர்ந்தால் தான் நீ கவலைப்படணும்!''

---

எடுத்துத் திருமுடிமேல் விடத் தூக்கியபொழுது சிலை அவிழ்ந்து விட்டது. அவிழ்ந்த சிலையை முழங்கையால் தகைத்து திருமுடி எட்டாமல் வருந்தினார் அம்மையார். அப்போது இறைவர் திருமுடி சாய்த்தார். அத்திருவருள் உலகறிந்துய்யச் சிவலிங்கத் திருமேனி வளைந்தேயிருந்தது. அத் திருமேனியை நேர்ப்படச் செய்து வணங்க வேண்டும் என்று அரசன் அன்பு கொண்டான். சிவலிங்கத் திருமேனியில் பூங்கச்சினைச் சுற்றி அதன் முனையில் வலியக் கயிறுகளைப் பூட்டி நேர்ப்படுத்த முயன்றான். ஆயினும் திருமேனி நிமிரவில்லை. அன்பின் மிகுதியால் வருந்திய மன்னன் தனது சேனைகளையும், யானைகளையும் கொண்டு இழுக்கச் செய்தான். அப்போதும் திருமேனி நிமிரவில்லை. அதனால் இரவும் பகலும் வருந்துவானாயினான். மன்னனது வருத்தத்தைக் கேட்டறிந்தார் குங்குலியக் கலய நாயனார். சிவமூர்த்தியைச் செம்மை செய்து வணங்கும் திருநெறியை மேற்கொண்ட மன்னனை விரும்பி, தாமும் சடையப்பரை வணங்க எண்ணினார். இடையிலேயுள்ள திருத்தலங்களை வணங்கிக் கொண்டு திருப்பனந்தாள் வந்தார். மூன்று உலகங்களும் உய்ய முத்தி வளர்க்கும் அந்தணர் வாழும் அத்திருப்பதி வந்த நாயனார், கரையில்லாக் காதலினால் அரசனும், ஆனையும், சேனையும் சிவலிங்கத் திருமேனியை இழுத்து இழுத்துக் களைத்து வீழ்ந்திருப்பதைக் கண்டார். ''யானும் இளைப்புற்று எய்க்கும் இது பெற வேண்டும்'' என்று எண்ணினார். பூங்கச்சுடன் சேர்ந்த கயிற்றினைக் கழுத்தில் பூண்டு வருந்தலுற்றார்.

நண்ணிய ஒருமை அன்பின்
நாருறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி
இளைத்தபின் திறம்பி நிற்க
ஒண்ணுமோ ? கலய னார்தம்
ஒருப்பாடு கண்ட போதே
அண்ணலார் நேரே நின்றார் ;
அமரரும் விசும்பில் ஆர்த்தார்.

அன்பாகிய நார் கொண்ட கயிற்றினால் இன்மை கொண்ட உண்மையன்பர் இளைத்த பின்னரும் இறைவர் சாய்ந்து நிற்க முடியுமோ? கலயனாருடைய ஒருமைப்பாட்டின் பெருமையைக் கண்ட அண்ணலார் நேரே நின்றார். அமரர் ஆர்த்தனர். பூமாரி தூர்த்தனர். அரசனும் ஆனையும் சேனையுங் களித்தனர். திருத்தொண்டர் திருவடி மீது அரசன் வீழ்ந்து வணங்கினான். ''திரிபுரம் எரித்த மேருமலையை வளைத்த எம்பிரானை நேர்நிலை காணச் செய்தீர். அடியேனும் உய்ந்தேன்; உலகமும் உய்ந்தது'' என்று ஏத்தினான். சிவபெருமானுக்குரிய திருப்பணிகளைச் செய்து மன்னன் நீங்கினான்.

குங்குலியக் கலய நாயனார் பின்னரும் சில பகல் வைகி சடையப்பராம் விடையவரை வழிபட்டுத் திருக்கடவூர் சேர்ந்து திருத்தொண்டு புரிந்து வந்தார்.

சீகாழித் தலைவராம் திருஞான சம்பந்தப் பிள்ளையாரும் தாண்டக வேந்தராம் திருநாவுக்கரசு நாயனாரும் ஒருங்கே சேர்ந்து அடியார் குழாங்களுடன் திருக்கடவூருக்கு எழுந்தருளி வந்தனர். அது கண்ட நாயனார் அளவிலா மகிழ்ச்சி கொண்டு வணங்கித் திருமனைக்கு அழைத்துக் கொண்டு சென்றார். அன்பின் மிகுதியினால் அறுசுவையுண்டியும் படைத்து, குருவருளும் ஒருங்கே பெற்றனர்.

காலனையும் காமனையும் காய்ந்த கடவூர்ப் பெருமானுக்குக் கலயனார் விருப்புறும் அன்பு மேன்மேலும் பொங்க ஒருப்படும் உள்ளத்தோடும் திருப்பணி பலவும் செய்து சிவபத நிழலிற் சேர்ந்தார்.

(தொடரும்)

# மனம் ஓர் ஆழ் கடல்

ஈ. ஸ்ரீ



"அதிசயம் என்பது என்ன?"

"சாதாரணமாக இருக்கும்போது திடீரென ஒரு திருப்பம் வந்தால் அது அதிசயந்தான். என்னையே எடுத்துக் கொள்ளேன். நான் வைத்தியப் பரீட்சையில் தேறி டாக்டராக வந்த புதிதில் காலணாக்கூட வருவாய் இல்லாமல் வாசலில் போர்டு தொங்கிக் கொண்டிருந்தது. நான் குதிரைப் பந்தயம் அது இது என்று போய்க் கொண்டிருந்தேன். இப்போதோ நல்ல வரும்படி வருகிறது. குதிரைப் பந்தயத்தையும் அறவே வெறுத்து விட்டேன். என் வாழ்வில் இப்படி ஒரு மாறுதல் ஏற்பட்டது அதிசயந்தானே?"

நண்பர் சங்கராஜனின் கேள்விக்கு டாக்டர் ரகுநாதன் கூறிய பதில் இது.

"உன் வாழ்வில் ஏற்பட்ட அதிசயத்தைக் காட்டிலும் பேரதிசயம் என் வாழ்விலும் நிகழ்ந்து விட்டது, ரகுநாதா! நேற்றுவரை கடன் பளுவில் மூழ்கியிருந்தவனுக்குத் திடீர் யோகம் வந்தது. வெகு நாட்களாக விலை போகாமல் கிடந்த நிலம் இன்று நல்ல விலைக்குப் போய்விட்டது. புகைப்படச் சாதனங்கள் செய்ய ஒரு தொழிற்சாலை கட்டுவதற்காக ஒரு நிறுவனத்தார் லட்சம் ரூபாய் கொடுத்து வாங்கி விட்டார்கள். கடன் முழுதும் தீர்ந்து நானும் பணக்காரனாகி விட்டேன்!" என்றார் சங்கராஜன்.

"நினைத்தால் எனக்கேகூட ஆச்சரியமாக இருக்கிறது. உனக்குத்தான் தெரியுமே, என் மாமனுக்கு நான்கு பெண்கள். என் மனைவியைத் தவிர மற்ற மூவரும் படு கெட்டிக்காரிகள். ஆனால் ஒரு குறை. வேண்டிய செல்வம் இருந்தும் அவர்களுக்கு வாழ்க்கையின் பயனான பிள்ளைச் செல்வம் மட்டும் கிடையாது. எனக்கு மட்டும் என்ன? லீலா மணி ஒரே பெண்! இதனால் என் மைத்துனிகளும் லீலாமணியின் மேல் ஒரே பாசத்தை வைத்திருந்தார்கள். அடிக்கடி வந்து அவளைப் பார்த்துப் போவார்கள். வேண்டிய துணிமணிகளும் நகை நட்டுக்களும் வாங்கிக் கொடுப்பார்கள்.

நான் எத்தனைதான் குதிரைப் பந்தயத்தில் பித்தனாக இருந்தாலும் என் மனைவியின் நகைகளிலோ, அல்லது வெள்ளிப் பாத்திரங்களிலோ கை வைக்கக் கூடாது என்று தீர்மானமாகத்தான் இருந்தேன். ஆனால் என்னுடையதென்று இருந்தவற்றையெல்லாம் பறிகொடுத்த பின் என் உத்வேகம் இன்னும் மேலோங்கியது; உறுதி தளர்ந்தது. ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று என் மனைவியின் அறுபது சவரன் காசு மாலையை வாங்கிச் சென்று குதிரைப் பந்தயத்துக்குப் பறி கொடுத்தேன். என் நண்பன் வீட்டுக் கலியாணத்துக்கென்று சொல்லித்தான் அவளிடமிருந்து அதை வாங்கிப் போனேன். அவளும் நம்பினாள். ஆனால் நான் நம்பிக் கட்டிய குதிரை நம்பிக்கை மோசம் செய்துவிட்டது! இது எப்படியோ என் மைத்துனிகள் மூவருக்கும் தெரிந்து விடவே, அவர்கள் விழித்துக் கொண்டு விட்டார்கள். என் மனைவியிடமிருந்த பொன் நகைகளை யெல்லாம் வாங்கிக் கொண்டு சாதாரண ரோல்டுகோல்டு நகைகளை வாங்கிப் போட்டு விட்டார்கள். என் பெண் லீலாமணியை ஐந்து வயது நிறைந்ததும் படிக்க வைக்க ஆசைப்பட்டேன். அதை ஒரு விழாவாகவே கொண்டாடினேன். என் மைத்துனிகள் மூவரும் வந்திருந்தார்கள். அவர்கள் மூவரும் சேர்ந்து ஆயிரத்து ஐந்நூறு ரூபாயில் வைர லோலக்கு வாங்கிப் போட்டார்கள். என்னைப் பார்த்து, "அத்தான்! லீலாமணி இந்தத் தெருவின் மத்தியில் இருக்கும் பள்ளிக்கூடத்தில் இன்னும் ஐந்து வருஷங்கள் வரை படிக்கலாம். குழந்தையை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ளுங்கள். லீலாமணிக்கு வேண்டிய உடுப்புக்களோ நோட்டுப் புத்தகங்களோ நாங்கள் வாங்கி அனுப்புகிறோம்" என்று சொல்லிவிட்டுச் சென்றனர்.

லீலாமணியை ஆரம்பத்தில் நானோ என் மனைவியோ பள்ளிக்கூடத்துக்குக் கொண்டு விடுவோம். திரும்ப மாலையில் அழைத்து வருவோம். கொஞ்ச நாளைக்கெல்லாம் அவளுக்குத் தோழி கிடைத்து விட்டவே என் மனைவி வாசல் வரையில் வழியனுப்பிவிடுவதோடு நிறுத்திக் கொண்டாள்.

தெருவில் இருப்பவர்களோ அவ்விரு குழந்தைகளையும் பார்த்துப் பார்த்து ஆனந்தப்படுவார்கள். அதுவும், லீலாமணியின் அழகு சொல்லிமுடியாது. வைர லோலக்குகள் அசைந்தாட, ரோஜாக் கன்னங்களில் அவற்றின் டால் வீச, அவள் போகும் அழகைக் கண்டு ரசித்துக்கொண்டே யிருக்கலாம்.

அன்று புதன் கிழமை. ஏதோ விசேஷ நாள். நான் பள்ளிக்கூடம் சென்று குழந்தையைப் பார்த்தேன். வெளியில் அழைத்து வந்து பிஸ்கட், பப்பர்மிட்டுகள் வாங்கித் தந்தேன். மறுபடியும் பள்ளிக்கூடத்திலேயே விட்டு விட்டு, அன்றைய உல்லாசப் பயணத்துக்குப் புறப்பட்டேன். ஆம், குதிரைகளின்

திருப்பணி உற்சவத்தைத்தான் குறிப்பிடுகிறேன். உற்சவம் முடிந்ததும் அந்த இடம் ஒரு சுடுகாடாகிவிடும். சுடுகாட்டில் பிணத்தைக் கொளுத்திவிட்டு வருவார்கள். நாங்களோ பணத்தைப் பரிகளின்மீது பறிகொடுத்துவிட்டுச் சோர்வுடன் திரும்புவோம். அப்படித் திரும்பிக் கொண்டிருந்த என்னை அந்தக் காட்சி உலுப்பிவிட்டது. என் வீட்டு வாசலில் ஒரே கும்பலாய் இருந்தது. என்ன என்று விசாரித்தேன். 'யாரோ பகல் மூன்று மணிக்குப் பெற்றோர் அழைத்து வரச்சொன்னதாக விலாமணியை அழைத்துப் போய்விட்டானாம். உபாத்தியாயர் அம்மாவும் நம்பி அனுப்பியிருக்கிறாள்' என்றார்கள்.

உள்ளே பாய்ந்து சென்றேன். ''ஐயோ! என் கண்ணை யாரோ கொண்டு போய்விட்டார்களே! நகை போனாலும் போகிறது. உயிரோடு குழந்தை கிடைக்குமா? கொன்று போட்டு விடுவார்களோ?'' என்று ஓலமிட்டு அழுதாள் என் மனைவி.

நானும் ஒரு நிலைகொள்ளாமல் தவித்துப் போய், போலீசுக்குச் சென்று எழுதி வைத்தேன். போலீஸ் சப் - இன்ஸ்பெக்டர், 'குழந்தைகளுக்கு நகையினால்தான் ஆபத்து. எத்தனை தரம் சொன்னாலும் இந்தத் தாய்மார்கள் கேட்பதில்லை. நகையைப் போட வேண்டாம் என்று நாங்கள் சொல்லவில்லை. வீட்டிலே போட்டு அழகு பார்க்கட்டுமே! டம்பத்துக்குப் போட்டுத் தொலைத்து விட்டு எங்கள் கழுத்தை அறுக்கிறார்கள். நீங்கள் போங்கள். ஏதாவது துப்புக் கிடைத்தால் உங்களுக்குச் சொல்லி அனுப்புகிறேன்' என்றார்.

நான் தலையைத் தொங்க விட்டுக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன். அன்று இரவு முழுதும் எங்களுக்குத் தூக்கமில்லை. எங்கள் நல்ல காலம், மறுநாள் காலையில் குழந்தை கிடைத்து விட்டாள். ஆனால் நகை போனது போனதுதான். குழந்தையின் வைர லோலக்கைத் திருடன் திருடிவிட்டான் என்றால் என் மைத்துனிகள் நம்ப மாட்டார்களே! குதிரைப் பந்தயத்துக்காகக் காக மாலை மாதிரி அதையும் நான் எடுத்துப் போய்விட்டதாகத்தானே நினைத்துக் கொள்வார்கள்! இந்தச் சிந்தனை என் நடைக்குத் தடை போட்டது. ஆனால் என் குதிரைப் பந்தய நண்பர் சிங்காரத்தின் மூளையைத் துரிதமாக இயக்கியது. நாங்கள் தெரு முனை திரும்புவதற்குள்ளாகவே குழந்தையின் காதுகளில் இரு லோலக்குகள் மின்னத் தொடங்கி விட்டன. ஆனால், அவை இரண்டும் இரங்கோன் செயற்கை வைரங்கள்.

வைர லோலக்குத் திருட்டு, என் வாழ்க்கையில் ஒரு புதுத் திருப்பத்தை அளித்தது. அன்று முதல் பொறுப்போடு நான் என் தொழிலைக் கவனிக்கலானேன். நல்ல வரும்படியோடு எனக்கு நிம்மதியும் கிட்டியது. ஆனால் என் மனைவியின் மகிழ்ச்சியில்தான் ஓர் இடையூறு ஏற்பட்டது. காலையில் பெண்ணைக் குளிப்பாட்டி உடம்பைத் துடைத்துப் பாவாடை உடுத்திச் சொக்காயும் போட்டுப் பவுடரைத் தடவிச் சாந்து மை முதலிய அலங்காரங்களைச் செய்து லோலக்குகளைக் காதில்போட்டுக் கண் குளிரக் குழந்தையை அழகு பார்ப்பவள் ஒன்பது மணிக்குச் சிறிது மனச் சஞ்சலப்படுவாள். ஆம்! குழந்தை பள்ளிக்கூடம் போகு முன் கண்ணிலிருந்து கண்ணீர் சொட்டச் சொட்ட லோலக்குகளைக் கழற்றி விடுவாள். தன் பெண்ணை முன்போல் ஊரார் சந்தோஷப்படக் காதுகளில் லோலக்குகளுடன் பள்ளிக்கூடம் அனுப்ப முடியவில்லையே என்ற தாபம் அவள் கண்களில் நீரை வருவிக்கும். 'இப்படித் திருடிப் பிழைக்க இந்த மனிதர்களுக்கு ஏன்தான் புத்தி போகிறதோ?' என்று பெருமூச்செறிவாள்.'' — தம் கதையை ஒருவாறு முடித்த ரகுநாதன் அருகிலிருந்த பையனைச் சுட்டிக் காட்டி, ''இவன் வாழ்க்கையும் ஒருவிதத்தில் அதிசயமானதுதான்'' என்றார்.

''ஆமாம், சுவாமி! என் வாழ்க்கை அதிசயமானது. அதைக் காட்டிலும் அதிசயம் நான் இந்த டாக்டர் ஐயாகிட்டே வந்தது!'' என்ற பையன் தொடர்ந்தான்: ''நான் ஒரு நொண்டி என்பது சொல்லாமலே விளங்கும். என் தந்தையின் பெயர் முத்துசாமி. தாயின் பெயர் கன்னியம்மா. என் தாயின் கலியாணத்துக்கு என் மாமனே — அவளுடைய ஒரே தம்பியான அவரே — வரவில்லையாம். அநாதைப் பெண் ஒருத்திக்கு வாழ்வளிக்கிறோம் என்ற ஆர்வத்தில் என் மாமன் ஒரு திருடன் என்பதைக்கூடப் பொருட்படுத்தவில்லையாம் என் தந்தை. என் தந்தையும் தாயும் அன்னியோன்யமாய்த்தான் குடும்பம் நடத்தினார்களாம்.

என் தாய் என்னைக் கருவுற்றபொழுது என் தந்தைக்கு ஏற்பட்ட ஆனந்தம் சொல்லி மாளாது. தன் குறைந்த சம்பளத்திலே துளிக்கூடக் குறையில்லாமல் எல்லாவற்றையும் என் தாய்க்கு வாங்கிக் கொடுத்தார். நான் பிறந்தேன், ஊனத்தோடு. சிறு வயதிலேயே ஆபரேஷன் செய்திருந்தால் நொண்டி நடக்க வேண்டியதில்லை. அதற்குப் பண வசதி இல்லாத என் தந்தைக்கு என்மீது ஏற்பட வேண்டிய அன்பு போயிற்று; ஆசை போயிற்று. என்மீது ஏற்பட்ட வெறுப்பினால் அவர் என் தாயையும் அன்பாகக் கவனிப்பதில்லை. இரண்டு வருடங்கள் கழித்து எனக்குத் தம்பி பிறந்தான். அப்போது அவர் முகம் மலர்ந்தது. அந்தக் குழந்தையிடம் அன்பும் பாசமும் வைத்தார். அவன் பிறந்த மூன்று ஆண்டுகளுக்குப் பின், ஒரு நாள் என் தந்தையின் எட்டு அங்கங்களும் குளிர்ந்திருக்கும் சமயம் பார்த்து, என் தாய் 'தம்பியைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி நான்கு எழுத்துக்கள் கற்றுக் கொள்ள ஏற்பாடு செய்யலாமே?' என்றாள், என்னைக் காட்டி. 'எல்லாம் எனக்குத் தெரியும்' என்று என் தந்தை சள்ளென்று விழுந்தார். அப்புறம் அவள் அவரிடம் எதுவுமே கேட்கவில்லை. இருந்தாலும் என்னைப் பற்றிய கவலை அவளை வாட்டிக் கொண்டே யிருந்தது.

ஒரு நாள் என் தந்தை என்னைக் கையைப் பிடித்து மெல்ல நடத்தி அழைத்துச் சென்றார். ஏதோ நல்ல காலம் எனக்கு என்று என் தாய் நினைத்தாளே தவிர, எங்கே எதற்காக என்று கேட்கவே யில்லை. பத்துப் பதினைந்து தினங்களுக்கெல்லாம் எங்கள் ஏழைக் குடும்பத்தில் தேவைக்கு அதிகமாகவே

பொருள்கள் நிறைந்தன. நல்ல நல்ல சொக்காய்த் துணிகள், நிஜார்கள் எல்லாம் வாங்கி வந்தார் என் தந்தை. எப்படியோ ஒரு நைலான் துணியை என் தாயார் வாங்கினாள். ஆசையாக எனக்குத் தைத்தும் போட்டாள். என் தம்பிக்கும் அதே மாதிரி சொக்காய் போட்டாள். எங்கள் இரண்டு பேரையும் பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள். மறுநாள் காலை என்னைத் தினம் போல் அழைத்துச் சென்றார் தந்தை. இரவு திரும்பும்பொழுது என்னைக் கையில் பிடித்துத் தரதர வென்று இழுத்துக் கொண்டே வந்தார். வீட்டுக்கு வந்ததும் வராததுமாக என் தாயைப் படபடவென்று பத்துப் பன்னிரண்டு அடிகள் மாட்டை அடிப்பது போல் அடித்து விட்டார். நாலைந்து அடிகள் வரை பொறுத்துப் பார்த்தாள். அதற்கு மேல் தாளாமல் 'கோ'வென்று கத்திவிட்டாள். 'நான் ஒன்றும் தப்புச் செய்யவில்லையே. என்னை ஏன் அடிக்கிறீர்கள் ?' என்று கேட்டாள்.

'நீ ஏன் நைலான் சொக்காய் போட்டாய் இவனுக்கு? யார் பூசச் சொன்னது பவுடர்? உனது இந்தச் செய்கையினால் இன்று எனக்கு ஐந்து ரூபாய் நஷ்டம்' என்று வெடித்தார் தந்தை.

'ஐயோ!' எனக்கு ஒன்றுமே தெரியாதே! பையன் எங்காவது வேலை செய்கிறானா? சொக்காய்நிஜாரெல்லாம் அழுக்காகப் போய் விட்டனவா? நாளையிலிருந்து நான் அவனுக்கு ஒன்றுமே செய்யவில்லை. நீங்கள் பள்ளிக்கூடம் அழைத்துச் செல்கிறீர்கள் என்றுதான் நினைத்திருந்தேன்' என்றாள் தாயார். என் தந்தை பதில் ஒன்றும் சொல்லாமல் இலையில் போட்ட சாப்பாட்டைச் சாப்பிட்டு விட்டுத் தூங்கப் போய் விட்டார்.

இரவு ஒரு மணிக்கு என் தாயிடம் சென்றேன். உடலெல்லாம் தடவிப் பார்த்தேன். என் கண்களிலிருந்து இரத்தக் கண்ணீர் தான் பெருகியது. என் தந்தையின் கைவிரல் பட்ட இடமெல்லாம் ஓர் அங்குலம் வீங்கி மெல்லியதாய் இரத்தக் கசிவு ஏற்பட்டிருந்தது. கண்களில் நீரோடு என் தாயாரின் கழுத்தைக் கட்டிக் கொண்டேன். 'அம்மா! என்னால்தானே உனக்கு இந்த அடிகளும் உதைகளும்? என்னை மன்னித்துக்கொள், அம்மா !' என்றேன்.

'குழந்தாய்! எனக்கு ஒன்றுமே புலப்படவில்லையே. நான் செய்த தப்பு என்ன?' என்று கேட்டாள் என் அன்னை.

'நான் பள்ளிக்கூடத்தில் படிப்பதாக நீ நினைத்துக் கொண்டிருக்கிறாய். அதுதான் இல்லை. அதிகாலையில் அப்பா என்னை எங்கே அழைத்துப் போகிறார், தெரியுமா ? சென்ட்ரல் ஸ்டேஷன் பக்கமாக உள்ள ஒத்தவாடையில், நடைபாதையில் என்னை உட்கார வைத்துத் துணியை என் முன்னே விரித்து விடுகிறார். நான் போகிற வருகிற ஜனங்களைப் பார்த்து. 'ரெண்டு கால் நொண்டி சார்' என்று சொல்லிக் கொண்டே இருக்க வேண்டும். தினம் ஐந்து ரூபாய்க்குக் குறையாமல் சேருகிறது. ஏழு மணிக்குத் திரும்பும்போது தந்தை அந்தத் துட்டைச் சேர்த்து எடுத்துக் கொண்டு, என்னையும் சந்தோஷமாய் அழைத்து வந்தார். அதனால் தான் வீட்டில் கஷ்டம் இல்லாமல் இருந்தது. நீயும் நைலான் சொக்காயைத் தைத்துப் போட்டாய். பவுடர் பூசினாய். தந்தையோடு காலையில் வழக்கமான இடத்துக்குப் போய் உட்கார்ந்த நானும் தினமும் போல் 'இரண்டு கால் நொண்டி சார்!' என்றுதான் சொன்னேன். ஆனால் ஆறு அணாக்கூடச் சேரவில்லை. அங்கே போகிறவர்கள், 'அடேயப்பா ! பிச்சைக்காரப் பையனுக்கு நைலான் ஷர்ட்டு! பவுடர்! என்ன, போ!' என்று சொல்லிக் கொண்டே போய்விட்டனர். அதனால்தான் அப்பா என்னைத் தரதரவென்று இழுத்து வந்தார். நீயும் அடிபட்டாய்!' என்றேன். 'அம்மா! இனி எனக்கு நல்ல சொக்காயோ, பவுடரோ வேண்டாம். சின்னத் தம்பிக்கே அலங்காரம் எல்லாம் செய்து கொள். இன்று அப்பா உடலெல்லாம் கிள்ளிக் கிள்ளி எடுத்து விட்டார், அம்மா!' என்றேன்.''

பையனின் கதையைக் கேட்ட ரங்கராஜன் ''அப்பப்பா! என்ன கொடிய மனக? இப்



படிப்பட்ட தந்தையை நான் பார்த்ததே யில்லை'' என்றார்.

''உலகத்திலே எது தப்பு, எது சரி என்பது இருக்கட்டும். மக்களைப் படைத்து அவர்களுக்கு மனம் என்று ஒன்று வைத்த கடவுள் ஏழை பணக்காரன் என்று பாகுபாடு பார்க்கவில்லை. ஆனால் ஓர் அதிசயம் பாருங்கள், மனிதன் எத்தனையோ பாகுபாடுகளை வகுத்துக் கொண்டு விட்டான். ஒருவன் தன் சொந்தப் பணத்திலே வைர லோலக்கு செய்து போட்டதைப் பொறுக்காமல் அதைத் தன்னுடையதாக்கிக் கொள்ள முயல்கிறது ஒரு கூட்டம். இன்னொரு கூட்டத்துக்கோ ஏழைப் பையன் நைலான் ஷர்ட்டும் பௌடரும் போட்டுக் கொண்டால் கண்களை உறுத்துகிறது. ஆனால் இரு சாராரும் பெற்ற தாயின் உள்ளத்தை அறிய மாட்டாமல் திணறுகிறார்கள்'' என்று வருந்தினார் டாக்டர் ரகுராமன்.

தன் குழந்தை தளர் நடை போட்டவாறு காதுகளில் வைர லோலக்கு ஆடப் பள்ளிக் கூடம் போகக் கொடுத்து வைக்கவில்லையே! பள்ளிக்கூடம் போகுமுன் அழுதுகொண்டே கழற்றி வைக்க வேண்டியிருக்கிறதே என்று ஏங்கும் தாய் ஒரு புறம். வீடு திரும்பிய பாலகனின் அழுக்குச் சட்டைகளைக் கழற்றி நிஜாரும் நைலான் ஷர்ட்டுமாகப் போட்டுக் கணவனுக்குத் தெரியாமல் பார்த்து மகிழ முயலும் தாய் இன்னொரு புறம். அதிகாலையில் கணவன் எழுந்திருக்கு முன் எழுந்து, சொக்காயையும், நிஜாரையும் கழற்றிப் பழைய சொக்காயைப் போட்டு அனுப்பும் பொழுது அவள் மனம் என்ன பாடு படுமோ, அதே பாடுதானே வைர லோலக்குகளைக் கழற்றும்பொழுது இன்னொரு தாய்க்கும் ஏற்படும்?

பையன் அவர்கள் சிந்தனைக்கு இடம் கொடாமல் தன் கதையைத் தொடர்ந்தான்:

''காலையில் பாசஞ்சர் வண்டிகள் கூடூர், அரக்கோணம் முதலிய ஊர்களிலிருந்து சென்டிரல் ஸ்டேஷனுக்கு வரும். அப்போது வெளியூர்களிலிருந்து பால் குடம் குடமாக வந்து இறங்கும். பால்காரர்கள் ஸ்டேஷனை விட்டு வெளியே நடைபாதைக்கு வந்ததுமே சென்னை ஹோட்டல்களுக்குப் பால் விநியோகம் செய்யும் சென்னைவாசிகள் அவர்களிடமிருந்து அளந்து வாங்கிக் கொண்டு போவார்கள். இதனால் போக்குவரத்துக்குச் சிலசமயம் தடங்கல் ஏற்பட்டு வந்தது. எனவே போலீஸாரின் கண்காணிப்பு அதிகமாக இருந்து வந்தது.

ஒரு நாள் காலையில் போலீஸ்காரன் துரத்த ஆரம்பிக்கவே ஒரு பையன் கையில் பால் ஜோடுதவலையுடன் என் மேல் விழுந்தான். ஜோடு தவலையின் விளிம்பு என் முழங்காலை வெட்டிவிட்டது. 'ஐயோ! ஐயோ!' என்று கத்தினேன். இரத்தம் குபு குபு வென்று வெள்ளமாகப் பாய்ந்தது. என்ன செய்வது? யாரும் கவனிக்கவில்லை. கையால் இரத்தம் வராமல் அழுத்தினேன். பக்கத்தில் இருக்கும் மண்ணை எடுத்து இரத்தம் வரும் இடத்தில் வைத்தேன். அப்படியும் இரத்தம் நின்றபாடில்லை.

திடீரெனப் பரட்டைத் தலையும் அழுக்குத் துணியும் அணிந்த ஒருவன் ஓடோடி வந்தான். என்னை முதுகில் தூக்கிக் கொண்டு ஜெனரல் ஆஸ்பத்திரியில் ''அவசரக் கேசுகள்'' என்ற இடத்தில் கொண்டு விட்டான். நான் போவதற்கு முன் நான்கு கேஸுகள் வந்திருந்தன. டாக்டர் அவர்களைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

என் பக்கமாக வந்த டாக்டர் படபடப்புடன் 'உன்னை இங்கே யார் கொண்டு வந்து விட்டது?' என்று கேட்டார்.

'டாக்டர் சார்! நான் அநாதை. எவனோ மனம் கசிந்து என்னை இங்கே கொண்டு வந்து விட்டு விட்டு ஓடிவிட்டான். எனக்கு யார் என்று தெரியாது. இனி நீங்கள்தான் கவனிக்க வேண்டும்' என்றேன்.

டாக்டர் இரக்க சித்தையுள்ளவர். மிகுந்த அக்கறையோடு என்னைக் கவனித்தார். எத்தனையோ ஊசிகள் போட்டார்.

ஏழாம் நாள், டாக்டர் என்னைப் பார்த்து, 'பையா! உன் உடம்பில் இன்னும் ஒரு கெடுதல் பலமாய் இருக்கிறது. அதைப் போக்க நல்ல மருந்து வேண்டும். அது ஆஸ்பத்திரியில் கிடையாது. செலவு முப்பது ரூபாய்க்கு மேலாகும்' என்றார்.

'ஐயா, நான் பரம ஏழை. என் தந்தைக்கோ என்னைக் கண்டால் பிடிக்காது.

நவநாகரீக 'ஷர்ட்'

நவநாகரிகமான ஷர்ட் ஒன்று வேண்டுமென்று அவன் கடைக்குள் நுழைந்தான். அவனது தோள் அளவை அளந்து கொண்ட கடைக்காரன், ஒரு ஷர்ட்டை எடுத்துக் கொடுத்துப் போட்டுப் பார்க்கச் சொன்னான்.

''கழுத்தைத் திருப்ப முடிகிறதா?''

''முடிகிறது.''

''மார்பில் இறுக்கவில்லையே ?''

''இல்லை.''

''கையைச் சுலபமாக மடக்க வருகிறதா?''

''வருகிறது.''

''குனியும்போது சிரமமாக இல்லையே?''

''இல்லை.''

''அப்படியானால் இது உங்களுக்கேற்ற 'சைஸ்' இல்லை. இன்னும் சின்னதாக இருக்க வேண்டும்.''

-- 'ரதன்'

புதுமை! வரி யணிந்த பற்பசை!




# ஸிக்னல்

கிருமிகளைத் தாக்கும் செவ் வரிகள் தரித்தது!*

துலக்கிய வாய் முழுதும் தூய்மை நிலவும்!

❶ உங்கள் பற்களைத் துலக்கும் ❷ துலக்கிய வாய் மணக்கும்.

* அந்தச் சிவப்பு வரிகளிலே இருப்பது ஹெக்ஸாக்ளோரபீன்.

பற்களின் துப்புரவுக்கு ஒரு புதிய உறவு: கிருமிகளைத் தாக்கும் செவ் வரிகள் கூடிய ஸிக்னல்: வாய் நிரம்பும் தூய்மைக்கென்றே வாய்த்த ஒரு பற்பசை. பற்களைத் துலக்கும்போதே, உங்கள் மூச்சையும் மணமுடன் தூய்மைப்படுத்துகிறது அவ் வரிகளிலுள்ள ஹெக்ஸாக்ளோரபீன். காரணமா? நாற்றமுண்டாக்கும் கிருமிகளை உடனடியாக ஒழிக்கவல்ல பாதுகாப்புப் பொருளே ஹெக்ஸாக்ளோரபீன். எனவே, ஸிக்னல் தேய்த்த வாய் முழுதும் தூய்மையின் ஆட்சி. கோலச் செவ்வரிகள், கொப்பளிக்கும் நுரைநுனை, குளுகுளு பெபாமின்டுப்போன்ற கலவை, ஆதலால் குடும்பத்திலுள்ள எவரைத்தான் கொஞ்சி கேள் ஊாது? வாய் முழுமையும் தூய்மையே. தூய்மை, வாயார உணரலாம். இன்றே பெறுங்கள் ஸிக்னல்.

..உங்கள் பற்களைத் துலக்கும்,

துலக்கிய வாய் மணக்கும்.




லின்டாஸ்–SG. 3A-140 TM

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமானதொரு தயாரிப்பு

முக்கியமான மாட்சில் ஆட வேண்டும் — ராஜூவுக்கோ **முதுகுவலி**













ஒரே ஒரு

# ஸாரிடான்

'ரோஷ்'



**வலியைப் போக்குகிறது ஆசுவாசப் படுத்துகிறது புத்துணர்ச்சி யூட்டுகிறது**

உலகப் புகழ் பெற்ற வலி நிவாரணியான ஸாரிடான் விரைவில், அபாயமின்றி, நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, பல்வலி, உடல்வலி, சாதாரண உடற் கோளாறுகள், இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள். ஒரு வில்லை முழு டோஸ்; குழந்தைகளுக்கு ¼ லிருந்து ½ வில்லை வரை கொடுக்கலாம்.



ஸாரிடான் ஒரே வில்லை போதும்

'ரோஷ்' தயாரிப்பு
ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் : வால்டாஸ் லிமிடெட்

தாயோ கணவனுக்கு அடங்கிய மனைவி. டாக்டர் சார், நீங்கள் எனக்காக அந்த மருந்தை வாங்கி வைத்தியம் செய்யுங்கள். என் உடம்பு குணமானதும் எப்படியாவது உங்கள் பணத்தைக் கொடுத்து விடுகிறேன். நாளொன்றுக்கு எனக்குப் பிச்சை எடுப்பதன் மூலமாக நான்கு அல்லது ஐந்து ரூபாய்கள் வருகின்றன. ஆறு ஏழு நாட்களில் கண்டிப்பாய் உங்கள் பணத்தைக் கொடுத்து விடுகிறேன்' என்றேன்.

'அதெல்லாம் எனக்குத் தெரியாது. நீ யாரையாவது கேட்டுப் பணம் வாங்கி வந்தால் உனக்கு வைத்தியம் செய்து விடுகிறேன். அவ்வளவுதான் என்னால் முடியும்' என்று சொல்லிப் போய்விட்டார் டாக்டர்.

அன்றெல்லாம் நான் என்னவெல்லாமோ யோசித்தேன். பகல் ஒரு மணிக்கு நன்றாகத் தூங்கிவிட்டேன். மணி நான்கு இருக்கும். விழித்துக் கொண்ட பொழுது அன்று என்னைத் தூக்கி ஆஸ்பத்திரியில் விட்ட பரட்டைத் தலையன் நின்று கொண்டிருந்தான். அவன் கண்களிலிருந்து நீர் தாரைதாரையாய்க் கொட்டியது.

'பையா! உனக்காகவே நான் இங்கே வந்தேன். நான் உன்னைப் பார்த்திருக்கிறேன். நீ என்னைப் பார்த்ததில்லை. எனக்கு இங்கே சென்ட்ரல், பிராட்வே முதலிய இடங்களில் தான் வேலை. நான் உன் மாமன். உன் தாயின் கூடப் பிறந்தவன். நீ பிச்சை எடுப்பதையும் உன் அங்க அடையாளங்களையும் சகோதரி எனக்குச் சொல்லியிருக்கிறாள். காயத்தோடு நீ அழுது கொண்டிருப்பதைப் பார்த்தேன். உன்னை ஆஸ்பத்திரியில் கொண்டு விட்டுவிட்டு ஓடிவிட்டேன். போலீஸ்காரர்களுக்கு எப்போதும் என் போன்றவர்கள் மீது ஒரு கண். அதனால்தான் அடிக்கடி நான் உன்னைப் பார்க்க வரவில்லை' என்றான்.

'மாமா! அது எப்படியாவது போகட்டும். ஆனால் ஒரு மருந்து வாங்கி ஊசி போடணுமாம். முப்பது ரூபாய் செலவாகுமாம். அந்த மருந்து ஆஸ்பத்திரியில் கிடையாதாம். உன்னால் பணம் கொடுத்து உதவ முடியுமானால்... உடம்பு குணமானதும் திருப்பித் தந்து விடுகிறேன்.' என்றேன்.

'பையா! என் பிழைப்பு உனக்குத் தெரியும். திருட்டுப் பிழைப்பு. நான் திருடிய வஸ்துவை எனக்குத் தெரிந்த ஒருவனிடம் கொடுக்க வேண்டும். அவன் மற்றவனிடம் கொடுக்க வேண்டும். இம்மாதிரி பல கைகள் மாறி விற்றுப் பணம் வரும் போது நூறு ரூபாய் சரக்கு விற்றால் எனக்கு ஐந்து அல்லது பத்துக்கு மேல் வராது. சில சமயம் 'போலீஸ்காரன் பிடிக்க வந்தான். நான் திருட்டுப் பொருளைச் சாக்கடையில் போட்டுவிட்டேன்' என்று கூறி என்னை ஏமாற்றியும் விடுவான். அதனால் நான் ஒன்று செய்கிறேன். எவனோ கண்டவன் சாப்பிடுவதை நீயாவது வைத்தியம் செய்துகொள். வெகு நாளைக்கு முன் திருடிய இரண்டு லோலக்குகள் என்னிடம் இருக்கின்றன. அவைகளை டாக்டரிடம் கொடுத்து வைத்தியம் செய்து கொள். நானே வேண்டுமானாலும் ஒரு சாதாரண மனிதன் மாதிரி வேஷம் போட்டுக் கொண்டு அந்த டாக்டரிடம் கொண்டு கொடுத்துவிட்டு வருகிறேன்' என்றான் மாமன்.

மறுநாள் பகல் ஒரு மணி சுமாருக்கு என் மாமன் டாக்டர் வீட்டுக்குச் சென்றான். வாயிலில் ஒரு பெண் ஏதோ ஒரு புத்தகத்தை வைத்துக் கொண்டு எழுத்துக் கூட்டி வாசித்துக் கொண்டிருந்தது. அந்தப் பெண் புத்தகத்தில் வைத்த கண்ணை எடுத்து எதிரே நின்ற என் மாமனைப் பார்த்ததும், 'ஐயோ! பூச்சாண்டி! திருடன், திருடன்' என்று கத்தி விட்டது. உள்ளேயிருந்து, டாக்டரும், டாக்டர் மனைவியும் வாயிலுக்கு ஓடி வந்தார்கள். என் மாமனோ திருடன். குழந்தை வேறு கத்தி விட்டது. இனி மேல் பிடித்து விடுவார்களோ என்று பயந்து ஒரே நிமிஷத்தில் ஓடி மறைந்து விட்டான். ஓடும்பொழுது அவன் கையிலிருந்த வைர லோலக்குகளில் ஒன்று வீட்டு வாசலில் விழுந்துவிட்டது.

டாக்டரின் கண்களில் அந்த லோலக்கு பட்டது. எடுத்துப் பார்த்தார். அவர் பெண் காதிலும் இரு லோலக்குகள் இருந்தன. அதையும் கவனித்தார். ஆகா! லீலாமணியின் தொலைந்துபோன இரு லோலக்குகளில் ஒன்று. என்ன ஆச்சரியம்! தொலைந்து மூன்று வருஷங்கள் கழித்து இப்போது அகப்பட்டிருக்கிறதே! கிடைத்தது ஒன்றுதான் என்றாலும் யார் கொண்டு வந்து போட்டிருப்பார்கள்? இப்படி எண்ணி வியந்தவாறே ஆஸ்பத்திரிக்கு வந்தார்! என்ன என்னவோ அதிசயங்கள் உலகத்தில் நிகழும் பொழுது நாமேதான் அந்த ஏழைச் சிறுவனுக்கு இலவசச் சிகிச்சை செய்துவிட்டால் என்ன? இப்படி எண்ணியவாறே டாக்டர் அந்தப் பையனின் படுக்கையருகே வந்தார்.

'டாக்டர் சார்! என் மாமன் இங்கே வந்திருந்தது. இந்த ஒரு லோலக்கைக் கொடுத்து வைத்தியம் செய்துகொள் என்று சொல்லி ஓடி விட்டது. இதன் விலை போதா விட்டால் நான் பிச்சை எடுத்து வாங்கித் தருகிறேன்' என்றேன் நான்.

'ஆகா! உலகில் கடவுளின் அருள்தான் எப்படிப்பட்டது! லோலக்கைத் திருடிய திருடனையே அல்லவா திரும்பவும் கொண்டு வந்து போடும்படி வைத்திருக்கிறார்? அவரை எவ்வாறு நினைப்பது? எப்படித் தொழுவது? இப்படி நினைத்த டாக்டர் என்மீது இரங்கி வைத்தியம் செய்தார். இன்று பெயரளவுக்கு ஊனத்துடன் நான் நடமாடுவதற்குக் காரணம் அந்த டாக்டர்!'' என்றான் பையன்.

''எந்த டாக்டர்?'' என்று தெரிந்தும் தெரியாதவர் போலக் கேட்டார் ரங்கராஜன்.

''இவர்தான்!'' என்று டாக்டர் ரகுநாதனைச் சுட்டிக் காட்டிய சிறுவன், ''இன்னுமோர் அதிசயத்தைக் கேளுங்கள். பிச்சை எடுத்துப் பிழைத்துவந்த என்னைப் பிள்ளையாக ஏற்றுக்கொள்ள எண்ணி இந்த டாக்டரும் என் தாயிடம் பிச்சைக்காரராக மாறிப் பிச்சை கேட்டார். அதனால்தான் இந்த வீட்டில் இந்த வீட்டுப் பிள்ளையாக வாழும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது! ஆண்டவனை அருளாளன் என்று கூறும் இந்த டாக்டர் மட்டும் என்னவாம்? ஆண்டவனேதானே?'' என்றான் பையன்.







# ஒரு மாதத்துக்கு

வெளியூர்களிலிருந்து கலியாண அழைப்புக்கள் வரும்போதெல்லாம் அந்தக் கலியாணத் தேதி வந்ததும், பொழுது விடிந்ததும் முதல் காரியமாக, அவர்களுக்கு வாழ்த்துத் தந்தி கொடுத்து விட்டுத்தான் மறு காரியம் பார்க்க வேண்டும் என்று தீர்மானமாக இருப்பேன். வாழ்த்துத் தந்திகளிலும் எந்தத் தந்தியைக் கொடுப்பது என்றும் முன்கூட்டியே தீர்மானம் செய்து கொள்வேன்.

கலியாணங்களுக்கு, சுருக்கமான செலவில் அனுப்புவதற்கென்றே தந்தி இலாக்காவினர் மூன்றுவித வாழ்த்துத் தந்திகள் வைத்திருக்கிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன்.





''நீண்ட, இன்பமான மண வாழ்க்கை இட்ட வேண்டும் என்று வாழ்த்துக்கள்'' என்பது ஒரு வாசகம். இது வாழ்த்துத் தந்தி தெ. 8. இதில் யாருடைய மண வாழ்க்கை நீண்டதாகவும், இன்பமாகவும் இருக்க வேண்டும் என்று நாம் வாழ்த்துகிறோம் என்பது சற்று சந்தேகமாகத்தான் இருக்கிறது. தந்திகளை நாம் பெரும்பாலும் பிள்ளையின் தகப்பனருக்கோ, அல்லது பெண்ணின் தகப்பனருக்கோதான் அனுப்புவதால், அவர்கள் இந்த வாழ்த்து, தங்கள் மண வாழ்க்கையைக் குறித்துச் சொல்லப்பட்டதாக நினைத்துச் சந்தோஷப்படலாம் அல்லது அவர்கள் மனைவிகளை இழந்தவர்களாக இருந்தால், ''இந்தப் பயல் நம்மை எப்படி அவமானப்படுத்துகிறான், பார்த்தாயா?'' என்று கோபப்படலாம். பெண்ணின் பெயருக்கோ, பிள்ளையின் பெயருக்கோ அனுப்பப்படும்பொழுதுதான் இந்த வாக்கியம் செல்லுமேயொழிய, மற்றபடி செல்லாது.

''இளம் தம்பதிகள் மீது கடவுள் பொறுக்கிய வாழ்த்துக்களைச் சொரியட்டும்'' என்பது இரண்டாவது வாசகம். இது வாழ்த்துத் தந்தி 16. முக்கால்வாசி சமயங்களில் நான் தேர்ந்தெடுக்கும் வாசகம் இதுதான். ஆனால் இதில் ஒரு சங்கடம் என்னவென்றால், இளம் தம்பதிகள் என்று-''இளம்'' என்று-ஒரு வார்த்தை சேர்க்கப்பட்டிருக்கிறதே, அதுதான்.

கலியாணப் பத்திரிகை அனுப்புகிறவர்கள் பெண் என்னென்ன பட்டங்கள் வாங்கியிருக்கிறாள், பிள்ளை என்னென்ன பட்டங்கள் வாங்கியிருக்கிறான் என்று போடுகிறார்களேயொழிய, அவர்களின் வயதைக் குறிப்பிடுவதேயில்லை. ஆங்கில நாடகங்களில் கதாபாத்திரங்கள் யார், இன்னார் என்று முன்கூட்டிக் குறிப்பிடும் இடத்தில் அவர்களுடைய வயதையும் பெயருக்குப் பக்கத்தில் ஒரு பிராக்கட் போட்டுக் குறிப்பிடுவது வழக்கம். அதைப் போலவே கலியாணப் பத்திரிகைகளிலும் தம்பதிகளின் வயதைக் குறிப்பிட்டார்களானால், நாம் ''இளம் தம்பதி'' என்ற வாசகத்தைக் கொண்ட இந்தத் தந்தியை அனுப்பலாமா, வேண்டாமா என்று முன்கூட்டியே தீர்மானித்துக் கொள்ள உதவியாக இருக்கும்.

முன்பொரு தடவை நான் எந்தக் கலியாணத்துக்குத் தந்தி அடித்தேனோ, அந்தக் கலியாண மாப்பிள்ளைக்கு வயது நாற்பது. பெண்ணின் வயது முப்

பத்தைந்து! ஆகவே, ''இளம் தம்பதிகள்'' என்று யாரிடமிருந்தாவது தந்தி வந்த போதெல்லாம், கலியாணத்துக்கு வந்திருந்தவர்கள் 'கொல்'லென்று சிரித்தார்களாம்.

இதைப் பின்னர் அறிந்த நான், வாழ்த்துத் தந்தி 16லிருந்து 'இளம்' என்ற வார்த்தையை மாத்திரம் எடுத்துவிட்டு, தந்தி அடிக்கும்படி தந்தி இலாக்காவினரைக் கேட்டுக் கொண்டேன். ஆனால் அவர்கள் கண்டிப்பாக முடியாது என்று மறுத்துவிட்டார்கள்!

மூன்றாவது வாசகம் இருக்கிறதே, அதாவது வாழ்த்துத் தந்தி நெ. 17, அதன் வாசகம் எனக்கு இன்னும் விளங்காமல் இருக்கிறது. ''உங்கள் இருவருக்கும் இன்பமானதும், சுபிட்சமானதுமான மண வாழ்க்கை ஏற்பட வேண்டும்'' என்பது தான் இந்த வாசகம். இதில் ''இருவருக்கும்'' என்கிற வார்த்தையை எதற்காகச் சேர்த்தார்கள் என்பது எனக்கு விளங்கவில்லை. ஓர் ஆணும் பெண்ணும் கலியாணம் செய்து கொண்டால் ஒருவருக்கு மண வாழ்க்கை இன்பமாகவும், சுபிட்சமாகவும் அமைந்தால் கிறது என்பது சிந்தித்துப் பார்த்தவர்களுக்குத்தான் தெரியும். பெண்கள் குறைந்து, ஆண்கள் அதிகமானால், குழந்தைகளின் எண்ணிக்கை குறையத்தானே வேண்டும்! நிற்க.

ஆனால் இத்தனை முன்னெச்சரிக்கையாக நான் எந்த வாசகத்தை அனுப்புவது என்று தேர்ந்தெடுத்து வைத்திருந்தும், பத்து நாட்களுக்கு முன்னரே கலியாணக் கடிதாக வருவதால், ஒன்று கலியாணத் தேதியை மறந்து விடுவேன். அல்லது ஞாபகம் இருந்தும், கலியாணக் கடிதாசை எங்கேயோ வைத்துவிட்டு, எந்த விலாசத்துக்குத் தந்தி அடிப்பது என்று தெரியாமல் தவிப்பேன்.



# முன்னதாகவே!

## நாடோடி

இன்னொருவருக்கும் அது அதே மாதிரித் தான் அமைய வேண்டும். ஆகவே இந்தத் தந்தி இரண்டு கலியாண மாப்பிள்ளைகளுக்கோ, அல்லது இரண்டு கலியாணப் பெண்களுக்கோ சேர்ந்தாற்போலப் படுகிறதேயன்றி, ஒரே தம்பதிக்கு அடிக்கக்கூடிய தந்தியென்று படுவதில்லை. ஆகவே, இந்த வாசகத்தின் பக்கத்திலேயே நான் போவதில்லை.

தப்பித் தவறிப் பொருத்தமில்லாத தந்தி வாசகத்தை நாம் அனுப்பிவிட்டாலும்கூட, இதில் நாம் கொஞ்சம் திருப்திப்படக்கூடிய விஷயம் என்னவென்றால், அநேகமாகக் குறிப்பிட்ட அந்த வாசகம் கலியாணத்தன்று போய்ச் சேராது என்பதுதான். மாறாக, அந்த வாசகத்துக்குரிய நம்பர் மட்டுமே பல சந்தர்ப்பங்களில் போய்ச் சேருகின்றன. கலியாணப் பந்தலில் தந்தியைப் பார்க்கிறவர் பதினேழு; பதினாறு; எட்டு என்று இப்படி நம்பர் மட்டும் தந்தியில் எழுதப்பட்டிருப்பதைக் கண்டு திகைப்பதைப் பல தடவைகளில் நான் பார்த்திருக்கிறேன்!

உண்மையில் பார்க்கப் போனால், கலியாணத்துக்கு அனுப்பப்படும் வாழ்த்துத் தந்திகள், ''தீர்க்க சுமங்கலீ பவ'' என்றோ ''சீக்கிரமேவ புத்திரபிராப்திரஸ்து'' என்றோ தான் இருக்க வேண்டும். இப்படித்தானே நாம் நேரில் சென்றால் வாழ்த்துகிறோம்?

இந்த வாழ்த்துதலிலேயே குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் பொதிந்து கிடக்

''கடைசியில் ஒரு வாழ்த்துத் தந்திகூட உன்னால் அடிக்க முடியவில்லை, பார்த்தாயா?'' என்று பத்திரிகை அனுப்பியவர் சண்டைக்கு வருவார்.

நல்ல வேளையாக இந்தச் சங்கடத்தைத் தீர்த்து வைப்பதற்கு முன்வந்திருக்கின்றனர் நமது காருண்ய தந்தி இலாகாவினர். கலியாணக் கடிதாசு நம் கையில் கிடைக்க வேண்டியதுதான் தாமதம், கலியாணம் இன்னும் ஒரு மாதத்துக்குள் இருந்தால், நாம் உடனே தேதியைக் குறிப்பிட்டு, வாழ்த்துத் தந்தியை அனுப்பிவிடலாம்.

ஆனால் இதில் உள்ள ஒரு பிரச்னை என்னவென்றால், ஒரு மாதத்துக்கு முன்பே அனுப்பப்படும் தந்திக்கு, தந்தி என்று எப்படிப் பெயர் வைக்கலாம் அல்லது தந்திக் கட்டணம்தான் எப்படி வசூலிக்கலாம் என்பது. இது குறித்து யாராவது ஒரு 'ரிட்' மனு போட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

அதோடு, கெட்டிக்காரத் தந்தி இலாகாவினராக இருந்தால், ஒரு மாதத்துக்கு முன்பு கொடுக்கப்படும் தந்திகளை, தந்தி அடித்துக் கொண்டு தவிக்க மாட்டார்கள். தபால் மூலம்தான் அனுப்பி வைப்பார்கள்.

ஆனால் அவர்கள் எப்படி அனுப்பி வைத்தாலும் சரி, நாளை மட்டும் குறிக்கச் சொல்லியிருப்பதால், முகூர்த்தத்துக்குக் கொண்டு போய்க் கொடுப்பார்களா என்பது சந்தேகந்தான். நாள் என்பது ஆங்கிலக் கணக்குப்படி இரவு பன்னிரண்டு மணிவரை

யின் இருப்பதால், இரவு 11.55க்கு அவர்கள் கொண்டு போய்க் கொடுத்தாலும் நாம் ஏன் என்று கேட்பதற்கில்லை.

ஆனால் தந்தி இலாகாவினரும் தங்கள் பெண், பிள்ளைகளுக்குக் கலியாணம் செய்து வைத்தவர்களானதால் இந்தத் தந்திகளைக் கலியாண வீட்டார் எதிர்நோக்கியிருப்பதற்கே காரணம் தங்களுக்கு எத்தனை நிறையத் தந்திகள் வருகின்றன என்பதைச் சம்பந்திகளும், மற்றவர்களும் பார்க்க வேண்டும் என்பதற்காகத்தான் என்பதை அறிந்திருப்பார்கள்.

ஆகவே, கலியாண முகூர்த்தத்தின்போது அதாவது எல்லாரும் சாப்பிடப் போவதற்கு முன், மணப் பந்தலில், எல்லாரும் பார்க்க, கைநிறையத் தந்திகள் கிடைத்தால்தான் பெருமையாக இருக்குமேயொழிய, மத்தியானம் எல்லாரும் சாப்பிட்டுவிட்டு, ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் சமயத்தில், எத்தனை தந்திகள் வந்தாலும் பலனில்லை.

மாலையில், வரவேற்பின் போது, மற்றக் கூட்டங்களில் செய்யப்படுவதைப் போல, வாழ்த்துத் தந்திகளை வாசிப்பது என்று ஒரு வழக்கம் இருந்தாலாவது எந்தத் தந்தி எப்பொழுது கிடைத்தால் என்ன என்று இருக்கலாம். ஆனால் அத்தகைய வழக்கத்தை இன்னும் யாரும் ஆரம்பித்து வைக்கவில்லை. கலியாணத்துக்குப் பிறகு நிறையக் கூட்டம் சேரக் கூடாது என்று நினைக்கும் யாராவது இந்த வழக்கத்தை ஆரம்பித்து வைத்தால் நல்லது. கலியாணப் பத்திரிகையில், ''மாலையில் வரவேற்பின் போது வாழ்த்துத் தந்திகள் வாசிக்கப்படும்'' என்று ஒரு வரி சேர்த்தால் மேலும் எல்லாரும் கலியாணத்துக்கு நேரில் போவதைவிட, வாழ்த்துத் தந்தி அனுப்பினால்தான் தங்கள் பெயர் அடிபடும் என்று வாழ்த்துத் தந்திகள் அனுப்பிவிட்டுப் பேசாமலிருப்பார்கள்.

ஆனால் அத்தகைய வழக்கம் ஏற்படும் வரை முகூர்த்தத்தின் போது, கத்தை கத்தையாகத் தந்திகளைக் கொண்டு போய்க் கொடுத்தால்தான் கலியாணம் பண்ணுகிறவர் சந்தோஷப்படுவார். ஆகவே, முன் கூட்டியே தந்திகளை வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கும் தந்தி இலாகாவினர், முகூர்த்தத்தையும் தெரிந்து கொண்டு, முகூர்த்தத்தின் போதுதான் தந்திகளைக் கொடுப்பதாக ஒப்புக் கொள்ள வேண்டும். அப்பொழுது நிறையத் தந்திகள் வந்து குவியும் என்பதில் சந்தேகமில்லை.

ஏனெனில், கலியாணத்தின் போது நிறையத் தந்திகள் வருவதே ஒரு பெருமையாகக் கருதப்படுவதால், கலியாணம் பண்ணுகிறவரே செலவோடு செலவாக இருக்கட்டும் என்று தாமே முன்கூட்டியே தம் விலாசத்துக்கே, நூறு, இருநூறு வாழ்த்துத் தந்திகள் ரிசர்வ் செய்து விடுவார்!

ஆனால் ஒரு மாதத்துக்கு முன்பே தந்தி இலாகாவினர் தந்தி அனுப்ப ஒப்புக் கொண்டதற்கே காரணம், ரயில்வேக்காரர்களைப் போலத் தங்கள் வரும்படியை அதிகரிப்பதற்காகத்தானேயொழிய, பொதுமக்களுக்கு நன்மை செய்வதற்காக அல்ல என்று சிலர் அபாண்டமாகக் கூறலாம். ரயில்வேக்காரர்கள் ஒரு மாதத்துக்குமுன்பே ரிசர்வ் செய்வதால், எத்தனை பயணங்கள் ரத்தாகின்றன. அதனால் ரயில்வேக்காரர்களுக்கு எத்தனை ரூபாய் லாபம் என்று இதுவரை ஒரு பார்லிமெண்டு அங்கத்தினரும், பார்லிமெண்டில், ரயில்வே மந்திரியைக் கேள்வி கேட்டதாகத் தெரியவில்லை. ஆனால் இந்தச் ''சௌகரியத்தி''னால் ஒவ்வொரு மாதமும் நான் எவ்வளவு நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறேன் என்பது எனக்குத் தெரியுமாதலால், ரயில்வேக்காரர்களுக்கு நிச்சயமாக லாபம் இருக்கத்தான் வேண்டும்.

ஆனால் தந்திக்காரர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்று தெரியவில்லை. கலியாணங்கள் ரத்து ஆனாலும் சரி, கலியாணத் தேதி மாற்றப்பட்டாலும் சரி, குறிப்பிட்ட தேதியில், குறிப்பிட்ட பந்தலில், அங்கு யார் கலியாணம் நடந்து கொண்டிருந்தாலும் சரி, தந்தியைக் கொடுக்கத்தான் செய்வோம் என்று நமக்கு நஷ்டம் ஏற்படுத்தப் போகிறார்களா, அல்லது பாதிப் பணத்தைத் திருப்பிக் கொடுக்கப் போகிறார்களா?




# வெற்றித் திருநகர்:

## பாராட்டும் பரிதவிப்பும்!

''வெற்றித் திருநகரி'ன் முடிவு எனக்கும், என் நண்பர்கள் அனைவருக்கும் ஏமாற்றம் அளிப்பதாக உள்ளது. எதிர்பாராத முடிவைக் கொடுக்க வேண்டும் என்று ஆசிரியர் விரும்பி விருப்பாரேயானும் அது அவர் கலை உலகுக்கு இழைத்த ஓர் அநீதியாகும். ஏமாற்றம்; அதன் விளைவாக எழுந்த கோபம்; — அதன் பிரதிபலிப்புத்தான் இக் கடிதம். சாளுவர் முதலில் அளித்திருந்த வாக்குறுதியை மீறுவதாக உள்ளது கதையின் முடிவு. தமது வாக்குறுதியை அவர் மீறுவதன் நோக்கம் என்ன? இதற்குக் கதாசிரியர் தான் பதில் சொல்ல வேண்டும்.

புரசை
29–9–66 இர. சபாபதி

□

யாரும் எதிர்பார்க்காத முடிவு; அருமையான முடிவும்கூட.

குருக்கத்தி
29–9–66 எஸ். சுவாமிநாதன்

□

முடிவு கண்டு வருந்துகிறோம். வெற்றித் திருமகளை விசுவநாதனிடம் சாளுவர் கேட்ட வாக்கைவிட அம்மாவீரனைக் கதாசிரியர் கொன்றிருக்கலாம்.

கொரடாச்சேரி
30–9–66 திருஞான பாஸ்கரன்

□

வாக்கெனும் வாள்முனை கொண்டு வாசித்தவர்களின் நெஞ்சங்களில் என்றும் மாறாத, மறக்க முடியாத வடு உண்டாக்கிவிட்டார் சாளுவரின் வாயிலாகத் திரு அகிலன் அவர்கள். இறக்கும் தருணத்திலும் தம் வஞ்சகச் சூழ்ச்சியைக் காட்டிவிட்டார் சாளுவர். விசுவநாதன்–லட்சுமியின் பிரிவு வாசகர்களை மிகுந்த வேதனையில் ஆழ்த்தி விட்டது. அகிலனின் படைப்புக்களில் வெற்றித் திருநகரும் ஒரு வெற்றிப் படைப்பே.

பெங்களூர்
30–9–66 பெ. ச. பரமசிவன்

□

ஆரம்பம் முதல் இறுதிவரை சாளுவரைச் சூழ்ச்சியின் உருவாகவே காட்டி, சாகும் போதும் வஞ்சம் தீர்த்துக் கொள்ளும் அவருடைய பாத்திரப் படைப்பு முதன்மை பெறுகிறது. வாசகர்கள் எதிர்பார்த்த முடிவைத் தராததே ஆசிரியரின் திறமை.

சென்னை
29–9–66 மா. அன்பழகன்

□

கதையின் முடிவு எதிர்பாராதது. இதைத் தவிர்த்த வேறெந்த முடிவும் கதைக்கு இவ்வளவு உயிரூட்டியிருக்க முடியாது.

கூடூர்
30–9–66 கப. சிங்காரம்

□

லட்சுமியும் விசுவநாதனும் என்றும் எங்கள் உள்ளத்தில் நீடித்திருப்பார்கள். இந்தத் துயரமான முடிவை எங்கள் மனம் ஏற்றுக்கொள்ளாது என்பது தாங்கள் அறியாததா? இந்த இதழில் மற்ற கதைகளும் சோகமே.

பொருத்துறை
29–9–66 சி. ரஸீலா

□

விசுவநாதன் 'துங்கபத்திரை' என்பவளை மணந்ததாகப் படித்துள்ளேன். அது உண்மையா? துங்கபத்திரை என்பவள் யார்? இல்லையானால் விசுவநாதன் வாழ்நாள் முழுதும் லட்சுமிக்காக பிரமச்சாரியாகவே வாழ்ந்தாரா? இந்தச் சந்தேகத்தை நிவர்த்தி செய்யவும்.

பெரம்பூர்
29–9–66 அ. கா. இசாக்

□

சாளுவ நரசிம்மர் தாம்பரபரணி நதிக் கரையில் 1531ல் நடந்த போரில் இறந்ததாகச் சரித்திரம் கூறவில்லை.

சென்னை – 7
4-10-66 வெ. தி. பாஷியம்

□

[விசுவநாதன் லட்சுமியைத் திருமணம் செய்து கொள்ளவில்லை என்றுதான் கதை கூறுகிறதே தவிர அவன் வேறு எந்தப் பெண்ணையுமே பின்னர் மணக்கவில்லை என்று கூறவில்லை. அவர்களது பிரிவோடு கதை முடிந்து விடுகிறது.

சாளுவ நரசிம்மர் சிறை செய்யப் பெற்று அச்சுதராயரிடம் அனுப்பப் பெற்றார் என்றுதான் வரலாறு கூறுகிறது. எனினும் நான் வரலாற்று ஆசிரியன் அல்லன். வரலாற்றுக் கதாசிரியன். ஆகவே அடிப்படையான சில வரலாற்று நிகழ்ச்சிகளை மட்டும் ஏற்றுக் கொண்டு என் கற்பனைப் போக்குப்படி இதை எழுதியிருக்கிறேன்.

கதாசிரியனுக்குள்ள இந்தக் குறைந்தபட்சக் கற்பனை உரிமையை வாசக அன்பர்கள் பாராட்டுவார்கள் என நம்புகிறேன்.
— அகிலன்]

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor: T. Sadasivam.



கொள்ளை அழகுடன்
நெசவுசெய்த வாயில்கள்,
குளுமையானவை,
கனிவானவை, கவர்ச்சி
மிக்கவை, எடுப்பான
கண்நிறைந்த வண்ணங்கள்,
எழில் நிறைந்த கோல
தினுசுகள்: மனம்போல்
தேர்ந்தெடுக்கலாம்,
மதிப்புடன் விளங்கலாம்!
MAFATLAL GROUP
மபத்லால் க்ரூப்
2x2 வாயில்கள் & லிஜேக்கள்
'டெரீன்'/காட்டன் தவிர, ''டெபிலேஸ்டு'' மற்றும் ''மஃபிளேஸ்டு''
ஆகிய தரங்களிலும் கிடைக்கும்.
நியு ஷாராக் (ஷாராக்) அஹமதாபாத் • நியு ஷாராக், நடியாத் • ஸ்டேன்டர்ட், பம்பாய் • ஸ்டேன்டர்ட், (நியுசைனா) பம்பாய் • ஸ்டேன்டர்ட் தேவாஸ் • ஸாஸுன், பம்பாய் • ஸாஸுன் (நியு யூனியன்) பம்பாய் • ஸூரத் காட்டன், ஸூரத் • மபத்லால் பைன், நவ்ஸாரி
LPE Aiyars. M-99 TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 35 சதம்
தபால் செலவு தனி